# பாண்டியநாட்டு வைணவக் கோயில்களின் கலையும் கட்டடக்கலையும்

**டாக்டர் எல். மணிவண்ணன்**
எம்.ஏ(தமிழ்)., எம்.ஏ(வரலாறு)., எம்.ஃபில்.,
பிஎச்.டி., பி.எட்., டி.ஜி.டி.,
விரிவுரையாளர்,
தமிழ்த்துறை,
மாலைநேரக் கல்லூரி,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.



**J.J.பப்ளிகேஷன்ஸ்**
(Estd. 1981)
பிளாட் எண் 1, கே.கே.நகர், மதுரை-20.

பாண்டியநாட்டு வைணவக் கோயில்களின்
கலையும் கட்டடக்கலையும்





முதல் பதிப்பு : அக்டோபர் 1999

இந்நூல் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் நிதி உதவியுடன்
'சமய நூல்கள் வெளியீட்டுத் திட்டத்தின்' கீழ் வெளியிடப்படுகிறது.

*"This book is published with the financial assistance of Tirumala Tirupati Devasthanams under their scheme aid to publish religious books".*

விலை:



Printers : Vinayaga Screens, Madurai.

# அணிந்துரை

**டாக்டர் கு. சேதுராமன்,**

*பேராசிரியர்,*
*கலை வரலாறு, முருகியல் மற்றும்*
*நுண்கலைத்துறை,*
*மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,*
*மதுரை – 625021.*

தமிழகத்தில், குடைவரைக் கோயில்களையும் கட்டிட வகைக் கோயில்களையும் முதன்முதலில் கட்டத் தொடங்கியவர்கள் பல்லவப் பெருவேந்தர்களே என்று வரலாறு கூறுகின்றது. இருப்பினும், அவர்தம் சமகாலத்தவர்களான முற்காலப் பாண்டியரும், முத்தரையரும், அதியமான்களும் இத்துறையில் தங்களின் தனித்தனி முத்துக்களைப் பதித்துள்ளனர் என்பது வெள்ளிடைமலை. சோழப்பேரரசர்களும், பிற்காலப் பாண்டியரும் இவர்களைப் பின்பற்றி கட்டிடவகைக் கோயில்களை எடுப்பித்தனர். இவ்வாறு கட்டப்பட்ட கோயில்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்படக் கூடியனவாகும். முதலாவது, குகைக்கோயிலை வைத்துக் கொண்டு அதனைத் தொடர்ந்து கட்டிட வகைக் கோயிலாக விரிவுபடுத்துவதாகும். இதற்கு உதாரணமாக திருப்பரங்குன்றம் பிரதானக் கோயில், யானைமலை நரசிம்மர் குகைக்கோயில் மற்றும் திருமெய்யம் சிவன் மற்றும் விஷ்ணுகோயில்களைச் சொல்லலாம். இரண்டாவது வகையானது, குகைக்கோயிலைத் தனியே விட்டு விட்டு அதற்கருகிலோ அல்லது மலையடிவாரத்திலோ கட்டிடவகைக் கோயில் எழுப்புவது ஆகும். இம்மாதிரி அமைப்புக்களை சிவகங்கை மாவட்டம் திருமலைக் கோயிலிலும், குடிமியான்மலை, திருக்கோகரணம் மற்றும் திருநந்திக்கரை (கன்னியாகுமரி மாவட்டம்) ஆகியவற்றில் காணலாம். மூன்றாவது வகையானது குகைக்கோயில்கள் இல்லாத இடங்களில் கட்டிடவகைக் கோயில்களை எழுப்புவதாகும். இவ்வகைக் கோயில்கள் தமிழகத்தின் பட்டிதொட்டிகளிலெல்லாம் காணலாம்.

விஜயநகர – நாயக்க மன்னர்கள் முறையே கி.பி. பதினான்காம் மற்றும் பதினாறாம் நூற்றாண்டுகளில் தமிழகத்தின் ஆட்சியாளர்களாக வந்த பின்பு முந்தைய அரசவம்சத்தவர்களால் எடுப்பிக்கப்பட்ட கோயில்களை பழுதுபார்த்தும் திருத்திக் கட்டியும் விரிவுபடுத்தியும் திருப்பணி யாற்றியதோடு புதியகோயில்கள் பலவற்றையும் கட்டினர். தமிழகத்தைப் பொருத்தவரை பழுதுபடாத எந்தக் கோயிலையும் அவர்கள் திருத்திக் கட்டவில்லை. ஆனால் அவற்றினை விரிவுபடுத்தினர். ஒவ்வொருகால கட்டத்திலும் சில புதிய கட்டடக்கலைக் கூறுகள் புகுத்தப்பட்டன. தமிழகத்தின் தென்பகுதியான பாண்டியநாட்டுப் பகுதியில் முற்காலப்

பாண்டியர், சோழ பாண்டியர், பிற்காலப் பாண்டியர் காலக் கோவில்களையும் அவற்றில் பெரும்பான்மையானவை விஜயநகர–நாயக்கர் காலத்தில் விரிவுபடுத்தப்பட்டிருப்பதையும், ஒருசில கோயில்கள் திருத்திக் கட்டப்பட்டிருப்பதையும் பெருவாரியாகக் காணலாம். இவற்றைத் தனித்தனியே பகுத்து அவற்றின் கட்டடக்கலை, சிற்பக்கலை மற்றும் ஓவியக்கலைக் கூறுகளை ஆழமாக ஆராய்வது அவசியமான ஒன்றாகும். இவ்வகையில் முனைவர். லோ. மணிவண்ணன் அவர்களின் நூலான 'பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களின் கலையும், கட்டடக் கலையும்' என்பது முதற்படிக்கல் என்று சொல்லலாம்.

பாண்டியநாட்டில் உள்ள அனைத்துக் கோயில்களையும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்வது சாத்தியமில்லை என்று கருதியே இந்நூலாசிரியர் வைணவக் கோயில்களை மட்டும் அதிலும் வரலாற்றுச்சிறப்பு மிக்கனவற்றை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு விளக்கியுள்ளார். இவரது நூலில் இடம்பெற்றுள்ள கோயில்களில் மேற்கூறப்பட்ட மூன்று வகைக்கோயில் அமைப்புகளிலும் இடம்பெற்றனவாயுள்ளன. தாம் எடுத்துக்கொண்ட கோயில்களின் விமான அமைப்பினை கட்டடக்கலை என்னும் தலைப்பிலும், சிற்பக்கலை, ஓவியக்கலை ஆகியவற்றை விளக்கும்போது கோயில்களின் அனைத்துப் பகுதிகளிலும் உள்ள சிற்பங்கள் மற்றும் ஓவியங்கள் ஆகியவற்றை விளக்குவதோடு அவற்றில் அக்காலச் சமுதாய வாழ்க்கை முறைகள் மற்றும் வட்டாரப் பழக்க வழக்கங்கள் எவ்வெவ்வகையில் பின்பற்றப்பட்டுள்ளன என்பனவற்றையெல்லாம் மிக விளக்கமாக எழுதியுள்ளார். நூலில் இடம் பெறுகின்ற கோயில்களுக்குள்ளேயே ஒப்புமை முறை பின்பற்றப்பட்டுள்ளது. கட்டடக் கலையைப் பற்றிக் கூறும் போது விமானத்தை மட்டுமே எடுத்துக் கொள்ளாமல் கோயில்களின் அனைத்துப்பகுதிகளும் விளக்கப் பெற்றால் முழுமையான ஆய்வாக அமைந்திருக்கக்கூடும். இந்நூல் ஆசிரியர் தனது அடுத்த நூலுக்கான ஆய்வுப்பொருளாக பாண்டியநாட்டு வைணவக் கோயில்களின் மண்டபங்கள், பிரகாரங்கள் மற்றும் கோபுரங்கள் பற்றிய கட்டடக்கலை அமைப்பினை எடுத்துச் செய்ய வேண்டும் என்று விரும்புகின்றேன்.

இந்நூலாசிரியர், ஏராளமான கோயில்கள் பற்றி எழுதியிருப்பதோடு, அவை பற்றிய தேவையான வரைபடங்களையும், நிழற்படங்களையும் கொடுத்துள்ளார். இந்நூல் வைணவக் கோயில்கள் பற்றி தொடர்ந்து ஆய்வு செய்பவர்களுக்கு ஒரு சான்று நூலாக அமையும் என்பதில் ஐயமில்லை. இந்நூலாசிரியர் முனைவர் லோ. மணிவண்ணன் மேலும் இதுபோன்று சிறந்த நூல்களை எழுத எல்லாம்வல்ல இறையருள்கிட்ட வேண்டுமென வேண்டிக் கொண்டு, இவ்வாசிரியரை வாழ்த்துகின்றேன்.

*கு. சேதுராமன்*

# என்னுரை

பண்பாட்டுச் சின்னங்களாக விளங்கும் கோயில்கள் பற்றிய ஆய்வுகள் தமிழில் அதிக அளவில் நிகழ்த்தப்படவில்லை என்பதால் அவை தொடர்பாக ஆய்வினை மேற்கொள்ள விரும்பினேன். அவ்விருப்பத்தின் விளைவாக, விளைந்ததுவே இந்நூல். மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டத்திற்காக **"பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களின் கலையும் கட்டடக்கலையும்"** எனும் தலைப்பில் 1997 – ஆம் ஆண்டு சமர்ப்பித்த என் ஆய்வேட்டை சில மாற்றங்களுடன் நூலாக வெளியிடுகின்றேன். இவ்ஆய்வுநூல் தமிழ்நாட்டிற்கும், தமிழ் மக்களுக்கும், தமிழ்ப்பண்பாட்டிற்கும் ஏதேனும் ஒரு வகையில் அணி சேர்ப்பதாக அமையுமாயின் அதனை யான்பெற்ற பேறாகக் கருதுகின்றேன். கோயில் தொடர்பாக ஆய்வு செய்பவர்களுக்கு இந்நூல் ஓரளவிற்கேனும் பயன்படும் என நம்புகின்றேன்.

**"சான்றோனாக்கி"** நினைவில் வாழும் **என் தந்தைக்கும், "சான்றோன் எனக் கேட்ட" என் தாய்க்கும்** வார்த்தைகளால் நன்றி சொல்ல இயலாததால் அவர்களது திருப்பாதங்களை வணங்கி மகிழ்கிறேன்.

நான் ஆய்வு நிகழ்த்துங்கால் ஆய்விற்காக ஆராய்ச்சி உதவித்தொகை வழங்கியமைக்கும், ஆய்வேட்டை நூலாக வெளியிட அனுமதி அளித்தமைக்கும் **மதுரை காமராசர் பல்கலைக்கழக துணைவேந்தர், பதிவாளர்** மற்றும் **ஆட்சிக்குழு உறுப்பினர்** அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

அதுபோலவே, நான் ஆய்வு செய்தபோதும், இந்நூலை வெளியிடும்போதும் அனைத்து வழிகளிலும் உதவியதோடு பல்வேறு பணிகளுக்கிடையே இந்நூலுக்கு அணிந்துரை நல்கி என்மேல் என்றும் அன்பு பாராட்டி வரும், அன்பிற்கும் மரியாதைக்கும் உரிய எனது ஆய்வு நெறியாளரும் ம.கா. பல்கலைக்கழகக் கலைவரலாற்றுத்துறைப் பேராசிரியருமான **டாக்டர் கு. சேதுராமன்** அவர்களுக்கு என்றும் கடப்பாடுடையேன்.

ஆய்வின்போது அறிய பல கருத்துக்களை வழங்கி ஊக்கப்படுத்தியும் எனது முன்னேற்றத்தில் என்றும் அக்கரைகொண்டு இதுபோல் இன்னும் பல நூல்களை நான் வெளியிட வேண்டும் என விருப்பம் கொண்ட ம.கா. பல்கலைக்கழகக் கலைவரலாற்றுத் துறையின் முன்னாள் தலைவர்கள் **டாக்டர் ஆர். வெங்கட்ராமன், டாக்டர் கோ.விசயவேணுகோபால்** ஆகியோருக்கு என் நன்றியறிதலைத் தெரிவித்து மகிழ்கின்றேன்.

கள ஆய்வில் உதவிய நண்பர் **சு.கண்ணன்** மற்றும் அறிய செய்திகள் அளித்து ஊக்குவித்த தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையைச் சேர்ந்த **டாக்டர் வெ.வேதாசலம்** ஆகியோருக்கு என்றும் என் நன்றி உரியது.

இந்நூலை வெளியிடுவதற்கு நிதியுதவி பெற என்னை திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு ஆற்றுப்படுத்திய, என்மேல் அன்புகொண்ட

ம.கா.பல்கலைக்கழகத் தமிழியற் பள்ளியின் தலைவரும், ஒருங்கிணைப்பாளருமான பேராசிரியர் **டாக்டர் சு. வேங்கடராமன்** அவர்களுக்கு என் நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலினை வெளியிட நிதியுதவி செய்த **திருமலை திருப்பதி தேவஸ்தான செயலாட்சித் தலைவர் டாக்டர் ஐ.வி. சுப்பாராவ் இ.ஆ.ப.,** அவர்களுக்கும், சப்தகிரி (தமிழ்) மாத இதழின் ஆசிரியர் டாக்டர் **என்.எஸ்.ராமமூர்த்தி,** அவர்களுக்கும், துணை ஆசிரியர் திரு. **வ.கோ.சொக்கலிங்கம் எம்.ஏ.,** அவர்களுக்கும் மற்றும் **திருமலை திருப்பதி தேவஸ்தானத்தைச் சேர்ந்த அனைத்து நிர்வாகத்தினருக்கும்** மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வு மேற்கொண்ட கோயில்களில் புகைப்படம் எடுப்பதற்கும், ஆய்வு செய்வதற்கும் அனுமதி அளித்த **இந்துசமய அறநிலையத்துறைக்கும்,** ஆய்விற்குட்பட்ட **கோயில்களின் நிர்வாகத்தினர் அனைவருக்கும்,** புகைப்படங்கள் அளித்து உதவிய **பாண்டிச்சேரி பிரெஞ்சு இந்தியவியல் கழகத்தார்க்கும்,** ஆய்வு தொடர்பாக நூலகங்களைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதியளித்த **அனைத்து நூல் நிலையங்களுக்கும்** மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஓர் ஆய்வு சிறப்பாக அமைய வேண்டுமென்றால் அமைதியான சூழலும், நல்ல மனநிலையும் தேவை. நான் இவ் ஆய்வினை மேற்கொண்டபோதும் இவ் ஆய்வு நூலினை வெளியிடும்போதும் அத்தகைய சூழலை எனக்கு உருவாக்கிக் கொடுத்து என்மேல் அன்பு செலுத்தி வரும் **திரு. என். பாலகிருஷ்ணன் – குணசுந்தரி, திரு. இரா. வீரப்பெருமாள் – இராஜாமணி, திரு. எம்.என். இரவிச்சந்திரன் – பாமா** ஆகியோருக்கு என்றும் கடப்பாடுடையேன்.

இந்நூலினை வெளியிட பெரிதும் ஊக்குவித்த என் அன்பிற்கினிய தமிழ்நாடு தொழில்நுட்பக் கல்லூரி கணிதவியல்துறைப் பேராசிரியர் **திரு.சுப.ஜானகிராமன்** அவர்களுக்கு என்றும் கடப்பாடுடையேன்.

இந்நூலின்கண் அச்சுப்பிழை திருத்தி உதவிய் பேராசிரியர் **மு.குமாரசாமி** அவர்களுக்கு என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு தேவையான வரைபடங்களை வரைந்து கொடுத்த நண்பர் **திரு. இரவிக்குமார்** அவர்களுக்கும், இந்நூலினைச் சிறந்த முறையில் வெளியிட்ட மதுரை **J.J. பதிப்பகத்தாருக்கும்,** சிறந்த முறையில் அச்சுவார்த்த **குரு கணிப்பான்** மையத்தார்க்கும், சிறந்தமுறையில் அச்சிட்ட **விநாயகா அச்சகத்தார்க்கும்** மிக்க நன்றி.

மதுரை. **எல். மணிவண்ணன்**
10–10–1999.

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| மொ.ஆ. | – | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| தொ.ஆ. | – | தொகுப்பு ஆசிரியர் |
| ஆ.இ. | – | ஆசிரியர் இல்லை |
| ஆ.கு | – | ஆசிரியர் குழு |
| அ.கு.எண் | – | அடிக்குறிப்பு எண் |
| நி.ப.எண் | – | நிழற்பட எண் |
| வ. ப. எண் | – | வரைப்பட எண் |
| புறம் | – | புறநானூறு |
| Vol. | – | Volume |
| Pl. | – | Plates |
| Rep. | – | Reprint |
| S.I.I. | – | South Indian Inscriptions |
| A.R.E. | – | Annual Report on Epigraphy |
| M.E.R. | – | Madras Epigraphical Reports |
| P.S.I. | – | Pudukottai State Inscriptions |

# முன்னுரை

கோயில்கள் சமூகத்தோடு நெருங்கிய தொடர்புடைய நிறுவனங்களாக இயங்கி வந்துள்ளன. கோயில்கள் இறைவழிபாட்டிற்கான ஓர் இடமாக மட்டுமின்றி பண்பாட்டின் கலைக் கூடங்களாகவும், அரசியல், சமூகம், பொருளாதாரம், ஆகியவற்றின் வரலாற்றினை அறிந்துகொள்ள உதவும் சான்றாதாரங்களாகவும் தொன்று தொட்டு விளங்கி வந்து கொண்டுள்ளன.

இன்றைய அறிவியல் உலகில் அவசரமான வாழ்வு வாழ்ந்து கொண்டிருக்கும் மனிதனுக்கு ஓய்வு நேரம் கிடைப்பது குறைவே. கிடைக்கும் குறைந்த ஓய்வு நேரத்தையும் இனிமையாகத் தனது வீட்டிலிருந்தே பல்வேறு சாதனங்கள் மூலம் கண்டுகழிக்க இயலும். ஆனால், அறிவியல் கண்டுபிடிப்புக்கள் இல்லாத அக்காலத்தில் மனிதன் பொழுதுபோக்க வேண்டுமெனில் கோயில்களைத்தான் நாடினான். ஏனெனில், கோயில்களில்தான் பலவிதமான கலைகளும் நிகழ்த்தப்பட்டன. தினமும், நாட்டியம், இசை, இராமாயண, மகாபாரத கதை சொல்லுதல் அரையர் சேவை நிகழ்த்துதல் முதலிய நிகழ்ச்சிகள் நடந்து கொண்டே இருந்துள்ளன. இத்தகு நிகழ்ச்சிகளை நடத்துபவர்கள் இல்லாத போதும் நிகழ்ச்சிகள் நடப்பன போன்ற ஒரு தோற்றத்தை அக்கோயில்களில் இடம்பெறும் சிற்பக்கலை, ஓவியக்கலை ஆகியவற்றின் மூலம் உருவாக்கினர்.

திருவிழாக்களில் பெரும்பகுதி கோயில்களோடு தொடர்புடையன வாக இருந்தமையால் கோயில்கள் விரிவாக்கம் அடைந்தன. கிராம சமுதாயக் கூட்டங்கள், அரங்கேற்றங்கள் முதலியன கோயில்களிலேயே நடைபெற்றன. சுருங்கச் சொன்னால் கோயில்கள் வேறு, சமுதாயம் வேறு என்று பிரித்துப் பார்க்க முடியாத நிலை இருந்து வந்தது. இன்றுவரை அவ்வாறே விளங்கியும் வருகின்றன.

கோயில்களோடு கலைகள் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததால் அத்தகைய கோயிற் கலைகள் பற்றி விளக்க இந்நூலில் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஒரு குறிப்பிட்ட பகுதியில் இடம் பெறும் கோயில்கள் பலவற்றை ஒப்பிட்டுப் பார்ப்பதன் மூலம் குறிப்பிட்ட அப்பகுதிக்கே உரிய கலைப்பாணி, வட்டாரப் பழக்கவழக்கங்கள், குறிப்பிட்ட அரச பரம்பரையினருக்கே உரிய கலைப்பாணி முதலியவற்றைத் தெளிவாக அறியலாம். எனவே, இந்நூலில் பாண்டியநாட்டு வைணவக் கோயில்களை எடுத்துக் கொண்டு அக்கோயில்களின் கலைகள் ஒப்பீட்டு முறையில் விளக்கப்பட்டுள்ளன. பாண்டியநாட்டு வைணவக்கோயில்களைப் பிற கோயில்களோடு

ஒப்பிடாது. அவற்றிற்குள்ளேயே அதன் கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை ஆகியன ஒப்பிடப்படுகின்றன.

பாண்டியநாட்டில் இடம்பெற்றுள்ள பல வைணவக் கோயில்கள் சோழ-பாண்டியர், பிற்காலப் பாண்டியர் மற்றும் விசயநகர-நாயக்க மன்னர்களால் கட்டப்பட்டு விரிவுபடுத்தப்பட்டுமுள்ளன.

அக்கட்டுமானக் கோயில்களுக்கு அடிப்படையாய் அமைந்தவை குடைவரைக் கோயில்கள் ஆகும். எனவே, பாண்டிய நாட்டில் உள்ள வைணவக் குடைவரைக் கோயில்களின் கட்டடக்கலை, சிற்பக்கலை, ஆகியவற்றை அறிந்து அவை கட்டுமானக் கோயில்களில் பெற்றுள்ள தாக்கத்தையும் விமானத்தின் கூறுகளையும் இந்நூலில் கூறியுள்ளோம்.

கட்டுமானக் கோயில்களில் இடம்பெறும் மண்டபச்சிற்பங்கள், அவற்றின் அமைப்புமுறை, சிறப்புக்கள், முதலியவற்றை வெளிக் கொணர்வதும் இங்கு அவசியமாகிறது.

கோயில்களில் இடம் பெறும் ஓவியங்கள், அவற்றின் பாணி, ஆடை அலங்காரங்கள் ஓவியத்தால் வெளிப்படும் அக்காலச் சமுதாயப் பழக்கவழக்கங்கள், பண்பாடு, இன்னபிற சிறப்புக்ள் பற்றி அறிவதும் முக்கிய நோக்கமாகும்.

கோயில்களில் இடம்பெறும் கல்வெட்டுக்கள், மற்றும் கோயிற்கட்டடக்கலைப்பாணி ஆகியவற்றை வைத்து அக்கோயில்களின் காலத்தை அறிவதும் அவசியமாகிறது.

## பாண்டியநாட்டு எல்லை

இங்கு பாண்டிய நாடு என்பது எந்தெந்த எல்லைக்குட்பட்டது என்பதைக் கூற வேண்டியது அவசியமாகிறது. அன்றைய தமிழகம் சேர, சோழ, பாண்டிய, பல்லவ நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. ஆனால், இந்நாடுகளின் எல்லைப்பரப்புக்கள் எப்பொழுதும் ஒரே மாதிரியாக இருந்ததில்லை. ஆட்சியாளர்களைப் பொறுத்து அது மாறிக் கொண்டே வந்துள்ளன. இந்நாடுகளில் வலிமை மிகுந்த அரசவம்சம் பெரும்பகுதியைத் தன் ஆளுகையின் கீழ்க் கொண்டுவந்துள்ளது என்பது வழக்கமாக இருந்திருக்கிறது. உதாரணமாக, பல்லவர் மேலோங்கி இருந்த போது பாண்டியரைத் திரை செலுத்துவோராக ஆக்கியிருந்தனர். சோழப் பேரரசு மேலோங்கி இருந்த நிலையில் பாண்டியநாடு அடிமைப் பட்டிருந்தது. பின்னர், பாண்டியரின் கை ஓங்கிய போது சோழவம்சம் இல்லாமல் போனது. இம்மாதிரியான மாற்றங்கள் தொடர்ந்து இருந்து வந்த காரணத்தால் ஒரு வம்சத்தினுடைய ஆட்சி எல்லை இதுதான் என்று அறுதியிட்டுக் கூற முடியவில்லை. எனவே, இங்கு பாண்டிய

நாட்டின் வட எல்லையாகத் திருச்சியையும், தென் எல்லையாக திருநெல்வேலி மற்றும் தூத்துக்குடி ஆகிய மாவட்டங்களையும் கொண்டிருக்கிறோம். இவற்றிற்கு உட்பட்ட எல்லைப்பகுதியில் உள்ள கோயில்கள் இந்நூலில் விளக்கப்பெறுகின்றன.

## குடைவரைக் கோயில்களில்

| | | | |
|---|---|---|---|
| 1. | யானைமலை | – | நரசிங்கப்பெருமாள் குடைவரைக்கோயில் |
| 2. | திருத்தங்கல் | – | பள்ளிகொண்டபெருமாள் குடைவரைக்கோயில் |
| 3. | திருமெய்யம் | – | அழகியமெய்யன் குடைவரைக்கோயில் |
| 4. | நார்த்தாமலை | – | திருமால் குடைவரைக்கோயில் |
| 5. | மலையடிப்பட்டி | – | பள்ளிகொண்டபெருமாள் குடைவரைக்கோயில் |
| 6. | திருச்சி | – | கீழ்க்குடைவரைக் கோயில் |
| 7. | திருப்பரங்குன்றம் | – | குடைவரைக்கோயில் (இன்றைய முருகன்கோயில்) |
| 8. | சொக்கம்பட்டி | – | குடைவரைக்கோயில் |

ஆகிய வைணவக் குடைவரைக் கோயில்களும் வைணவக் கட்டுமானக் கோயில்களில்

| | | | |
|---|---|---|---|
| 1. | மதுரை | – | கூடலழகர்கோயில் |
| 2. | திருமோகூர் | – | காளமேகப்பெருமாள்கோயில் |
| 3. | அழகர்கோயில் | – | கள்ளழகர்கோயில் |
| 4. | திருமெய்யம் | – | சத்யகிரிநாதன் கோயில் |
| 5. | திருக்கோட்டியூர் | – | உரகமெல்லணையான்கோயில் |
| 6. | திருப்புல்லாணி | – | கல்யாண செகந்நாதர்கோயில் |
| 7. | திருத்தங்கல் | – | நின்றநாராயணப் பெருமாள் கோயில் |
| 8. | ஸ்ரீவில்லிப்புத்தூர் | – | வடபத்ரசாயிகோயில் |
| 9. | ஸ்ரீவில்லிப்புத்தூர் | – | ஆண்டாள்கோயில் |
| 10. | திருக்குறுங்குடி | – | நின்றநம்பி கோயில் |

| | | | |
|---|---|---|---|
| 11. | நாங்குனேரி | – | வானமாமலை கோயில் |
| 12. | மன்னார்கோயில் | – | இராசகோபாலசுவாமிகோயில் |
| 13. | தாடிக்கொம்பு | – | சௌந்தரராசப்பெருமாள் கோயில் |
| 14. | ஸ்ரீவைகுண்டம் | – | வைகுண்டநாதன் கோயில் |
| 15. | வரகுணமங்கை | – | விசயாசனப்பெருமாள்கோயில் |
| 16. | திருப்புளியங்குடி | – | காய்சின வேந்தன் கோயில் |
| 17. | பெருங்குளம் | – | ஸ்ரீநிவாசன் கோயில் |
| 18. | தொலைவில்லி மங்கலம் | – | அரவிந்தலோசனன் கோயில் |
| 19. | தொலைவில்லி மங்கலம் | – | ஸ்ரீநிவாசன் கோயில் |
| 20. | திருக்கோளூர் | – | வைத்தமாநிதிப்பெருமாள் கோயில் |
| 21. | தென்திருப்பேரை | – | மகர நெருங்குழைக்காதன் கோயில் |
| 22. | ஆழ்வார்திருநகரி | – | ஆதிநாதர்கோயில் |
| 23. | கிருஷ்ணாபுரம் | – | திருவேங்கடநாதன் கோயில் |

ஆகிய கோயில்களும் இந்நூலில் ஆராயப்பட்டுள்ளன.

## மூலங்கள்

### *முதன்மை ஆதாரங்கள்*

*கள ஆய்வே முதன்மை ஆதாரமாகக் கொள்ளப்படுகிறது. மேலும், ஆய்வுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள கோயில்களில் இடம்பெறும் கல்வெட்டுக்கள் கோயில் பற்றிய தலபுராணங்கள், இலக்கியங்கள், ஆழ்வார்களது பாடல்கள் ஆகியவனவும் முதன்மை ஆதாரங்களாக இங்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.*

### *துணைமை ஆதாரங்கள்*

கோயில்கள் தொடர்பான நூல்கள், கட்டுரைகள், தமிழக வரலாற்று நூல்கள், கோயில்கள் தொடர்பான ஆய்வேடுகள், நாளிதழ்களில் வெளிவரும் கோயில் பற்றிய சிறப்புக் கட்டுரைகள் முதலியன துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

மேற்கண்ட எட்டு குடைவரைக் கோயில்களும், இருபத்தி மூன்று கட்டுமானக் கோயில்களும் ஆக முப்பத்தியோரு கோயில்களின்காலம், கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை ஆகியன இந்நூலில் ஆறு இயல்களில் விளக்கப்பெறுகின்றன.

1. வைணவக் குடைவரைக் கோயில்கள்.
2. கோயில்களின் காலம்
3. கட்டடக்கலை
4. சிற்பக் கலை
5. ஓவியக் கலை
6. தொகுப்புரை

## வைணவக் குடைவரைக் கோயில்கள்

குடைவரைக் கோயில்களே கட்டுமானக் கோயில்களுக்கு ஆதாரங்களாக விளங்குவதால் குடைவரைக் கோயில்கள் பற்றி அறிவது அவசியமாகிறது. எனவே, பாண்டிய நாட்டில் உள்ள வைணவக் குடைவரைக் கோயில்கள் பற்றி முதலாவதாக இந்நூலில் விளக்கப்படுகிறது. இவ்வியலில், எடுத்துக் கொள்ளப்பட்ட குடைவரைக் கோயில்களின் தரை அமைப்பு, திசை அமைப்பு, காலம், கட்டடக்கலை, சிற்ப அமைப்பு முதலியன ஒப்பீட்டு முறையில் விளக்கப்பட்டுள்ளன.

## கோயில்களின் காலம்

மேற்கண்ட கட்டுமானக் கோயில்களின் காலத்தை வைத்தே கோயில்களின் கலை மற்றும் கட்டடக் கலையின் வளர்ச்சி நிலையைக் கணக்கிட முடியும். எனவே, கோயில்களின் காலத்தைக் காண்பது அவசியமாகிறது. கோயில்களின் காலம் எனும் இவ்விரண்டாம் இயலில் அவற்றின் காலத்தை கல்வெட்டுக்கள், கட்டடக்கலை அமைப்பு மற்றும் கலைவரலாற்று அறிஞர்களின் முடிவுகள் ஆகியவற்றின் துணை கொண்டு நிறுவப்பட்டுள்ளன. குடைவரைக் கோயில்களின் காலத்தை வைணவக் குடைவரைக் கோயில்கள் எனும் இயலிலேயே விளக்கியுள்ளோம்.

## கட்டடக்கலை

கட்டடக்கலை எனும் மூன்றாம் இயலில் பாண்டிய நாட்டு வைணவக் கட்டுமானக் கோயில்களில் அவற்றின் உபானம் முதல் கலசம் வரையிலான விமானத்தின் பகுதிகள் மட்டும் ஒப்பீட்டுமுறையில் விளக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் கோயில்கள் எந்த அரச பரம்பரையினரால் கட்டப்பட்டுள்ளன. குறிப்பிட்ட அரசபரம்பரை யினர் அவர்களுக்கே உரிய கலைப்பாணியைப் பின்பற்றியுள்ளனரா? அல்லது அவர்களுக்கு முன்னைய அரசபரம்பரையினரின் கலைப்

பாணியையும் பின்பற்றியுள்ளனரா? என்பது பற்றியும், கட்டடக் கலையின் வளர்ச்சி நிலை பற்றியும் கூறப்பட்டுள்ளது. மேலும், கட்டடக் கலை உறுப்புக்கள் ஒவ்வொன்றின் அமைப்பு, விமான தளங்கள், அவற்றில் இடம் பெறும் விமான தேவதைகளின் அமைப்பு, அஷ்டாங்க விமான அமைப்பு ஆகியன பற்றி இவ் இயலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

## சிற்பக்கலை

நான்காம் இயலில் மேற்கண்ட கோயில்களில் இடம்பெறும் விசய நகர- நாயக்கர் காலத்தைச் சேர்ந்த மண்டபங்களில் காணப்படும் தூண் சிற்பங்கள், அவற்றின் அமைப்பு முறை, அச்சிற்பங்களில் கையாளப்பட்டுள்ள கருத்தமைதிகள், சிற்பங்களில் சமயம் மற்றும் சமுதாயத்தின் தாக்கம் ஆகியன பற்றியும் கோயில் விமானத்தில் அமைந்துள்ள உபபீடம் மற்றும் அதிட்டானங்களில் இடம் பெறும் சிற்பங்கள், அவற்றின் கருத்தமைதிகள், உத்திகள் முதலியன பற்றியும் விளக்கப்படுவதோடு, கோபுரத்தில் இடம்பெறும் சிற்பங்கள் அவற்றின் வைப்புமுறை, உத்திகள் போன்றவை பற்றியும் விளக்கப்படுகின்றன.

## ஓவியக்கலை

ஓவியக்கலை எனும் ஐந்தாம் இயல் மேற்கண்ட கோயில்களில், விசயநகர-நாயக்கர் காலத்து ஓவியங்கள், அவ் ஓவியங்களில் கையாளப்பட்டுள்ள அணிகலன்கள், ஆடை அலங்காரங்கள், உத்திகள் மற்றும் அவற்றின் சிறப்புக்கள் முதலியன பற்றி கூறுகின்றது.

இறுதியாக, இதுவரை கண்ட முடிவுகளும் புதிய செய்திகளும் தொகுப்புரையாகத் தரப்பட்டுள்ளன. இந்நூலில் தேவையான இடங்களில் வரைபடங்களும், நூலின் இறுதியில் நிழற்படங்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

# 1

# வைணவக் குடைவரைக் கோயில்கள்

## முன்னுரை

கோயில் என்பது அரசன் வாழும் இல்லம் அல்லது இறைவன் உறைகின்ற இடம் என்பதாகும். 'கோ' என்பது அரசனையும், இறைவனையும் குறிக்கும். கோயில்களின் வளர்ச்சியினைப் பார்க்கும்போது, மனிதன் தனது உறைவிடத்தைப் போன்றே தன்னால் வணங்கப்படும் இறைவனுக்கும் உறைவிடத்தை அமைக்கத் தொடங்கினான். அத்தோடு தனது உறைவிடத்தின் அமைப்பைத் தனக்கு வசதி வரும் போது மாற்றியமைத்தது போலவே இறைவனின் உறைவிட அமைப்பை மக்கட் பெருக்கத்தினாலும் விழாக்களின் விரிவாக்கத்தினாலும் பொருளாதார வளர்ச்சியினாலும் அவ்வப்போது மாற்றியமைத்தான். அவையே இன்று நாம் காணும் பெருங்கோயில் களாகத் திகழ்கின்றன என்பதை அறிய முடிகிறது. மனிதன் முதலில் குகைகளில் வாழ்ந்தான். பின் வீடுகள் கட்டலானான். அதுபோன்றே துவக்கத்தில் நிரந்தரமான கோயில்கள் பாறைகளைக் குடைந்து அமைக்கப்பட்டன. பின்னாளில் கோயில்கள் கற்களால் கட்டப்பட்டன. மிகவும் பிற்காலத்தில் கர்ப்பகிருகத்தின் கீழ்ப்பகுதி கற்களாலும் மேல்ப்பகுதி சுதையாலும் ஆயின.

இந்தியாவைப் பொறுத்தவரை வரலாற்றுக்கு முந்திய பழங்குடியினர் இறந்துபட்டவர்களையும் ஆவிகளையும் மரங்களையும் நதிகளையும் மலைகளையும் வணங்கினர். இதனை அடுத்து சிந்துசமவெளி நாகரிக காலத்தில் கோயில்கள் தனியே கட்டப்பட்டதற்கான சுவடுகள் இதுவரை தெரியவில்லை. ஆனால் ஒவ்வொரு வீட்டிலும் தெய்வ உருவங்கள் வைத்து வழிபடப்பட்டன. இதனை அடுத்து வந்த வேத காலத்தில் முந்திய நாகரிகத்தின் சுவடுகள் காணப்படவில்லை. வேதகால மக்கள் தங்களுக்கு உரிய கிராமிய நாகரிகத்தைப் பின்பற்றினர். இவர்கள் காலத்தில் வீடுகள் முந்தைய நாகரிகத்தைப் போன்று சுட்ட செங்கற்களால் கட்டப்படவில்லை. மரம், புல் போன்றவற்றால் அமைக்கப்பட்ட கூரைகளே இவர்களது வீடுகளாக இருந்தன. இவர்கள் காலத்திலும் கோயில்கள் கட்டப்படவில்லை. ஏனெனில் இவர்கள் யாகங்கள் செய்வதில் கவனம் செலுத்தினர். சமசதுர (square) யாகபீடங்கள் (Sacrificial altars) அமைக்கப்பட்டன. மதகுருமார்கள் (priestly class) சமயக் குழுக்களை ஏற்படுத்தினர். இதன்படி மூன்று அடிப்படை

வடிவமைப்புக்களை உருவாக்கினர். அவை சமசதுரம், வட்டம், முக்கோணம் என்பனவாகும். அவற்றில் சமசதுரம் தேவலோகத்தையும் (விண்ணுலகத்தையும்) கடவுளையும் குறிப்பதாகவும், வட்டம் பித்ருக்களை (இறந்தவர்களை) அல்லது பித்ருலோகத்தைக் குறிப்பதாகவும், முக்கோணம் அக்னி அல்லது மண்ணுலகைக் குறிப்பதாகவும் கொள்ளலாம்.

"வட்டம் அல்லது வளைவு வாழ்க்கையின் வளர்ச்சியையும் இயக்கத்தையும் சார்ந்தது எனவும், சமச் சதுரம் நியதியையும், வளரும் வாழ்க்கையின் இறுதி முடிவு அதன் அமைப்பு மற்றும் பிறப்புக்கும் இறப்புக்கும் அப்பாற்பட்ட முழுநிறைவு நிலையையும் குறிப்பன" என ஸ்டெல்லா க்ரைமரிஷ்ச் கூறுகின்றார். வேதகாலத்தின் யாகக் கூடங்களிலிருந்தே இந்தியக் கட்டடக் கலையின் சதுரமும், வட்டமும் ஒருங்கிணைக்கப்பட்டு அமைக்கப்பட்டன. இதுவே கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலான இந்தியக் கட்டடக் கலை வளர்ச்சியின் அடிப்படையாக அமைந்திருக்க வேண்டும். அதன் பின்பு இன்றும் இதையே அடிப்படையாக வைத்துக் கோயில்கள் கட்டப்படுகின்றன.

வேதகாலத்திற்குப்பின் பல்வேறு கோயில்கள், சிற்பங்கள் ஆகியவை அழிந்து படக்கூடிய உலோகம், மரம், சுண்ணாம்பு ஆகியவற்றால் எழுப்பப்பட்டிருக்கலாம். எழுப்பப்பட்டதற்கான இலக்கியச் சான்றுகள் கிடைக்கின்றன. மெகஸ்தனிஸின் இண்டிகா மற்றும் பல வெளிநாட்டுச் செய்திகள் மூலம் பாடலிபுத்திரத்திலும் கும்ருகாரிலும் குசி நகரத்திலும் சந்திரகுப்த மௌரியர் காலத்து மரத்தாலான அரண்மனைகள் இருந்தன என்று தெரியவந்துள்ளது. இவற்றில் மிகச்சில பகுதிகளே தொல்லியல் ஆய்வாளருக்குக் கிடைத்துள்ளன.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டே இந்தியக் கட்டடக்கலை மற்றும் சிற்பக்கலை வரலாற்றின் உண்மையான துவக்ககாலம் என்பதில் ஐயமில்லை. இக்காலத்தில் குடிசைகளும் மரக்கட்டடங்களும் கற்கட்டடங்களாக மாறின. இதற்குக் காரணம் மௌரியர் காலத்தில் இருந்த வெளிநாட்டவரின் தொடர்பேயாகும். ஏனெனில் இந்தியர்கள் கற்களையும் பாறைகளையும் இறந்தவர்களின் நினைவுச் சின்னங்களுக்காகப் பயன்படுத்தினர்.[2] கிரேக்க ரோமானியக் கட்டடக்கலை மற்றும் சிற்பக்கலையில் கற்கள் பயன்படுத்தப்படுவதைக் கண்ணுற்ற அசோகர் இங்கும் அழிந்து படக்கூடிய பொருட்களை விடுத்து கற்களைப் பயன்படுத்தலானார். இதன் பயனே இன்று நமக்குக் கிடைக்கும் அசோகர் தம் தூண்களும் குடைவரைக் கோயில்களுமாகும். அசோகரும் அவரது பேரன் தசரதனும் முறையே கயாவுக்கருகே பராபர் குன்றுகளிலும் நாகார்ச்சுனா குன்றுகளிலும் அசீவகத் துறவிகளுக்காக சுமார் எட்டுக் குகைகளை அமைத்திருந்தனர். இவையே இந்தியாவில் முதன்முதலாக அமைக்கப்பட்ட கற்கோயில்களாம். இவர்களால் அமைக்கப்பட்ட குடைவரைக் கோயில்கள் முன்பிருந்த குடிசைகள்

மற்றும் மரக்கட்டிடங்களின் மாதிரிகளாக அமைக்கப்பட்டன. இதைத் தொடர்ந்து அசோகரால் ஆதரிக்கப்பட்ட பௌத்தர்கள், சுங்கர்கள், வாகாடகர்கள், சாதவாகனர்கள், சாளுக்கியர்கள் முதலானோர் தொடர்ந்து சைத்யங்கள் எனும் குடைவரைகளை அமைத்து அவற்றிற்குள்ளே ஸ்தூபிகளையும் விகாரங்களையும் உருவாக்கினர். இவை கி.பி. 7–ஆம் நூற்றாண்டு வரை தொடர்ந்தது. இவற்றிடையே பௌத்தர்களது குடைவரைகளைப் போன்றே இந்துக்களும், சமணரும் குடைவரைக் கோயில்களை அமைக்க முற்பட்டனர். இந்து குடைவரைகளில் தொன்மையானது குப்தர்களால் உதயகிரியில் அமைக்கப்பட்ட குடைவரைக் கோயில் எனலாம். இதனைத் தொடர்ந்து தென்னிந்தியாவிலும் குடைவரைக் கோயில்கள் தோன்றின. அப்பணி கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டுவரை தொடர்ந்தது. பாதாமி, எல்லோரா முதலியவை தக்காணப் பகுதியில் அமைக்கப்பட்டுள்ள முக்கியமான குடைவரைக் கோயில்களாகும்.

## தமிழகத்தில் குடைவரைக் கோயில்களின் தோற்றம்

தக்காணத்தை ஆண்ட வாதாபிச் சாளுக்கியருக்கும் பல்லவர்களுக்கும் ஏற்பட்ட அரசியல் மற்றும் போர் ஆகியவற்றின் தொடர்பினால் தமிழகத்தில் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் பல்லவர்களால் குடைவரைக் கோயில்கள் தோற்றுவிக்கப்பட்டன. சாளுக்கிய அரசன் மங்களேசன் குடைவரை மரபினை வாதாபியில் துவக்கிய சிறிது காலத்திற்குள் முதலாம் மகேந்திரவர்மன் (கி.பி. 600 – 615 – 630) மண்டகப்பட்டு எனுமிடத்தில் முதன்முதலாக குடைவரையை அமைத்தான். தமிழகத்தில் நமக்குக் கிடைக்கும் முதல் குடைவரையும் கோயிலும் இதுவேயாகும். அவனது குகைக்கோயில்கள் மாமண்டூர், மகேந்திரவாடி, சீயமங்களம், பனைமலை, திருச்சி, திருக்கழுக்குன்றம், பல்லாவரம், வல்லம் போன்ற இடங்களில் கிடைக்கின்றன. இவனது காலத்து குடைவரைத் தூண்கள் பருத்தும் குட்டையாகவும் அமைக்கப்பட்டிருந்தன. இவை செங்குத்தாக சதுரம், எண்பட்டை, சதுரம் என்று மூன்று பகுதிகளாக பிரிக்கப்பட்டிருக்கும். தூணின் சதுரப்பகுதியில் விரிந்த தாமரை வடிவம் (lotus medallion) அமைக்கப்பட்டிருக்கும். தூணின் மேற்பகுதியில் உள்ள போதிகைகள் பெரும்பாலும் கடல் அலைகள் போன்ற வளைகோடுகளைக் கொண்ட (தரங்க) போதிகைகளாகவோ, அவையன்றிச் சாதாரணமாகவோ அமைக்கப்பட்டிருக்கும். இவனது குகைக்கோயில்களில் முகப்பின் பக்கவாட்டில் இருகைகளுடைய துவாரபாலகர் சிற்பங்களைத் தவிர வேறு சிற்பங்கள் இடம் பெறவில்லை[3]. கருவறைகளில் தெய்வங்களின் உருவங்களோ அவற்றை வைப்பதற்கான பீடங்களோ அமைக்கப் பட்டிருக்காது. ஆனால் இறையுரு வைப்பதற்கான குழிகள் மட்டும் வெட்டப்பட்டிருக்கும். ஒருவேளை, இறந்தவர்களுடன் தொடர்பு படுத்தப்படும் கற்களைக் கோயிலாகக் குடைய இடம் கொடுத்த

மகேந்திரவர்மனது மனம் இறைவனின் உருவத்தைச் செதுக்கத் தயங்கியிருக்க வேண்டும். அதனால்தான் துவாரபாலகர் சிற்பங்களைச் செதுக்கிய அவன் இறையுருவங்களைச் செதுக்காமல் விட்டு விட்டான் என்று எண்ணத் தோன்றுகிறது.

மகேந்திரவர்மனுக்கு அடுத்து வந்த நரசிம்மவர்மன் (கி.பி. 630 – 668) காலத்துக் குடைவரைக் கோயில்களின் அதிட்டானத்தில் அதற்குரிய அனைத்து அலங்காரப் பகுதிகளும் செதுக்கப்பட்டன. தூண்கள் மெல்லியதாகவும் உயரமாகவும் அமைக்கப்பட்டு அவற்றின் அடிப்பகுதியில் அமர்ந்த நிலையிலான சிங்கங்கள் இடம் பெற்றன. சில அலங்கார வேலைப்பாடுகள் அத்தூண்களில் அமைக்கப்பட்டன. குடைவரையின் கூரை முகப்பில் (facade) கூடுகள், கபோதம், பூதவரி போன்றவை செதுக்கப்பட்டன. குடைவரையினுள் துவாரபாலகர் சிற்பங்களோடு வேறு பல புடைப்புச் சிற்பங்களும் மாமல்லன் காலத்தில் செதுக்கப்பட்டன. இவர்களைப் பின்பற்றி தமிழகத்தின் வேறு பகுதிகளிலும் பாண்டியர், முத்தரையர் மற்றும் அதியமான் மன்னர்களால் பல குடைவரைகள் அமைக்கப்பட்டன.

## பாண்டியரது குடைவரைக் கோயில்கள்

பல்லவரது சமகாலத்தவரான முற்காலப் பாண்டியர், பல்லவருடன் கொண்டிருந்த தொடர்பினால் பல்லவர்களைப் போலவே பாண்டிய நாட்டிலும் குடைவரைக் கோயில்களை அமைத்தனர். இக்கோயில்கள் பல்லவரது பாணியைப் பின்பற்றியோ அதில் சிறிய மாற்றங்களுடனோ அமைந்தன. பல்லவரது குடைவரைகள் அனைத்தும் தொண்டை நாட்டில் அமைந்தாலும் மகேந்திரவர்ம பல்லவரது காலக்குடைவரை மட்டும் சோழ நாட்டில் (திருச்சியில்) அமைக்கப்பட்டது என்பதை அறிகிறோம். அதுபோலவே பாண்டியர் குடைவரைக் கோயில்களைப் பெரும்பாண்மையாகப் பாண்டிய நாட்டில் அமைத்திருந்தாலும் திருச்சியில் (கீழ்க்) குடைவரைக் கோயில் அமைத்தனர். பாண்டியர் சுமார் அறுபதுக்கும் மேற்பட்ட குடைவரைக் கோயில்களை அமைத்துள்ளனர். இவர்கள் குடைவித்த குடைவரைக் கோயில்களில் காலத்தால் முற்பட்டது திருநெல்வேலி மாவட்டத்தில் மலையடிக் குறிச்சியில் மாறன் சேந்தன் செழியனால் (கி.பி. 610 – 660) குடைவிக்கப்பட்டதாகும்.[4] கோயில்களில் இதுவரை தெரிந்தவற்றில் எண்ணிக்கையில் அதிகமானவை சைவசமயக் கோயில்களே என்பதனை திருத்தங்கல், யானைமலை ஆகிய குடைவரைகள் தவிர ஏனையவை சைவக் கோயில்கள் என்பதிலிருந்து அறியலாம். எனினும் அவர்கள் சைவம், வைணவம் ஆகிய இரு சமயத்திற்கும் சரிசமமான அளவில் முக்கியத்துவம் அளித்துள்ளமையைத் திருப்பரங்குன்றம், திருச்சி, சொக்கம்பட்டி ஆகிய இடங்களில் அமைந்துள்ள இரட்டைக் கருவறை கொண்ட குடைவரைக்கோயில்களைக் கொண்டு நன்கறிய முடிகிறது.

## பாண்டியநாட்டு வைணவக் குடைவரைக் கோயில்கள்

இவ் இயலில் பாண்டியரால் குடைவிக்கப்பட்ட கோயில்களேயன்றி பாண்டியநாட்டில் உள்ள முத்தரையரால் குடைவிக்கப்பட்ட கோயில்களும் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இவ்வாறு பாண்டியர், முத்தரையர் ஆகியோரால் குடைவிக்கப்பட்ட பாண்டிய நாட்டுக் குடைவரைக் கோயில்களில் வைணவக் கோயில்கள் எட்டு ஆகும். அவை

1. யானைமலை - நரசிங்கப் பெருமாள் குடைவரைக் கோயில் (பாண்டியர்)
2. நார்த்தாமலை - திருமால் குடைவரைக் கோயில் (முத்தரையர்)
3. திருத்தங்கல் - பள்ளி கொண்ட பெருமாள் குடைவரைக் கோயில் (பாண்டியர்)
4. திருமெய்யம் - அழகிய மெய்யன் குடைவரைக் கோயில் (முத்தரையர்)
5. மலையடிப்பட்டி - திருமால் குடைவரைக் கோயில் (முத்தரையர்)
6. திருப்பரங்குன்றம் - குடைவரைக் கோயில் (பாண்டியர்)
7. திருச்சி - கீழ்க்குடைவரைக் கோயில் (பாண்டியர்)
8. சொக்கம்பட்டி - குடைவரைக் கோயில் (பாண்டியர்)

மேற்கண்ட குடைவரைக் கோயில்களில் யானைமலை, நார்த்தாமலை, திருத்தங்கல், திருமெய்யம், மலையடிப்பட்டி ஆகிய குடைவரைகள் வைணவத்திற்கென்றே அமைக்கப்பட்டவை ஆகும்.[5] திருப்பரங்குன்றம், திருச்சி, சொக்கம்பட்டி ஆகிய குடைவரைகள் சைவத்திற்கும் வைணவத்திற்கும் முக்கியத்துவம் அளித்து சமய ஒற்றுமையை விளக்கும்படியாக அமைக்கப்பட்ட கோயில்கள் எனக் கொள்ளலாம். இவை சைவ சமயக்கோயில்களே[6] ஆயினும் வைணவத்திற்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளதால் இக்குடைவரைக் கோயில்களும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

| வைணவக் குடைவரைக் கோயில்கள் | சைவம், வைணவம் இரண்டும் சமமுக்கியத்துவம் கொண்ட குடைவரைக் கோயில்கள் |
|---|---|
| 1. யானைமலை<br>2. நார்த்தாமலை<br>3. திருத்தங்கல்<br>4. திருமெய்யம்<br>5. மலையடிப்பட்டி | திருச்சி கீழ்க்குடைவரை<br>திருப்பரங்குன்றம் குடைவரை<br>சொக்கம்பட்டி குடைவரை |

இவ் ஆய்வுப்பகுதியில் குடைவரைகளின் தரை, திசை, கருவறை, முகமண்டபம்,தூண் போன்றவற்றின் அமைப்பும் கருவறை. இறையுருவச் சிற்பவமைதி, முகமண்டபச் சிற்பவமைதி மற்றும் குடைவரையின் காலம் ஆகியன ஒப்பீட்டு முறையில் ஆய்வு செய்யப்படுகின்றது.

## குடைவரைகளின் திசை அமைப்பு

பொதுவாகக் கட்டுமானக் கோயில்கள் ஆகம விதிகளின் அடிப்படையில் கட்டப்படுவதால் பெரும்பாலான கோயில்கள் கிழக்கு நோக்கியே அமைகின்றன. ஆனால் குடைவரைக் கோயில்கள் அவ்வாறின்றி எத்திசையினை நோக்கியும் அமையலாம். ஏனெனில் தமிழகத்தில் குடைவரைக் கோயில்கள் தோன்றிய காலத்தில் மலைகளின் திசையமைப்பைப் பொறுத்தே குடைவரைக் கோயில்கள் அமைந்தன. உதாரணமாகக் கிழக்கு மேற்காக மலை அமைந்திருந்தால் இதில் வடக்கு அல்லது தெற்கு நோக்கியே குடைவரைக்கோயில்கள் அமையும். காலப்போக்கில் குடைவரைக் கோயில்களிலும் கருவறைத் தெய்வம் கிழக்கு நோக்கி அமைக்கக் கருதி தெற்கு அல்லது வடக்கு நோக்கி அமைந்த குடைவரைகளின் கருவறையை மட்டும் கிழக்கு முகமாக அமைத்தனர்.

இப்பகுதியில் இடம்பெறும் குடைவரைக் கோயில்களில் நார்த்தாமலை, மலையடிப்பட்டி குடைவரைகள் கிழக்கு முகமாகவும், யானைமலை, திருமெய்யம், சொக்கம்பட்டி ஆகிய குடைவரைகள் மேற்கு நோக்கியும், திருச்சி, திருத்தங்கல் ஆகிய குடைவரைகள் தெற்கு நோக்கியும் அமைந்துள்ளன. இவற்றினின்று குடைவரைகள் எத்திசையை நோக்கி அமைக்கப்பட்டன என்பதை அறிய முடிகிறது.

## தரை அமைப்பு

குடைவரைக் கோயில்களின் தரை அமைப்பைப் பொருத்து அவற்றை ஐந்து வகைகளாகப் பிரிப்பர்.[7] கருவறை மட்டும் உடைய குடைவரை; கருவறையும் முக மண்டபமும் உடைய குடைவரை; கருவறை, முக மண்டபம், அர்த்த மண்டபம் உடைய குடைவரை; பக்கவாட்டில் கருவறை கொண்ட குடைவரை மற்றும் இரட்டைக் கருவறை உடைய குடைவரை என்பனவாகும். கருவறையின் அமைப்பு, உள்ளே அமையும் இறைவனின் திருவுருவத்தின் கோலத்தை வைத்து அமைகிறது. உதாரணமாக இறைவன் நின்ற, அமர்ந்த கோலங்களில் இடம் பெற்றால் கருவறை சதுரமாகவும்[8] கிடந்த கோலத்தில் இடம் பெறின் நீள்சதுரமாகவும் அமைகிறது.[9] இரட்டைக் கருவறை எனின் ஒரு கருவறை சிவனுக்கும், மற்றொரு கருவறை திருமாலுக்குமாக அமைகிறது. இவற்றில் கிழக்கு நோக்கிய கருவறை சிவனுக்கே அமைக்கப்பட்டுள்ளது.

இப்பகுதியில் சதுரகருவறை அமைப்புடைய குடைவரை நீள்சதுரக் கருவறை அமைப்புடைய குடைவரை, இரட்டைக் கருவறை

அமைப்புடைய குடைவரை, ஆகிய மூன்று விதமான குடைவரைகள் இடம்பெற்றுள்ளன. இனி ஒவ்வொரு தலைப்பின் கீழும் குடைவரைக் கோயில்களை பார்ப்பது அவசியமாகும்.

## சதுரக் கருவறை

யானைமலை, திருத்தங்கல், நார்த்தாமலை ஆகிய குடைவரைக்கோயில்கள் ஏறக்குறைய சதுரக்கருவறையும், செவ்வக முகமண்டபமும் கொண்டவையாகும். யானைமலையில் கருவறை 5.3 அடி அகலமும் 5.3 அடி நீளமும் 7 அடி உயரமும் உடையதாக விளங்குகிறது. திருத்தங்கலில் கருவறை 9.3 அடி அகலமும் 10.7 அடி நீளமும் 8.2 அடி உயரமும் கொண்டுள்ளது.[10] நார்த்தாமலையில் கருவறை 10.3 அடி அகலமும் 9அடி நீளமும் 8.7 அடி உயரமும் கொண்டதாக விளங்குகிறது. இக்கருவறைகள் சமச்சதுரமாக வெட்டப்படாத ஒரு தோராய அமைப்பே என்பது அதன் அளவுகளிலிருந்து தெரிய வருகிறது.

மேற்கண்ட குடைவரைகளின் முகமண்டபங்கள் நீள்சதுர அமைப்புடையன. யானைமலையின் முகமண்டபம் 5.3 அடி அகலமும் 15.8 அடி நீளமும் 7.8 அடி உயரம் கொண்டதாகவும் திருத்தங்கல் முகமண்டபம் 12.11 அடி அகலமும் 19.10 அடி நீளமும் 8.2 அடி உயரமும் கொண்டதாகவும் நார்த்தாமலை முகமண்டபம் 8 அடி அகலமும் 38.9 அடி நீளமும் 10 அடி உயரமும் கொண்டதாகவும் அமைந்துள்ளன.

## நீள்சதுரக் கருவறை

திருமெய்யம், மலையடிப்பட்டி ஆகிய குடைவரைகளின் கருவறைகள் நீள் சதுரமாக அமைந்துள்ளன. திருமெய்யம் கருவறை 8.7 அடி அகலமும் 29.6 அடி நீளமும் 10.10 அடி உயரமும் கொண்டுள்ளது. மலையடிப்பட்டி கருவறை 8.9 அடி அகலமும் 14.6 அடி நீளமும் 6.3 அடி உயரமும் கொண்டதாக விளங்குகிறது.

திருமெய்யம் குடைவரையில் முக மண்டபம் 15.10 அடி அகலமும் 29.6 அடி நீளமும் 12.9 அடி உயரமும் கொண்டுள்ளது. மலையடிப்பட்டி குடைவரையின் முகமண்டபம் 12 அடி அகலமும் 31.9 அடி நீளமும் 8.3 அடி உயரமும் கொண்டுள்ளது.

மேற்கண்ட சதுர மற்றும் நீள்சதுர கருவறை கொண்ட குடைவரைக் கோயில்களின் அதிட்டானத்திலும் சுவர்ப்பகுதியிலும் அலங்கார வேலைப்பாடுகள் எதுவும் இடம் பெறவில்லை.

## இரட்டைக் கருவறை

திருப்பரங்குன்றம், திருச்சி, சொக்கம்பட்டி ஆகிய குடைவரைகள் இரட்டைக் கருவறையும் முகமண்டபமும் உடைய குடைவரைகள் ஆகும். திருப்பரங்குன்றம் கருவறைகள் சிவனுக்கும் திருமாலுக்குமாக எதிரெதிரே அமைக்கப்பட்டுள்ளன. குடைவரையின் பின்சுவற்றில்

மூன்று மாடக்குழிகள் போன்ற அமைப்பு காணப்படுகின்றது. சிவனது கருவறை திருமாலின் கருவறையை விட அளவில் பெரியதாய் உள்ளது. திருச்சி கீழக்குடைவரை திருப்பரங்குன்றம் குடைவரையைப் போன்றே சிவனுக்கும் திருமாலுக்குமாக எதிரெதிரே இருகருவறைகளையும் அக்கருவறைகளுக்கு முன்பு முக மண்டபங்களையும் கொண்டுள்ளது. குடைவரையின் பின் சுவரில் ஐந்து புடைப்புச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. சிவன் கருவறை 7.11 அடி அகலமும் 8.6 அடி நீளமும் 6.9 அடி உயரத்துடனும் திருமால் கருவறை 4.2 அடி அகலமும் 4.9 அடி நீளமும் 6.5 அடி உயரமும் கொண்டுள்ளன. இங்கும் சிவனது கருவறை, திருமாலது கருவறையைவிடப் பெரிதாகவே உள்ளது. குடைவரை மற்றும் கட்டுமானக் கோயில்களில் ஒன்றுக்கும் மேற்பட்ட சன்னதிகள் இருப்பின் கிழக்கு முகமாக உள்ள சன்னதி பிரதானமானது என்ற கருத்திற்கு இரட்டைக் கருவறைகளில் பிரதான கருவறை பெரியதாக அமைக்கப்பட்டுள்ளமை மேலும் அணி சேர்ப்பதாக உள்ளது.

சொக்கம்பட்டி குடைவரையில் எதிரெதிரே இரு கருவறைகள் இடம் பெற்றுள்ளன. குடைவரையின் பின் சுவரில் முற்றுப் பெறாத மூன்று மாடக்குழிகள் இடம் பெற்றுள்ளன. திருப்பரங்குன்றம் மற்றும் திருச்சி குடைவரைகளை வைத்துப் பார்க்கின்றபோது சொக்கம்பட்டி குடைவரைக் கோயிலில் காணப்படும் இரு கருவறைகள் சிவனுக்கும் திருமாலுக்குமாக அமைக்கப்பட்டிருக்கலாம்.[11]

சொக்கம்பட்டி சிவனது கருவறை 8.6 அடி அகலமும் 7.8 அடி நீளமும் 6.3 அடி உயரமும் கொண்டுள்ளது திருமாலது கருவறை 8 அடி அகலமும் 7.3 அடி நீளமும், 6.3 அடி உயரமும் கொண்டு விளங்குகிறது.

## தூண்கள்

குடைவரையைப் பொறுத்த அளவில் தூண்கள் ஒரு அலங்கார வேலைப்பாடு கருதி இடம் பெறுகின்றனவே தவிர பயன்பாட்டுத் தேவைகருதி அமைக்கப்படுவதில்லை. பாண்டியநாட்டுக் குடைவரைத் தூண்கள் மகேந்திரவர்மன் பாணியில் இடம்பெறும்[12] எனினும் சில குடைவரைத் தூண்கள் முழுவதுமாகச் சதுரமாகவோ எண்பட்டையாகவோ அமைந்திருக்கின்றன. இவை காலத்தால் சிறிது பிற்பட்டவையாக இருக்கலாம்.

ஆய்வுக்குட்பட்ட கோயில்களில் யானைமலை, திருப்பரங்குன்றம், திருமெய்யம் ஆகிய குடைவரைகளில் மகேந்திரவர்மன் பாணித் தூண்கள் இடம் பெற்றுள்ளன. திருச்சி குடைவரையில் தூண்கள் எண் பட்டையுடனும் தூண்களின் மேற்பகுதியில் கலசம், தாடி, குடம், பலகை, கண்டம் போன்ற உறுப்புகள் மாமல்லன் பாணியிலும் (கீழே சிம்மம் இன்றி) அமைந்துள்ளன.

மலையடிப்பட்டி குடைவரைக் கோயில் தூண்கள் திருச்சி கீழ்க்குடைவரைக் கோயில் தூண்களைப் போன்றே அமைந்துள்ளன.

தூண்களில் கீழ்ப்பகுதியில் அமர்ந்த நிலையிலான சிங்கங்கள் இடம் பெற்றுள்ளன. இது மாமல்லன் பாணியாகும்.[13]

சொக்கம்பட்டி, நார்த்தாமலை ஆகிய இடங்களில் தூண்கள் பிரிக்கப்படாது கீழிருந்து சதுரமாய் விளங்குகின்றன.

திருத்தங்கல் குடைவரைத் தூண்களில் கீழ்ப்பகுதி சதுரமாகவும் நடு மற்றும் மேற்பகுதி எண்பட்டையுடையதாகவும் அமைந்துள்ளன.

யானைமலை மற்றும் திருமெய்யம் குடைவரைத் தூண்களின் சதுரப்பகுதியில் தாமரை வட்டங்கள் இடம் பெற்றுள்ளன. குடைவரைத் தூண்கள் அமைப்பதில் பல்லவர் பாணி பின்பற்றப்பட்டிருப்பினும் சில இடங்களில் மாற்றமடைந்தமைக்குப் பாறையின் அமைப்பும் கலைஞனின் அனுபவமின்மையும் காரணங்களாக இருந்திருக்கக்கூடும்.

## போதிகை

குடைவரைத் தூண்களில் போதிகை சாதாரணமாகவோ கட்டுடன் கூடிய தரங்க அமைப்புடனோ, கட்டில்லாத தரங்க அமைப்பு (கடல் அலைபோன்ற வரிகள்) உடையதாகவோ, வெட்டுப்போதிகை அமைப்புடனோ இடம் பெறும். யானைமலை, நார்த்தாமலை, சொக்கம்பட்டி, திருத்தங்கல், திருச்சி, மலையடிப்பட்டி ஆகிய இடங்களில் சாதாரண போதிகை அமைப்பும், திருப்பரங்குன்றம் திருமெய்யம் ஆகிய இடங்களில் தரங்கப் போதிகை (கடல் அலை போன்ற வரிகளுடன் கூடியது) அமைப்பும் காணப்படுகின்றன.

| சாதாரண போதிகை | தரங்கப் போதிகை |
|---|---|
| யானைமலை<br>நார்த்தாமலை<br>திருச்சி<br>திருத்தங்கல்<br>சொக்கம்பட்டி<br>மலையடிப்பட்டி | திருப்பரங்குன்றம்<br>திருமெய்யம் |

## கருவறைச் சிற்பங்கள்

தமிழகத்தில், பல்லவர்தம் துவக்க கால குடைவரையின் கருவறையில் சிற்பங்கள் இடம் பெறவில்லை. ஆனால் இராசசிம்மன் (கி.பி. 690 – 730) காலத்தில், குடைவரைகளில், சோமாசுகந்தர் சிற்பம் மட்டும் செதுக்கப்பட்டது. பாண்டியரும், முத்தரையரும், கருவறைகளில் இறையுருவங்களை இடம் பெறச் செய்தனர். ஆய்வுக்கு எடுத்துக் கொண்டுள்ள குடைவரைக் கோயில்களில் திருமெய்யம், மலையடிப்பட்டி, திருத்தங்கல் ஆகிய குடைவரைகளில் திருமாலின் சயனக் கோலமும், யானைமலையில் நரசிம்மரின் அமர்ந்த கோலமும்

இடம் பெற்றுள்ளன. நார்த்தாமலையில் சிற்பம் இடம் பெறவில்லை. இரட்டைக்கருவறை அமைப்புடைய குடைவரைகளில் திருமால், திருச்சியில் நின்ற கோலத்திலும், திருப்பரங்குன்றத்தில் அமர்ந்த கோலத்திலும் இடம் பெற்றுள்ளார். சொக்கம்பட்டியில் சிற்பம் செதுக்கப்பட்டதற்கான சுவடுகளாக திருமால் உருவத்திற்கு அருகில் இருக்கும் அரச குடும்பத்தார் அல்லது பக்தர் உருவங்கள் காணப்படுவதிலிருந்து, இவை முற்றுப் பெறவில்லை எனத் தெரிகின்றது. மேற்கண்ட மூன்று இரட்டைக் கருவறை அமைப்புடைய குடைவரைகளில் சிவனது கருவறையில் திருப்பரங்குன்றத்தில் மட்டுமே சிவலிங்கம் உண்டு. மேலும் கருவறையின் பின் சுவரில் சோமாசுகந்தரின் புடைப்புருவமும் இடம் பெற்றுள்ளது.

| சயனக்கோலம் | அமர்ந்த கோலம் | சிற்பம் இல்லை |
|---|---|---|
| திருமெய்யம்<br>மலையடிப்பட்டி<br>திருத்தங்கல் | யானைமலை | நார்த்தாமலை |

## இரட்டைக்கருவறை

| இறையுரு | திருப்பரங்குன்றம் | திருச்சி | சொக்கம்பட்டி |
|---|---|---|---|
| திருமால் | அமர்ந்த கோலம் | நின்றகோலம் | முற்றுப்பெறாத, நின்ற கோலத் திருமால் |
| சிவன் | லிங்கம் உண்டு (பின் சுவற்றில் சோமாசுகந்தர் புடைப்புருவம்) | லிங்கம் இல்லை (ஆனால் லிங்கம் வைக்கப் பள்ளம் உள்ளது மகேந்திரன் பாணி) | லிங்கம் இல்லை (முந்தைய திருமால் கருவறையை வைத்துத் தான் இது சிவனுக் காகச் செதுக்கப்பட் டுள்ளது என்பதனை உணரலாம்.) |

## சயனக்கோலம்

குடைவரைக் கோயில்களின் காலமும் பக்தியியக்கக் காலமும் கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரையிலான காலம் என்பதால் அக்காலக் கட்டத்தில் வைணவத்திலும் சைவத்திலும் இறைவனது உருவங்கள் பற்றிய புதிய பல சிந்தனைகள் உருவாகின. எனவே இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள இறைவனின் உருவ அமைதியைக் குடைவரைகளில் செயல் முறை விளக்கமாகச் செய்யத் துவங்கினர். இக்காலத்தில் குடைவரைகளில் திருமாலின் நின்ற, இருந்த மற்றும் கிடந்த கோலங்களை இடம்பெறச்செய்தனர். திருமாலின்

சயனக்கோலம் குடைவரைகளில் பெரிதும் இடம் பெற்றது. தமிழகத்தில் பல்லவர், பாண்டியர், அதியமான் மற்றும் முத்தரையர் ஆகிய நான்கு வம்சத்தவர்களும் சயனக்கோலத் திருமாலைக் குடைவரைகளில் அமைத்துள்ளனர். தமிழகத்திலுள்ள குடைவரைகளில் சயனக்கோலம் கொண்ட சிற்பம் முதல் முதலாகத் தொண்டை மண்டலத்தில் உள்ள சிங்கவரம் குடைவரையில் காணப்படுகின்றது. இது முதலாம் மகேந்திரவர்மன் காலத்தது ஆகும்.[14] சயனக்கோலம், யோகசயனம், போகசயனம் என இருவகைப்படும். திருமால், தேவியர் இன்றி இருப்பின் யோகசயனமூர்த்தி என்றும் தேவியருடன் இடம் பெற்றால் போகசயனமூர்த்தி என்றும் அழைக்கப்படுவார்.[15]

எடுத்துக்கொண்ட குடைவரைகளில் திருமெய்யம், மலையடிப்பட்டி, திருத்தங்கல் ஆகிய மூன்று குடைவரைகளில் திருமால் சயனக்கோலத்தில் இடம் பெற்றுள்ளார். இதில் திருமெய்யத்தில் இடம் பெற்றுள்ள திருமாலின் புடைப்புருவம் இந்தியாவில் உள்ள மிகப்பெரிய சயனக்கோலச் சிற்பங்களில் ஒன்றாகும். இது சுமார் இருபத்தி எட்டு அடி நீளம் கொண்ட சிற்பமாகும். இச்சிற்பத்தில் திருமால் மது கைடபர் எனும் அசுரர்களை வதம் செய்த கதை செதுக்கப்பட்டுள்ளது. திருமால் ஐந்து தலை நாகப்பஞ்சனையில் துயில் கொண்டுள்ளார். ஒரு கை தலைக்கருகிலும், மற்றொரு கை இடுப்பருகிலும் உள்ளன. திருமாலைச் சுற்றி மார்க்கண்டேயன், சித்திரபுத்திரன், காலன், கருடன் ஆகியோர் செதுக்கப்பட்டுள்ளனர். காலடியில் தேவியும்[16] மது கைடபர் எனும் அசுரர்களும் இடம் பெறுகின்றனர். பின் சுவரில் பிரம்மன் தாமரை மலரில் அமர்ந்த நிலையில் காணப்படுகிறார். நாரதர், தும்புரு, சூரியன், விசுவக்சேனர் ஆகியோர் புடைப்புருவங்களாக இடம் பெற்றுள்ளனர். கந்தர்வர்கள் பறந்த நிலையில் காணப்படுகின்றனர். திருமால் பள்ளி கொண்டுள்ள ஆதிசேடன் மது கைடபர்களை அழிக்கத் தனது நஞ்சே போதும் என எண்ணி நஞ்சைக் கக்குவது போல் செதுக்கப்பட்டுள்ளது. நஞ்சு, தீ நாக்குகள் போன்று பறந்து சென்று மது கைடபர்களைத் தாக்குவது போலவும், அதைத்தாங்க இயலாது மது கைடபர் அலறியடித்து ஓடுவது போலவும் *(பார்க்க நி.ப. எண் : 1)* இயல்பாக, நாடகக்காட்சி போன்று, சிற்பியின் கற்பனையில் வடிக்கப்பட்டுள்ளது. இத்தகு காட்சி மிக அரிதான ஒன்றாகும். இங்கு தேவி இடம் பெற்றுள்ளதால் இச்சிற்பம் போக சயனமூர்த்தியாகும்.

மலையடிப்பட்டி குடைவரையில் திருமால் நான்கு கரங்களுடன் சயனகோலத்தில் இடம் பெற்றுள்ளார். திருமாலுக்கு இரண்டு கரங்கள் எனும் நிலையினின்று நான்கு கரங்கள் எனும் நிலை குடைவரையின் காலத்திலேயே வளர்ச்சியடைந்துள்ளது. திருமாலின் பின்னிரு கரங்களில் சங்கு மற்றும் சக்கரம் இடம்பெற்றுள்ளன. முன்னிரு கரங்களில் வலக்கை தலைக்கு அருகில் மடக்கியபடியும் இடக்கை மேலே தூக்கியபடியும் உள்ளன. திருமாலின் காலடியில் மது கைடபர் இருவரும்

பய உணர்வுடன் நின்ற நிலையில் இடம்பெற்றுள்ளனர். உந்திக் கமலத்தில் பிரம்மன் அமர்ந்த நிலையில் பின் சுவரில் காட்டப்பட்டுள்ளார். தேவர்கள், தும்புரு, நாரதர், ரம்பையர் ஆகியோரது உருவங்கள் புடைப்புச் சிற்பங்களாக இடம் பெற்றுள்ளன. விஷ்ணுவின் பாதங்களுக்கருகில் அரசனும் அரசியும் வணங்கிய நிலையில் இடம்பெற்றுள்ளனர். இவர்கள் ஒருவேளை இக்குடைவரையை அமைத்தவர்களாக இருக்கலாம். இங்கு, தேவி இடம் பெறாததால் திருமாலை யோகசயன மூர்த்தியாகக் கொள்ளலாம்.

திருத்தங்கல் குடைவரையில் இரு கரங்கள் கொண்ட திருமாலின் சிற்பம் இடம் பெற்றுள்ளது. திருமாலின் பாதங்களுக்கு அருகில் ஸ்ரீதேவி, பூதேவி சிற்பங்கள் காணப்படுகின்றன.[17] மார்க்கண்டேயன் பிருகு ஆகியோரது சிற்பங்கள் திருமாலுக்கு அருகில் செதுக்கப்பட்டுள்ளன. பொதுவாக, திருமால் சயனகோலத்தில் இடம் பெற்றால் கருவறையின் பின் சுவரில் புடைப்புருவங்களாக பிரம்மன், தும்புரு, நாரதர், தேவர்கள், கந்தர்வர், மது கைடபர் முதலானோரை இடம் பெறச் செய்வர். இங்கு அத்தகு புடைப்புருவங்கள் இடம்பெறவில்லை. மாறாக, ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன. இதில், பிரம்மன் தாமரையில் அமர்ந்த கோலத்திலும் தேவர்கள் தும்புரு, நாரதர் முதலானோர் நின்ற கோலத்திலும் இடம்பெறுகின்றனர். திருமால் கல்லில் செதுக்கப்பட்டுள்ளார். அவ்வுருவத்தின் மீது சுதை பூசப்பட்டு வண்ணம் தீட்டப்பட்டுள்ளது. மேலும் விசயநகர-நாயக்கர் காலச் சிற்பங்களில் இடம் பெறுவதுபோல் அதிக அணிகலன்கள் இடம்பெற்றுள்ளன. (பார்க்க நி.ப. எண் : 2) இந்த அணிகலன்கள் பின்னாளில் சுதையினால் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். இங்கு, பின்னணியில் புடைப்புச் சிற்பங்கள் இல்லாது ஓவியம் அமைக்கப்பட்டிருப்பதற்குக் காரணம் யாதெனில் கலைஞனால் குறுகிய அவ்விடத்தில் சிற்பங்கள் செதுக்க முடியாமையே எனலாம். மேலும் இங்குள்ள ஓவியம் குடைவரையின் காலத்தைக் காட்டிலும் பிற்பட்டதாகும்.

## அமர்ந்த கோலம்

யானைமலை மற்றும் திருப்பரங்குன்றக் குடைவரைகளின் கருவறைகளில் அமர்ந்தகோலத் திருமால் இடம்பெற்றுள்ளார். யானைமலை நரசிங்கப்பெருமாள் குடைவரையில் யோக நரசிம்மர் இடம்பெறுகிறார். மேலிருகரங்களில் சங்கு, சக்கரம் தாங்கியுள்ளார். கீழிரு கரங்களில் அபய, வரத முத்திரைகள் இடம்பெற்றுள்ளன. தமிழகத்தில், குடைவரையின் காலமான கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு முடிய பல்லவர், பாண்டியர், அதியமான், முத்தரையர் ஆகிய வம்சத்தினர் நரசிம்மருக்குத் தனித்தனியாகக் குடைவரைகளை நிறுவியுள்ளனர்.

பல்லவர் தங்களது பெயர்களை சிம்ம விஷ்ணு மற்றும் நரசிம்மன் என வைத்துக் கொண்டதனின்றும், அவர்கள் நரசிம்ம வழிபாட்டுக்கு அளித்த

முக்கியத்துவத்தை அறியலாம். இவர்களது காலத்து நரசிம்ம சிற்பம், தமிழகத்தில், முதன்முதலாக வட ஆற்காடு மாவட்டம் முன்னூர் (munur) எனும் இடத்தில் கிடைத்துள்ளது.18

பாண்டியர் யானைமலையில் நரசிங்கப் பெருமாளுக்குத் தனிக்கோயில் அமைத்ததோடு திருப்பரங்குன்றம் குடைவரையின் கருவறை வெளிச்சுவரிலும் நரசிம்மரை இடம் பெறச் செய்துள்ளனர். முத்தரையர் மலையடிப்பட்டியிலும் அதியமான்கள் நாமக்கல்லிலும் நரசிம்மரைக் குடைவரைகளில் அமைத்துள்ளனர்.

நரசிம்மரது உருவ அமைதி கோயில்களில் மூன்று நிலைகளில் இடம் பெற்றுள்ளன. அவை இரணியனுடன் சண்டையிடும் காட்சி, இரணியவதை, யோக நரசிம்மர் என்பன. இதில் கருவறையில் யோகநரசிம்மர் மட்டும் இடம்பெறுகிறார். மற்ற இரண்டு நிலைகளும் பெரும்பாண்மையாகக் கட்டுமானக் கோயில்களில் காணப்படுகின்றன.

திருப்பரங்குன்றம் கருவறையில், திருமால் ஆதிசேஷடன் மீது அமர்ந்த கோலத்தில், வைகுண்டநாதனாக இடம்பெறுகிறார். இவருக்கு வலப்புறம் மதங்கமாமுனிவரும் இடப்புறம் பூதேவியும் அமர்ந்த நிலையில் இடம் பெற்றுள்ளனர். திருமாலின் இருபுறமும் சாமரதாரிகள் இருவர் சாமரம் வீசுவது போன்றும், மேலே வானவர் இருவர் பூமாரி பொழிவது போலவும் அமைக்கப்பட்டுள்ளது.

## நின்ற கோலம்

திருச்சி கீழ்க்குடைவரையில் திருமால் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் இடம்பெற்றுள்ளார். இவரது இருபுறமும் அரசன், அரசி இருவரும் மண்டியிட்டு வணங்கிய நிலையில் செதுக்கப்பட்டுள்ளனர். இவர்கள் இக்குடைவரையைச் செதுக்குவித்தவர்களாக இருக்கலாம்.

சொக்கம்பட்டி திருமால் கருவறையில் முழுமையாகச் செதுக்கப்படாத கல் மட்டும் இடம்பெற்றுள்ளது. திருச்சி கீழ்க்குடைவரையில் இடம்பெற்றுள்ள திருமால் சிற்பத்தை வைத்துப் பார்க்கின்றபோது, திருமால் சிற்பத்தை அமைப்பதற்கான அக்கல் செதுக்கப்பட்டு, அப்பணி நிறைவு பெறாமல் நின்றுவிட்டது எனலாம். மேலும் கருவறையில் இடம்பெற்றுள்ள சிற்பத்திற்கான கல்லின் கீழ்ப்பகுதியில் அரசனும் [illegible]
செதுக்கப்பட்டுள்ளதைப் [illegible]
கீழ்க்குடைவரையில் உள்ள [illegible]
இக்கல் திருமாலது சிற்ப [illegible]
முற்றிலும் செதுக்கப்படாம [illegible]

இரட்டைக் கருவறை அமைப்பு [illegible] ஒன்று சிவனுக்கும் மற்றொன்று திருமாலுக்கும் அமைக்கப்படும் எனக் கண்டோம். திருப்பரங்குன்றம் சிவனது கருவறையில் லிங்கம் இடம்பெற்றிருப்

பதோடு[19] புடைப்புருவமும் இடம்பெற்றுள்ளது. சோமாசுகந்தர் புடைப்புருவம் பாண்டியரது குடைவரைகளில் திருப்பரங்குன்றத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும். இது பல்லவரின் தாக்கமாகும். திருச்சி மற்றும் சொக்கம்பட்டி சிவனது கருவறைகளில் சிவலிங்கமோ புடைப்புச் சிறபமோ இடம்பெறவில்லை.

## முகமண்டபச் சிற்பங்கள்

இந்நூலில் இடம்பெறும் குடைவரைகளில் யானைமலை, திருமெய்யம், திருத்தங்கல் ஆகிய குடைவரைகளின் முக மண்டபத்தில் எச்சிற்பங்களும் இடம் பெறவில்லை. பிற குடைவரைகளில் துவாரபாலகரது சிற்பங்கள் மற்றும் இறையுருவச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளதோடு பிற சிற்பங்களும் இடம் பெற்றுள்ளன. பல்லவர் காலத்திலேயே முகமண்டபத்தில் புடைப்புச் சிற்பங்களை அமைக்கும் வழக்கம் இருந்தது. பாண்டியர் தங்களுடைய பெரும்பாலான குடைவரைகளில் புடைப்புருவங்களை அமைத்தனர். பல்லவர்தம் புடைப்புச் சிற்பங்கள் கதைத்தொகுதிகளாக அமைந்தன. ஆனால் பாண்டியர்தம் சிற்பங்கள் தனியிறையுருவங்களாக அமைந்தன.

## துவாரபாலகர் சிற்பங்கள்

துவாரபாலகர் என்பவர் இறைவனுடைய உறைவிடத்தின் காவலர் ஆவர். இந்தியாவில் முதன் முதலில் வாயிற்காவலர் (துவாரபாலகர்) சிற்பம் பாஜாவில் (மகாராட்டிரம்) உள்ள பௌத்த சைத்தியத்தில் (கி.மு. 100 – 70) அமைக்கப்பட்டது.[20] அங்கே ஒரு பக்கம் இந்திரனும் மற்றொரு பக்கம் சூரியனும் அமைக்கப்பட்டுள்ளனர். அக்காலப் பிரதான இந்துக் கடவுளரின் செல்வாக்கைக் குறைக்கவே கோயிலுக்குள் இருக்க வேண்டியவர்களை வாயிலுக்குக் கொண்டு வந்து விட்டனர். அதே காலத்தைச் சேர்ந்த பிதாய் கோராவின் (மகாராட்டிரம்) நான்காவது குகையின் வாயிலில் இரு வாயிற்காவலர் வேல்கத்தியும் கேடயமும் கொண்டு, புன்முறுவலுடன், அன்றைய இராணுவ உடையில், நின்றிருப்பதைக் காணலாம்.[21]

கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த சாஞ்சியின் பிரதான ஸ்தூபத்தின் தோரணவாயிலில் உள்ள இருவர் வாயிற்காவலர் என அழைக்கப்படுகின்றனர். ஆனால் இவர்களில் மேற்குத் தோரணத்தில் உள்ளவர் மட்டுமே ஒரு வேலைப் பிடித்துள்ளார். மற்றவர் கையில் ஆயுதம் இல்லை. இதேபோல் கி.பி. 2 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நாசிக் விகாரத்தின் (III) தோரண நுழைவாயிலின் இருபக்கமும் போதிசத்துவர்கள் நிறுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்.[22]

முதன் முதலில் குப்தர் காலத்தில் (கி.பி. 5 ஆம் நூற்றாண்டு) உதயகிரி குகையில் துவாரபாலகர் சிற்பம் ஆயுதத்தின் மேல் சாய்ந்திருப்பதுபோல் அமைக்கப்பட்டுள்ளது. இதனைப்பின் தொடர்ந்து இந்துக் குகைகளில்

இப்பாணி பின்பற்றப்பட்டிருக்க வேண்டும். தமிழகத்தில் முதன்முதலில் அமைக்கப்பட்ட மண்டகப்பட்டு குடைவரையில் (முதலாம் மகேந்திரவர்மன் கி.பி. 600 – 630) உயிரோட்டமுள்ள விழித்த கண்களையுடைய ஆயுதத்தின் மேல் சாய்ந்துள்ள துவாரபாலகர் அமைக்கப்பட்டனர். இது சாதவாகனரின் தாக்கமாயிருக்க வேண்டும். இத்துவாரபாலகரது சிற்பங்கள் இரண்டு கைகளுடன் இடம் பெற்றுள்ளன. இவர்களது உடல்பகுதி பக்கவாட்டில் திரும்பியபடியும் முகம் நேர்பார்வையிலும் அமைந்துள்ளன. ஆரம்பகாலத்தில், கருவறையின் வெளியே இருபுறம் இடம் பெற்ற துவாரபாலகரது சிற்பங்கள் பின்னர் குடைவரை முகமண்டபத்தின் இருமருங்கிலும் இடம் பெறச் செய்தல் என்ற நிலைக்கு வளர்ந்தது. காரணம், அவர்கள் குடைவரையையே கருவறையாக நினைத்திருக்கலாம்.

முகமண்டபச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ள குடைவரைகளில் நார்த்தாமலை தவிர பிற இடங்களில் துவாரபாலகர் சிற்பங்கள் இடம் பெறுகின்றன. இவற்றில் மலையடிப்பட்டியில் இரண்டு துவாரபாலகர்களும் திருப்பரங்குன்றம் சொக்கம்பட்டியில் கருவறைக்கு இரண்டு என மொத்தம் நான்கு துவாரபாலகரும், இடம்பெற்றுள்ளனர். திருச்சி குடைவரையில் இரு கருவறைகளுக்கு இரண்டிரண்டு துவாரபாலகரும், முகமண்டபத்தில் இடம்பெற்றுள்ள புடைப்புச் சிற்பங்களின் இருமருங்கில் இரண்டு துவாரபாலகர்களும் இடம்பெற்றுள்ளன. குடைவரையின் முகப்பில் இரண்டு பக்கமும் இடம் பெற்றுள்ள இரண்டு துவாரபாலகரும் என மொத்தம் எட்டுத் துவாரபாலகர் இடம்பெற்றுள்ளனர்.

| **துவாரபாலகர் இல்லை** | **இரண்டு துவாரபாலகர்** | **நான்கு துவாரபாலகர்** | **எட்டு துவாரபாலகர்** |
|---|---|---|---|
| யானைமலை<br>நார்த்தாமலை<br>திருமெய்யம்<br>திருத்தங்கல் | மலையடிப் பட்டி | திருப்பரங்குன்றம் சொக்கம்பட்டி | திருச்சி (கீழ்க்குடைவரை) |

## பிற சிற்பங்கள்

குடைவரைக்கோயில் முகமண்டபங்களில், அலங்காரம் கருதிப், பல புடைப்புச் சிற்பங்களை அமைத்தனர். இங்கு இடம்பெறும் குடைவரைகளில் நார்த்தாமலையில் துவாதச ஆதித்தியர் எனும் திருமாலின் பன்னிரெண்டு சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன.[23] இவை ஒரே மாதிரியான அமைப்புடையன. நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் புடைப்புருவங்களாக செதுக்கப்பட்டுள்ளன. இக்குடைவரை சமணக் குடைவரையாக இருந்து பின்னர் வைணவக் குடைவரையாக மாற்ற

வேண்டி பிற்காலத்தில் இதில் வைணவ சமயச் சிற்பங்களைச் செதுக்கியுள்ளனர்.

மலையடிப்பட்டியில் முகமண்டபத்தில் வைகுண்டநாதர், நின்றகோல நாராயணன், நரசிம்மர், வராகர் ஆகிய சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. இதில் வைகுண்டநாதர் ஸ்ரீதேவி, பூதேவியுடன் அமர்ந்த நிலையில் காணப்படுகிறார்.[24] நாராயணன், தேவியர் இருவருடன் நின்ற கோலத்தில் புடைப்புருவமாக இடம் பெற்றுள்ளார். வராகப் பெருமாள் சுகாசனத்தில் காணப்படுகிறார். நரசிம்மர் ராசலீலாசனத்தில் அமர்ந்துள்ளார். இங்கு இடம்பெற்றுள்ள சிற்பங்கள் குடைவரையின் சமகாலத்தில் செதுக்கப்பட்டவை அல்ல. இவை பிற்காலத்தில் செதுக்கப்பட்டவையாகும். இவை புடைப்புச் சிற்பங்களாக இன்றித் தனிச் சிற்பங்களாக உள்ளமை மேற்கண்ட கருத்துக்குத் துணை செய்கின்றன.

திருப்பரங்குன்றத்தில் முகமண்டபத்தின் பின் சுவரில் நடுவில் துர்க்கையும் துர்க்கையின் வலது புறத்தில் சுப்பிரமணியரும், இடது புறத்தில் கணேசரும் இடம் பெற்றுள்ளனர். இக்குடைவரையில் சிவன், திருமால், துர்க்கை, சுப்ரமணியர், கணேசர் ஆகிய இறையுருவங்களை பஞ்சாயதனம் எனும் ஐவகைச் சமயத்தைச் சார்ந்த இறையுருவங்களாகக் கொள்ளலாம்.

திருமாலது கருவறையின் வெளிச்சுவரில் பூவராகர், வைகுண்டநாதர், நரசிம்மர் ஆகிய சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. இதில், வராகர் சிற்பம் பூதேவியைத் தனது மடியில் கொண்டு கடலினுள் இருந்து வெளியே வருவதுபோல் அமைக்கப்பட்டுள்ளது. மேலும் வராகரது காலுக்கடியில் நாகம் காட்டப்பட்டுள்ளது. இங்கு கீழ் உலகத்தைக் குறிக்கும் குறியீடாக நாகம் இடம்பெற்றுள்ளது. மேலும் கலைகளில் நாகம் வளமையின் குறியீடாகவும் இடம்பெறும். அதியமான்களின் கோயிலான நாமக்கல் நரசிங்கப் பெருமாள் குடைவரையில் கருவரையின் வெளிச்சுவற்றில் வராகர் பூமகளுடன் வெளிப்படுவது போல் சித்தரிக்கப்பட்டுள்ளது இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

வைகுண்டநாதர் ஐந்து தலை நாகத்தின்மீது தேவியர் இன்றி இடம் பெற்றுள்ளார். மேலே கந்தருவர் இருவர் பறந்து வருவதுபோல் செதுக்கப்பட்டுள்ளது. வைகுண்டநாதரின் காலடியில் இரு பெண் உருவங்கள் இடம்பெற்றுள்ளன. ஒரு பெண் வைகுண்டநாதரின் திருவடியைத் தாங்கியபடி உள்ளாள். இப்பெண் உருவம் பூ தேவியாக இருக்கலாம். வணங்கிய நிலையில் உள்ள மற்றொரு பெண் யாரென அடையாளம் காண இயலவில்லை.

இதனையடுத்து, இரணியவதை நரசிம்மர் சிற்பம் இடம் பெற்றுள்ளது. இதில் நரசிம்மரது மேலிரண்டு கைகளில் சங்கு, சக்கரம் காட்டப்படவில்லை. இத்தகு சிற்பம் அரிதான ஒன்றாகும். தமிழகக்

குடைவரைகளில் யோக நரசிம்மரது சிற்பமே அதிக அளவில் இடம் பெற்றுள்ளது. எனினும், இரணியவதை சிற்பம் பிற்காலக் கட்டுமானக் கோயில்களில் அதிக அளவில் இடம் பெற்றுள்ளது. இவை, குறிப்பாக விசயநகர-நாயக்கர் கால மண்டபங்களில் மிகுதியாக இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

சிவனது கருவறையின் வெளிச்சுவற்றில் நடராசரது சதுரதாண்டவம் இடம் பெற்றுள்ளது. சிவனது காலடியில் பூதகணம் அமைந்துள்ளது. இத்தகு சதுர தாண்டவம் பாண்டிய நாட்டுக் குடைவரைகளில் அரிதான ஒன்றாகும். கி.பி. எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அமைக்கப்பட்ட பட்டடக்கல் விருபாக்சர் கோயிலில் திருப்பரங்குன்றம் சதுரத் தாண்டவத்தின் முன்னோடியான சிற்பம் உள்ளது. இதைப்போன்றே அங்கும் சிவபெருமான் ரிஷபக் கொடியைக் கையிலேந்தியுள்ளார்[25]. சதுர தாண்டவ மூர்த்தியின் அருகில் உமையம்மை ரிசபத்தின் மேல் சாய்ந்தபடி தாண்டவத்தைக் கண்டு மகிழ்வதுபோல் அமைந்துள்ளது. நந்தி 'குடமுழா' எனும் இசைக்கருவியை இசைப்பதுபோல் காட்டப்பட்டுள்ளது. குன்றக்குடி குடைவரைக் கோயிலில் இதே போன்று நடராசர் நடனமாடுவதைத் திருமால், பிரம்மன் மற்றும் தேவர்கள் உள்ளிட்ட அனைவரும் கண்டு களிப்பது போலவும் அமைந்துள்ள காட்சி இத்துடன் ஒப்பு நோக்கத்தக்கது.

திருச்சி கீழ்க்குடைவரை முகமண்டபத்தில் பின் சுவரில் கணேசர், சுப்பிரமணியர், பிரம்மன், சூரியன், துர்க்கை ஆகிய புடைப்புருவங்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றிற்கு மேலே இரண்டிரண்டு வானவர் மலர் தூவுவது போலவும், கீழே இருவர் வணங்குவது போலவும் அமைத்துள்ளனர். துர்க்கையின் கீழே ஒருவர் நவகண்டம் கொடுப்பது போல் செதுக்கப்பட்டுள்ளது. இது அக்காலத்திலேயே நவகண்டம்[26] சமுதாயத்தில் சிறப்பிக்கப்பட்டது என்பதைக் காட்டுகிறது. இங்கு இடம் பெற்றுள்ள இறையுருவங்களை வைத்துப் பார்க்கின்றபோது இவற்றை அறுவகைச் சமய சிந்தனைக்குரிய சிற்பங்களாகக் கொள்ளலாம் எனினும், இவற்றைக் கூர்ந்துநோக்கின் ஐவகை மற்றும் அறுவகைச் சமயக் கருத்துக்கள் பிணைக்கப்பட்டுள்ளதை உணரலாம். ஏனெனில் இங்கு சூரியனும் உள்ளார்.

சொக்கம்பட்டி குடைவரை முழுமையாக நிறைவுறாத குடைவரை என்றாலும் குடைவரையின் முகப்பில் இருபுறம் துவாரபாலகர்க்குப் பதிலாக, அரச, அரசி, உருவங்கள் இடம்பெற்றுள்ளன. இவ்வுருவங்கள் தலைக்கு மேல் நாகத்துடன் காணப்படுவதால் கலையியலார் இவற்றை சமணத்தோடு தொடர்புபடுத்துவர். ஆனால் சமணசமயத்தோடு தொடர்புடைய பிற கூறுகள் எதுவும் இங்குக் காணப்படவில்லை. எனவே அவற்றை அரச, அரசி உருவங்களாகக் கொள்ளலாம்.[27]

பாண்டிய நாட்டுக் குடைவரைகளில் உள்ள சிற்பங்களை நோக்கும்போது கருவறை தவிர முகமண்டபங்களிலும் இறையுருவச்

சிற்பங்களே இடம் பெற்றுள்ளன. எல்லாச் சிற்பங்களும் இயக்க ஆற்றல் இன்றி அமைந்திருப்பினும் திருப்பரங்குன்றம் குடைவரையில் உள்ள நரசிம்மர், வராகர், நடராசர் ஆகிய சிற்பங்கள் இயக்க ஆற்றலுடன் அமைந்துள்ளன. இவ்வாறு முகமண்டபச் சிற்பங்கள் அலங்கார வேலைப்பாடு கருதி அமைக்கப்பட்டாலும் இவை சமயத்தின் வளர்ச்சி நிலைகளை (ஐவகைச் சமயம், அறுவகைச் சமயம்) அறிய உதவுவதோடு கலை வளர்ச்சியையும் அறிய உதவுகிறது.

## குடைவரைகளின் காலம்

பாண்டியநாட்டுக் குடைவரைகளில் சிலவற்றில் மட்டுமே கல்வெட்டுகள் இடம் பெற்றுள்ளன. கல்வெட்டுக்கள் இடம் பெறாத குடைவரைகளின் காலத்தை அதில் இடம் பெற்றுள்ள சிற்ப அமைதியை வைத்தே தோராயமாகக் கூற வேண்டியுள்ளது.

யானைமலை நரசிங்கப்பெருமாள் கோயிலில் இரண்டு கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றில் ஒன்று கிரந்தத்திலும் மற்றொன்று வட்டெழுத்திலும் இடம் பெற்றுள்ளன. இக்கல்வெட்டுக்கள் மூலம், இக்குடைவரையானது பாண்டிய மன்னன் சடில பராந்தக நெடுஞ்சடையனின் உத்திரமந்திரியாகிய மாறன்காரியால்[28] தொடங்கப்பட்டது என்றும், அப்பணி முடிவடையும் முன்னர் அவர் இறந்து விட்டபடியால் அவரது தம்பி மாறன்எயினனால் கி.பி. 770 ல் முடிக்கப்பட்டது என்றும் அறிய முடிகிறது.[29] எனவே இக்குடைவரையின் காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டு ஆகும்.

திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயில் மாறவர்மன் இராசசிம்மனின் மகனான சடிலபராந்தகனின் சேனாபதி சாத்தன் கணபதியால் கி.பி. 773 ஆம் ஆண்டு குடைவிக்கப்பட்டது.[30]. எனவே, இதன் காலமும் கி.பி. எட்டாம் நூற்றாண்டாகும். யானைமலை குடைவரைக் கோயிலை விட மூன்றாண்டுகளுக்குப் பின்னர் தோற்றுவிக்கப்பட்ட இக்கோயில் முன்னதை விட வளர்ச்சியடைந்த நிலையில் படைக்கப்பட்டுள்ளதைக் காண முடிகின்றது. இரட்டைக் கருவறை, பஞ்சாயதனச் சிற்ப அமைப்புகள் ஆகியவை புதிய படைப்புக்களாகும். இக்கோயில் எல்லோராக் குகை போன்று விரிந்த பரப்பளவில் செய்யப்பட்ட அற்புதப் படைப்பென்றும், பிற்காலக் கட்டடங்கள் பல இதன் பழைய நிலைகளை மறைத்துள்ள போதும், அதன் பழைய தோற்றத்தைப் பார்க்கும்போது இந்தியாவின் சிறந்த குகைப் படைப்புக்களில் ஒன்றாக விளங்குகின்றது என கே.வி. இராமன் கூறுவது இங்கு நினைவு கொள்ளத்தக்கதாகும்.[31]

திருச்சி கீழ்க்குடைவரையில் கல்வெட்டுக்கள் இல்லை. மேலும், இக்குடைவரை பல்லவர் காலத்தது என்றும், பாண்டியர் காலத்தது என்றும் கலை வரலாற்று அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உண்டு. இக்குடைவரை இரட்டைக்கருவறை அமைப்பினைப் பெற்று

விளங்குகிறது. இத்தகைய அமைப்பு பல்லவ நாட்டில் இல்லை. பாண்டிய நாட்டில் திருப்பரங்குன்றம், சொக்கம்பட்டி ஆகிய இடங்களில் இருப்பதாலும் இதனைப் பாண்டியரது குடைவரை எனலாம். மேலும் திருப்பரங்குன்றத்தில் ஐவகைச் சமயம் (Panchayatana) சார்ந்த சிற்பங்கள் இடம்பெற்றுள்ளதைப் போன்று, இங்கு அறுவகைச் சமயம் (Shanmata) சார்ந்த சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. எனவே, திருப்பரங்குன்றம் குடைவரையின் காலத்திற்கு சற்றுப் பிந்தியதாக கி.பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியைச் சேர்ந்ததாகக் கருதலாம். இது பாண்டிய மன்னன் ஸ்ரீ மாறன் - ஸ்ரீ வல்லபனின் (கி.பி. 815 - 862) காலத்தியதாகத் தோன்றுவதாகக் கே.வி.இராமன் கூறுகின்றார்[32]. ஆனால், அதற்கான காரணத்தை அவர் குறிப்பிடவில்லை.

சொக்கம்பட்டி குடைவரையில் கல்வெட்டுகள் இல்லை. இதன் அமைப்பை வைத்துப் பார்க்கின்றபோது திருப்பரங்குன்றம் குடைவரையின் அமைப்பையும், சிற்ப அமைதியையும் (முடிவுறாத திருமால் சிற்பம்) வைத்துப்பார்க்கும்போது திருச்சி கீழ்க் குடைவரையின் காலத்திற்குச் சற்று பிந்திய காலமான, கி.பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதியாகக் கொள்ளலாம்.

திருத்தங்கல் குடைவரையில் கல்வெட்டுக்கள் இல்லை. எனவே இதன் காலத்தைத் துள்ளியமாகக் கணக்கிட இயலவில்லை. இக்குடைவரையின் காலத்தை இக்கருவறையில் இடம்பெற்றுள்ள சிற்ப அமைதி கொண்டே கணக்கிட வேண்டியுள்ளது.

திருமாலின் நின்ற, அமர்ந்த கோலங்களுக்குச் சதுரமான கருவறை அமைப்பையும், கிடந்தகோலத்திற்கு நீள் சதுர கருவறை அமைப்பையும் தேர்ந்தெடுத்துள்ளதைக் குடைவரைகளின் கருவறை அமைப்பை வைத்து அறியமுடிகின்றது. ஆனால் இங்கு கருவறை சதுரமாய் இருந்தும் அதில் திருமாலின் சயன கோலம் இடம்பெற்றுள்ளது. எனவே குடைவரை தோன்றிய காலத்தில் அதில் கருவறைச் சிற்பம் இல்லாமல் இருந்தோ அல்லது இருந்து பிற்காலத்தில் அழிந்துவிட்டதாலோ புதிதாக இத்தகு சிற்பம் வைக்கப்பட்டிருக்கலாம். எனவே, இச்சிற்பம் குடைவரையின் காலத்தைச் சேர்ந்தது அல்ல, பிற்காலத்தில், வைக்கப்பட்டது என்று கருத வாய்ப்புள்ளது. மேலும், இச்சிற்பத்தின் மேல் சுதை பூசி அதில் அதிக அளவில் அணிகலன்கள் இடம்பெற்றுள்ளமை விசயநகர-நாயக்கர் காலத்தைச் சேர்ந்தது என்ற கருத்துக்கு அணி சேர்ப்பதாக அமைகிறது.

அடுத்ததாக திருமாலின் கருவறைத் தெய்வத்தின் அருகில் ஸ்ரீதேவியும், பூதேவியும் இடம் பெற்றுள்ளனர். கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்கு முன் திருமாலின் அருகில் ஸ்ரீதேவி சிற்பம் இடம் பெறுவதில்லை என்ற கருத்து நிலவுவதாலும் (அ.கு.எண் 18), இங்கு இடம் பெற்றுள்ள தேவியர் சிற்பங்கள் பிற்காலத்ததாக இருப்பதாலும், அதாவது

புடைப்புச் சிற்பங்களாக இல்லாது தனிச் சிற்பங்களாக இருப்பதால், இவையும் குடைவரையின் காலத்தை அறிய உதவவில்லை. இக்குடைவரையில் இடம்பெற்றுள்ள இறைவனை பூதத்தாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் பாடியுள்ளனர். எனவே, இவர்களது காலமாகிய கி.பி. 7,8 ஆம் நூற்றாண்டுகளில் இங்கு குடைவரையும் அதில் திருமால் சிற்பமும் அமைந்திருந்தது என்பதை அறிய முடிகின்றது. எனவே இக்குடைவரையின் காலம் கே.வி. சௌந்தரராசன் கருதுவது போல்[33] கி.பி ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதி எனக் கொள்ளலாம்.

திருமெய்யம் திருமால் குடைவரையானது இயற்கையிலேயே அமைந்த குடைவரையாகும். இது பின்னர் புதுப்பிக்கப்பட்டது. இக்குடைவரையைப் புதுப்பித்தவர் விடேல் விடுகு விழுப்பேராதியரையன் எனும் சாத்தன் மாறனின் தாயாரான பெரும்பிடுகுப் பெருந்தேவி என்பதை இக்கோயிலில் இடம்பெற்றுள்ள கல்வெட்டால்[34] அறிய முடிகின்றது. இக்குடைவரையில் உள்ள இறைவனை திருமங்கையாழ்வார் "மெய்யானை மெய்ய மலையானைச் சங்கேந்தும் கையானைக் கை தொழாக்கையல்ல கண்டோமே" என்று பாடுகிறார். எனவே, இவ்வாழ்வாரது காலத்திற்கு (கி.பி. 8 ஆம் நூற்றாண்டு) சற்று முந்தியதாக இக்குடைவரையைக் கொள்ளலாம்.

மலையடிப்பட்டிக் குடைவரைக் கோயிலில் கல்வெட்டு இடம் பெறவில்லை. எனினும், இக்குடைவரையின் அருகில் அமைந்துள்ள சிவனது குடைவரையில் கல்வெட்டு இடம்பெற்றுள்ளது. இக்கல்வெட்டின்படி இதனைக் குவாவன் சாத்தன் எனும் விடேல் விடுகு முத்தரையன் (தண்டிவர்மப் பல்லவனது காலத்தில்) தனது 16-வது ஆண்டான கி.பி. 812ல் குடைவித்தான்[35] என அறிகிறோம். எனவே, அருகில் உள்ள திருமால் குடைவரையும் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் துவக்க காலத்தைச் சேர்ந்ததாகவோ[36] அதற்குச் சற்றுப்பிந்தியதாகவோ கொள்ளலாம்.

நார்த்தாமலைக் குடைவரைக் கோயிலிலும் கல்வெட்டு இடம்பெற வில்லை. இக்குடைவரைக்கோயில் சமண சமயத்தைச் சேர்ந்ததாகும். இது வைணவக் குடைவரைக்கோயிலாக மாற்றப்பட்டுள்ளது. இதனருகே உள்ள பழியிலிஈசுவரம் எனும் சிவனது குடைவரையைச் சாத்தன் பழியிலி என்பான் தனது பதினேழாவது ஆண்டில் (கி.பி. 876 இல்) வெட்டுவித்தான்[37]. என்வே, அருகிலுள்ள வைணவக் குடைவரைக் கோயிலும் இவனது காலத்தை ஒட்டியே குடையப்பட்டிருக்கலாம்.

இதுவரை கண்டவற்றிலிருந்து பாண்டிய நாட்டு வைணவக் குடைவரைகளில் திருத்தங்கல் குடைவரையும், திருமெய்யம் குடைவரையும் கி.பி. ஏழாம் நூற்றாண்டினைச் சேர்ந்ததாக உள்ளன. யானைமலை, திருப்பரங்குன்றம், சொக்கம்பட்டி, திருச்சி ஆகிய குடைவரைகள் கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகவும்,

மலையடிப்பட்டி, நார்த்தாமலைக் குடைவரைகள் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டினைச் சேர்ந்ததாகவும் உள்ளன. எனினும், கல்வெட்டுகள் இல்லாத கோயில்களின் காலக்கணக்கீடு சரியானதென உறுதியாகக் கூறமுடியாது.

## தொகுப்புரை

பாண்டியநாட்டு வைணவக் குடைவரைகளை அதன் தரை அமைப்பு, திசை அமைப்பு, கருவறை, முகமண்டபம் முதலியவற்றின் அமைப்பு, கருவறை இறையுருவச்சிற்பவமைதி, முகமண்டபச் சிற்பவமைதி, குடைவரையின் காலம் ஆகிய தலைப்புகளின்கீழ் ஒப்பு நோக்கிப் பார்த்ததில் கீழ்க்காணும் முடிவுகள் பெறப்படுகின்றன.

பாண்டியநாட்டு வைணவக் குடைவரைகள் எட்டனுள் மூன்று முத்தரையர்களாலும் ஐந்து பாண்டியர்களாலும் குடைவிக்கப்பபட்ட தாகக் கொள்ளலாம்.

பாண்டியநாட்டு வைணவக் குடைவரைக் கோயில்கள் சதுரம், நீள் சதுரம் ஆகிய அமைப்புக்களில் இடம்பெறுகின்றன. இவைகள் அனைத்தும் முகமண்டபம் கொண்டு விளங்குகின்றன.

இரட்டைக்கருவறை அமைப்பினைக் கொண்ட குடைவரை எனில் சிவனுக்கும், விஷ்ணுவுக்குமாக அமைக்கப்படுகிறது. இதில், சிவனது கருவறை விஷ்ணுவின் கருவறையைவிடச் சற்றுப் பெரியதாக அமைகிறது. பொதுவாக இரட்டைக் கருவறைக் கோயில்களில் கிழக்கு முகமாக அமைந்துள்ள சிவன் சன்னதிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. இருப்பினும் இக்கோயில்களில் திருமாலுக்குத் தனிக்கருவறை அமைந்திருப்பதே அவருக்குக் கொடுக்கப்பட்ட தனிச் சிறப்பெனக் கொண்டு இங்கு அவை கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

இக்குடைவரைகள் கிழக்குத் திசையை நோக்கி மட்டும் அமையாது பாறைகளின் அமைப்பைப் பொறுத்து எல்லாத்திசைகளை நோக்கியும் அமைகின்றன.

முகமண்டபம் பொதுவாக இரண்டு அரைத்தூண்களையும், இரண்டு முழுத்தூண்களையும் கொண்டுள்ளது. முத்தரையரது குடைவரைகளில் மலையடிப்பட்டி குடைவரைத் தூண்கள் மட்டும் பல்லவ மன்னன் இராசசிம்மன் பாணித்தூண்களாக அமைந்துள்ளன. பாண்டியரது தூண்கள் செங்குத்தாக சதுரம், எண்பட்டை, சதுரம் என்ற அமைப்பில் அமைகின்றன. திருச்சியில் தூண் முழுவதும் எண்பட்டையாகவும், நார்த்தாமலை மற்றும் சொக்கம்பட்டியில் தூண்கள் சதுரம், எண்பட்டை எனச் செதுக்கப்படாமலும் இடம் பெறுகின்றன.இந்த முற்றுப்பெறாத நிலைக்கான காரணம் தெரியவில்லை.



கருவறைகளில் திருமாலின் நின்ற, இருந்த, கிடந்த எனும் மூன்று கோலங்களும் இடம்பெற்றுள்ளன. திருமெய்யத்தில் மட்டும் மது கைடபர் வதம் சித்தரிக்கப்பட்டுள்ளது. சொக்கம்பட்டி திருமால் கருவறையில் உள்ள முழுமையாகச் செதுக்கப்படாத சிற்பத்தை திருமால் சிற்பம் என அடையாளம் காண முடிகிறது.

திருத்தங்கல் குடைவரையில் உள்ள திருமால் சிற்பம் குடைவரையின் காலத்தைச் சேர்ந்தாக அமையாது பிற்காலத்தில் அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது.

முகமண்டபங்களில் துவாரபாலகர் சிற்பங்கள் அன்றி பிற சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன. அவ்வாறு இடம்பெறும் பிற சிற்பங்களும் இறையுருவச் சிற்பங்களாகவே பெரும்பாலும் அமைகின்றன. சொக்கம்பட்டியில் மட்டும் ஆண், பெண் உருவங்கள் இடம்பெற்றுள்ளன. அவை அரச குடும்பத்தாரது உருவங்களாகவோ கொடையாளி (donor) யின் உருவங்களாகவோ இருக்கலாம்.

துவாரபாலகர் சிற்பங்களைப் பார்க்கும்போது இரண்டு துவாரபாலகர் சிற்பங்கள் முதல் எட்டு துவாரபாலகர் சிற்பங்கள் வரை இடம்பெற்றுள்ளன. இது குடைவரையின் அளவு மற்றும் அமைப்பைப் பொறுத்து அமைந்துள்ளது.

திருப்பரங்குன்றம், திருச்சி குடைவரைகளில் முறையே ஐவகைச் சமயம் மற்றும் அறுவகைச் சமயக் கோட்பாடுகளைப் பின் பற்றிச் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இம்முறை முதன்முதலில் குப்தர் காலத்தில் தொடங்கப்பட்டது.

நார்த்தாமலையில் காணப்படும் துவாதச ஆதித்தியர் புடைப்புச் சிற்பங்கள் தமிழகத்தில் வேறு எந்தக் குடைவரையிலும் காண இயலாத அரிதான சிற்பங்களாகும். திருப்பரங்குன்றம் குடைவரையில் உள்ள சதுரதாண்டவமூர்த்தி புடைப்புருவம் அரிய படைப்பாகும்.

பாண்டியநாட்டு வைணவக் குடைவரைகள் கி.பி.ஏழாம் நூற்றாண்டு முதல் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரையிலான காலத்தைச் சேர்ந்ததாக உள்ளன. இவற்றில், காலத்தால் முந்தியது திருமெய்யம் குடைவரையும், காலத்தால் பிந்தியது நார்த்தாமலை குடைவரையுமாகும்.

பல்லவர்களுக்குச் சில ஆண்டுகளுக்குப் பின்னர்தான் பாண்டியர் குடைவரைகளை அமைக்கும் பணியில் ஈடுபட்ட போதிலும் படைப்பு எண்ணிக்கையில் முன்னவரைப் பின்னவர் விஞ்சிவிட்டனர் என கே.வி. சௌந்தரராசன்[38] குறிப்பிட்டிருப்பது சாலப்பொருத்தமாகும். மேலும், குடைவரைகளில் சிற்பங்களை அமைப்பதில் பாண்டியரே விஞ்சியுள்ளனர் எனக் கூறுவதிலும் தவறில்லை. ஆனால், பல்லவர் தம் சிற்பங்கள் கதைத் தொகுதிகளாக அமைந்துள்ளன. பாண்டியர்தம் சிற்பங்களோ பெரும்பாலும் தனிச்சிற்பங்களாகவே இடம்பெற்றுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1. Stella Kramrisch, **The Hindu Temple, p.22.**
2. பெருங்கற்கால இறந்தோர் புதைவிடங்களில் கற்கள் வட்டமாக வைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.
3. முதலாம் மகேந்திரவர்மனது குடைவரைகளில் திருச்சி மேல்குடைவரைக் கோயிலில் மட்டும் கங்காதரர் புடைப்புச் சிற்பம் இடம்பெற்றுள்ளது. எனினும், இது பிற்காலத்தில் செதுக்கப்பட்டதாகக் கருதப்படுகிறது.
4. A.R.E., No. 358 of 1959-60

   இச்செய்தியைக் குறிக்கும் இக்கல்வெட்டு குகைக்கோயிலின் தெற்குத் தூணின் போதிகையில் செதுக்கப்பட்டுள்ளது. இதன்படி இக்குடைவரை இம்மன்னனின் 17-வது ஆட்சியாண்டில் சாத்தன் ஏறாண் என்பவனால் வெட்டுவிக்கப்பட்டதாகும்.
5. திருமெய்யத்திலும் நார்த்தாமலையிலும் மலையடிப்பட்டியிலும் அருகருகே வைணவத்திற்கும், சைவத்திற்கும் தனித்தனியாகக் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.
6. பொதுவாக ஒரு கோயிலில் ஒன்றுக்கும் மேற்பட்ட சன்னதிகள் அமைக்கப்பட்டால் கிழக்கு நோக்கி அமைக்கப்பட்டுள்ள சன்னதியே பிரதானக் கருவறையாக அமைவது மரபு. அவ்வகையில் இக்கோயில்கள் இரட்டைக் கருவறைகளை எதிரெதிரே கொண்டிருப்பினும் சிவனது சன்னதியே கிழக்கு நோக்கி உள்ளது.
7. R. Nagasamy, **Damilica**, vol.I., p.74.
8. ஆனால், மதுரைக்கருகே லாடன் கோயிலில் இறையுருவம் அமர்ந்த நிலையில் இருப்பினும் அதன் கருவறை செவ்வகவடிவில் உள்ளது.
9. ஆனால், திருத்தங்கல் குடைவரையில் திருமால் கிடந்த கோலத்தில் இடம்பெற்றிருப்பினும் கருவறை சதுர அமைப்பில் அமைந்துள்ளது.
10. திருத்தங்கல் குடைவரையின் அளவுகள் சமசதுரமாக இல்லை. எனினும், இக்குடைவரையின் அமைப்பை நீள்செவ்வகமாகக் கொள்ள இயலாது. எனவே, சதுர அமைப்பின் கீழ் இக்குடைவரை இடம் பெறுகிறது.
11. சொக்கம்பட்டி குடைவரை சமணக்குடைவரை என கே.வி சௌந்தரராசன் கூறுகிறார். ஆனால், அதற்கான ஆதாரங்களைக் கூறவில்லை. இக்குகையின் முகப்பில் உள்ள ஒரு ஆண் மற்றும் பெண்ணின் தலைமீது நாகம் காட்டப்பட்டிருப்பது சமணம் (ஐந்துதலை நாகத்தைத் தலை மீது கொண்ட பார்சுவநாதர் போன்று) அல்லது நாகர்களின் செல்வாக்கினைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.
12. மகேந்திரவர்மன்கால பாணித்தூண்கள் குட்டையாக இருக்கும். இது மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு மேலும், கீழும் சதுரமாகவும் நடுவில் எண்பட்டையுடையதாகவும் அமையும். இச்சதுரப்பகுதிகளில் தாமரை வடிவங்கள் வட்டமாக இடம்பெறும். தூண்களின் மேற்பகுதியில் போதிகை கடல் அலை போன்ற (தரங்க) அமைப்பைப் பெற்று விளங்கும்.
13. மாமல்லன் பாணித்தூண்கள் மகேந்திரவர்மன் பாணித் தூண்களைப் போல் தட்டையாக இல்லாது சற்று உயரத்துடன் மெலிதாகவும் காணப்படும். மேலும், இவற்றின் மேற்பகுதி மாலகுதானகம், பத்மம், கலசம்,

தாடி, குடம், பத்மம், பலகை முதலிய உறுப்புக்களைப் பெற்றிருக்கும். தூணின் கீழ்ச்சதுரப்பகுதியில் சிங்கம் அமர்ந்த நிலையில் இடம்பெறும்.

14. R.Champakalakshmi, **Vaishnava Iconography in Tamil Country**, p.71.

15. *மேலது, ப.68*

16. இங்குள்ள தேவியின் உருவம் ஸ்ரீதேவியா? எனத் தெரியவில்லை. அறிஞர்கள் பூதேவி என்றே சொல்கின்றனர். (ஆர். செண்பகலட்சுமி) இங்குள்ள சிற்பம் ஸ்ரீதேவிதான் என்பதற்குக் காரணங்களை அவர்கள் தரவில்லை. ஒருவேளை திருமாலின் மார்பிலேயே ஸ்ரீவத்ஷமாக ஸ்ரீதேவி அமர்ந்திருப்பதாக நாம் கொள்ளலாம்.

17. இச்சிற்பங்கள் சமீப காலத்தில் இடம் பெற்றுள்ளதாகத் தெரிகிறது.

18. R.Champakalashmi, *முன்னது,* p.94.

19. பல்லவர் காலத்துக் குடைவரைகளில் லிங்கம் அமைக்கப்படவில்லை. மாறாக லிங்கம் வைப்பதற்கான சிறுபள்ளம் மட்டும் இடம் பெற்றது. மேலும், அக்காலத்தில் லிங்கம் கல்லினால் செய்யப்படாது மரத்தால் செய்யப்பட்டிருக்கலாம். அதனால் அத்தகு லிங்கம் நாளடைவில் அழிந்துவிட்டது. மரத்தால் செய்யப்பட்ட லிங்கத்திருவுருவிற்கு அபிஷேகம் செய்ய இயலாது என்பதால் அக்காலக் குடைவரைகளில் திருமஞ்சனநீர் செல்வதற்கான துவாரமோ, பிரநாளமோ இடம் பெறவில்லை.

20. Benjamin Rowland, **The Art and Architecture of India,** Fig.36, 37

21. J.C. Harle, **Art and Architecture of Indian Subcontinent** Pl.33.

22. Susan L.Huntington, **The Art of Ancient India,** Figs., 9.9, 9.10.

23. நார்த்தாமலையில் இடம்பெற்றுள்ள இத்துவாதச ஆதித்தியர் சிற்பங்கள் கொணார்க்கில் (konarak) உள்ள 13-ஆம் நூற்றாண்டைய சூரியனார் கோயிலில் இடம்பெறும் துவாதச ஆதித்தியர் சிற்பங்களுடன் ஒப்புநோக்கத்தக்கன. வேதகாலத்தில் சூரியனை நாராயணன் என்று கருதினர். எனவே, விஷ்ணுவுக்கு சூரிய நாராயணன் என்று பெயர் வந்தது. வேதத்தில் விஷ்ணு ஆதித்தியருள் ஒருவராகக் கருதப்பட்டார்.

(ஆர். செண்பகலட்சுமி) வேதகாலத்தில் ஆதித்தியரின் எண்ணிக்கை ஆறாக இருந்தது. பின்னர் ஏழு, எட்டு என்ற அளவில் வளர்ந்து இறுதியில் ஆதித்தியர் பன்னிருவர் என்ற நிலையினை அடைந்தது.

24. கி.பி பத்தாம் நூற்றாண்டுக்கு முன்னர் குடைவரைகளில் திருமாலுக்கருகில் ஸ்ரீதேவியை அமைக்கும் வழக்கம் இல்லை என கே.வி. சௌந்தரராசன் கருதுகின்றார்.

25. G. சேதுராமன், தமிழ்நாட்டு சமுதாயப் பண்பாட்டுக் கலை வரலாறு, 1997, (ப.265).

26. நவகண்டம் கொடுக்கும் மரபு தமிழகத்தில் முதன்முதலில் கி.பி. ஏழாம் நூற்றாண்டில் மகாபலிபுரத்து திரௌபதி இரதத்திலேயே காட்டப்பட்டுள்ளது.

27. சொக்கம்பட்டிக்கருகிலுள்ள பேச்சிப்பாறை மலைப்பகுதியில் நாகர்கள் எனும் ஒருவகை மலை சாதியினர் முற்காலந்தொட்டே இருந்து வந்துள்ளனர். இவர்கள் நாகத்தை வணங்குபவர்கள் ஆவர். சொக்கம்பட்டி குடைவரையானது நாகர்கள் வாழ்ந்த பகுதியில் உள்ள மலையில் இடம்பெற்றுள்ளதால் அதில் இடம்பெறும் அரசன், அரசிக்கு தலையில்

நாகம் இடம்பெறச் செய்துள்ளதாகக் கருதலாம். இன்றளவும் அப்பகுதியில் நாக வழிபாடு சிறப்புற்று விளங்கிவருகிறது.

28. இவரே மதுரகவியாழ்வார் என கே.வி. இராமன் கருதுகின்றார். *கே.வி. இராமன், பாண்டியர் வரலாறு, ப.270.*

29. S.I.I., Vol.XIV, Nos.453, 454.

30. Ibid., III and text, No.8.

31. *கே.வி.இராமன், முன்னது, ப.271.*

32. *மேலது, ப.271.*

33. K.V.Soundararajan, **The Art of South India, TamilNadu and Kerala**, p.141.

34. P.S.I., Series, No.13., p.14.

35. Ibid., No.18.

36. *பாண்டிய நாட்டில் பெரும்பாலான இடங்களில் இரண்டு குடைவரைகள் அருகருகே தோற்றுவிக்கப்பட்டுள்ளன. உதாரணமாக யானைமலை நரசிங்கப்பெருமாள் கோயில், லாடன் கோயில்; திருப்பரங்குன்றம் சிவன் குடைவரை, தென்பரங்குன்றம் உமையாண்டார் குடைவரை; நார்த்தாமலை சிவன் குடைவரை, விஷ்ணு குடைவரை ஆகியவற்றைக் கூறலாம். எனவே, இரண்டு குடைவரைகள் ஒரே காலத்தில் துவக்கப்பட்டதற்கான சான்றுகள் இல்லாவிடினும் இக்குடைவரைகளின் காலம் சற்றேறக்குறைய ஒரே காலத்தைச் சேர்ந்ததாகக் கொள்ளலாம்.*

37. A.R.E., Nos. 453, 454, of 1906.

38. K.V.Soundararajan, **Early Pandya, Muttarayar and Irukkuvel Architecture studies in Indian, Temple Architecture**, 1975, pp., 240-250.

2

# கோயில்களின் காலம்

## முன்னுரை

பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களில் இங்கு ஆய்வுக்கு எடுத்துக்கொண்டுள்ள இருபத்திமூன்று கோயில்களும் பல்வேறு காலங்களில் கட்டப்பட்டு விரிவுபடுத்தப்பட்டவையாகும். மேலும், பிரதான விமானமும் துணைச் சன்னதிகளும் மண்டபங்கள் பலவும் காலங்காலமாகக் கட்டப்பட்டு இன்று பெருங்கோயில் அமைப்பில் திகழ்கின்றன. ஏறக்குறைய கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டு வரை ஆழ்வார்களால் இக்கோயில்களில் பெரும்பாலானவை பாடப்பட்டவையாகும். ஆனால், அன்று அவர்கள் பாடிய (மங்களாசாசனம் செய்த) போது இருந்த கட்டடங்கள் ஒன்று கூட இன்று கிடைக்கவில்லை. காலத்தின் மாற்றத்தாலும் இயற்கையின் சீற்றத்தாலும் மனிதர்களின் காழ்ப்புணர்வினாலும் இன்ன பிற காரணங்களாலும் அவை அழிந்தோ பாதுகாக்கப்பட்டோ இன்றைய நிலையை அடைந்துள்ளன.

கோயில்க்ளின் காலம் எனும் இவ்வியலில் கோயில் விமான்த்தின் காலத்தை மட்டுமே காண்பது நோக்கமாக அமைகிறது. இங்கு, எடுத்துக் கொள்ளப்பட்ட கோயில்களின் காலத்தைக் கணக்கிடுவதில் சில சிக்கல்களும் உள்ளன. உதாரணமாக சில கோயில்களில் இடம்பெறும் கல்வெட்டுகள் ஒரு காலகட்டத்தைச் சேர்ந்ததாகவும் கட்டடக் கலைப்பாணி மற்றொரு காலகட்டத்தைச் சேர்ந்ததாகவும் உள்ளது. இவ்வாறு இடம்பெறும்போது கல்வெட்டை மட்டுமோ, கலைப்பாணியை மட்டுமோ வைத்துக் காலத்தைக் கூறமுடியவில்லை. இருப்பினும் இதுபோன்ற கோயில்களில் கலைப்பாணியே காலம் கூறப் பெரிதும் துணை செய்கிறது.

அடுத்ததாக, குறிப்பிட்ட ஓர் அரசபரம்பரையினர் தங்களுக்கு முற்பட்ட அரசபரம்பரையினரின் கலைப்பாணியைப் பின்பற்றியும் கோயில்களை அமைத்துள்ளனர். இத்தகைய கோயில்களில் பின்னைய அரசபரம்பரையினரின் கலைப்பாணியைச் சேர்ந்த ஏதேனும் ஒரு கூறு அக்கட்டடத்தில் இடம்பெற்றிருப்பின் அதைவைத்து அக்கோயில் முன்னைய அரசபரம்பரையினரின் பணியல்ல. பின்னைய அரச பரம்பரையினருடையது எனக் கொள்ளலாம். மேலும், கோயில்களில் இடம்பெறும் பெரும்பாலான கல்வெட்டுகள் கோயில்களுக்கு தானம்

கொடுத்த செய்தியைப் பற்றியதாகவே உள்ளன. இவ் இயலில் பாண்டியரின் காலத்தை கே.வி. இராமன் அவர்களின் "பாண்டியர் வரலாறு" எனும் நூலின் துணை கொண்டும், சோழபாண்டியர் மற்றும் சோழர்களின் காலம் எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியம் அவர்களின் "சோழர் கலைப்பாணி" எனும் நூலின் துணை கொண்டும் கணக்கிடப்படுகின்றன. வாணாதிராயர்களின் காலத்தை வெ. வேதாச்சலம் அவர்களின் "பாண்டிய நாட்டில் வாணாதிராயர்கள்" எனும் நூலின் துணை கொண்டும், விசயநகர-நாயக்கரின் காலத்தைச் சத்யநாதஐயரின் "மதுரை நாயக்கர் வரலாறு" எனும் நூலின் அடிப்படையிலும் நிறுவப்பட்டுள்ளது. நிர்ணயிக்கப்பட்ட கோயில்களின் காலத்தின் அடிப்படையில் இங்கு கோயில்கள் வரிசைப்படுத்தப்பட்டு காலம் கூறப்பட்டுள்ளது.

## மன்னார்கோயில் – இராசகோபாலசுவாமி கோயில்

மன்னார்கோயில் இராசகோபாலசுவாமி கோயில் கருவறையும் அர்த்தமண்டபமும் ஒரே காலத்தில் கட்டப்பட்டதாகும். கருவறை மற்றும் அர்த்த மண்டபத்தின் அதிட்டானத்தில் உள்ள ஜகதி மற்றும் விருத்த குமுதத்தில் தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய மூன்று பக்கங்களிலும் இக்கோயில் கட்டப்பட்டது தொடர்பான நேரிடையான செய்தி தரும் கல்வெட்டுக்களும் இக்கோயிலுக்கு நிவந்தங்கள் அளிக்கப்பட்டமை கூறும் கல்வெட்டுக்களும் இடம்பெற்றுள்ளன. அதன்படி சோழப்பேரரசர் இராசேந்திர சோழனது இருபத்தி நான்காவது ஆட்சியாண்டில் (கி.பி 1036) சேரமானார் இராசசிம்மனால் இக்கோயில் கட்டுவிக்கப்பட்டது என்றும், இக்கோயிலுக்கு இராசேந்திரனது பெயர் இடப்பட்டு "இராசேந்திர விண்ணகரம்" என்று அழைக்கப்பட்டது என்றும் அறிகிறோம். இக்கோயிலில் அதிட்டானம் முதல் கபோத்தின் மேல் இடம்பெறும் யாளிவரிவரைக் கற்களாலான கட்டுமானம் மாற்றப்படாமல் அப்படியே உள்ளது. எனவே, இக்கோயிலின் காலம் கி.பி.பதினொன்றாம் நூற்றாண்டு ஆகும். இக்கோயிலின் மேற்பகுதி பழுதுபார்க்கப்பட்டு விசயநகர-நாயக்கர் காலத்தில் (15 - 17-ஆம் நூற்றாண்டுகள்) திருத்தி அமைக்கப்பட்டுள்ளன.

## திருக்கோளூர் – வைத்தமாநிதிப்பெருமாள் கோயில்

திருக்கோளூர் வைத்தமாநிதிப்பெருமாள் கோயிலில் தற்போது இடம்பெறும் கல்வெட்டுக்களில் காலத்தால் முந்தியது கருவறைச் சுவரில் அமைந்துள்ள கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்[2] (கி.பி. 1216-1239)இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்[3] (கி.பி. 1238-1251) ஆகியோருடைய கல்வெட்டுக் களாகும். ஆனால், இவை இக்கோயிலுக்கு நிவந்தங்கள் அளித்தது தொடர்பான கல்வெட்டுக்களாகும். எனவே, இக்கோயில் இக்கல்வெட்டுக்களுக்கு சற்று முன்னமே கட்டப்பட்டிருக்க வேண்டும்.

மேலும், இக்கோயிலில் இடம்பெற்றுள்ள சதுர அமைப்புடன் விளங்கும் அரைத்தூண், வெட்டுப்போதிகை, அன்னவரிசையுடன் கூடிய எழுதகம். தாழ்வாரக்கட்டை அமைப்பு இல்லாத கபோதம் ஆகிய உறுப்புக்களின் அமைப்பானது, பிற்காலப் பாண்டியரது கலைப் பாணியைச் சேர்ந்ததாக இருப்பதால் இக்கோயிலை கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கொள்ளலாம்.

## நாங்குனேரி – வானமாமலை கோயில்

முற்காலப் பாண்டியர் காலத்தில் நாங்குனேரி வானமாமலை கோயில் மிகச் சிறப்புற்று விளங்கியுள்ளது என்பதனை இன்றைய கோயிலின் கருவறைப் பிரகாரச் சுவரில் சாய்த்து வைக்கப்பட்டுள்ள முற்காலப்பாண்டியர் காலத்தைச் சேர்ந்த சிற்பங்களின் மூலம் அறிய முடிகின்றது. இவை, முற்காலப்பாண்டியரின் கலைக்கு எடுத்துக் காட்டாய் விளங்குகின்றன.

தற்போதுள்ள கோயிலில் பிற்காலப்பாண்டியர் மற்றும் விசயநகர-நாயக்கரது கல்வெட்டுக்கள் அதிகமாக இடம்பெற்றுள்ளன. இவற்றில் காலத்தால் முந்திய கல்வெட்டு முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனது (கி.பி. 1229) பதின்மூன்றாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டாகும்.[4] எனவே, இக்கோயில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் புதுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

மேலும், தற்போதுள்ள விமானத்தில் இடம்பெற்றுள்ள சிம்ம முகத்துடன் துவங்கி, பூமுனை இன்றி எளிமையாக விளங்கும் பிரநாளம் சதுரவடிவில் மட்டும் இடம்பெற்றுள்ள அரைத்தூண்களின் கம்புப்பகுதி, ஆப்புகள் நீட்டிய வெட்டுப்போதிகை, பத்ம வரிசை இடம்பெறும் எழுதகம், தாழ்வாரக்கட்டை அமைப்பு இல்லாத கபோதம் முதலான அமைப்புகள் இக்கோயில் பிற்காலப் பாண்டியர் காலத்தது என்பதற்கு இன்றுள்ள நிலையில் ஆதாரங்களாக அமைகின்றன. எனவே, இக்கோயிலை கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கொள்ளலாம்.

## பெருங்குளம் – ஸ்ரீநிவாசன் கோயில்

பெருங்குளம் ஸ்ரீநிவாசன் கோயிலில் இடம்பெற்றுள்ள கல்வெட்டு களில் காலத்தால் முற்பட்டது. சடையவர்மன் குலசேகரபாண்டியனது (கி.பி. 1190-1217) கல்வெட்டாகும்.[5] மேலும், இக்கோயில் கட்டடக்கலை அமைப்பில் இடம்பெறும் சதுரமான கம்புப்பகுதியுடன் அமைந்த அரைத்தூண், அன்னவரிசையுடன் கூடிய எழுதகம், தாழ்வாரக்கட்டை அமைப்பு இல்லாத கபோதம் என பெரும்பாலான கலைக்கூறுகள் பிற்காலப்பாண்டியர் கலை அமைப்பில் அமைந்திருக்கின்றன. எனினும், சிறு மொட்டுவடிவப் போதிகை, சாலை அமைப்புடன் கூடிய தேவகோட்டம் முதலியன விசயநகர-நாயக்கர் காலத்துக்

கலையமைப்பைக் கொண்டு விளங்குவதால் இக்கோயில் கி.பி. பதினான்கு - பதினைந்தாம் நூற்றாண்டுகளில் புதுப்பிக்கப்பட்டிருக்க வேண்டும்.

## தொலைவில்லிமங்கலம் – ஸ்ரீநிவாசன் கோயில்

தொலைவில்லிமங்கலம் ஸ்ரீநிவாசன் கோயிலில் தற்போதுள்ள கட்டடக்கலைக் கூறுகளில் உபபீடம் அற்ற பாதபந்த அதிட்டானம், சிம்ம முகமோ, அலங்காரமோ இன்றி அமைந்துள்ள பிரநாளம், சதுர கம்புப்பகுதியையுடைய அரைத்தூண், அன்னவரிசையுடன் கூடிய எழுதகம், சாதாரண கபோத அமைப்பு முதலியன பிற்காலப் பாண்டியரது கலைப்பாணியில் அமைந்துள்ளன. ஆனால், போதிகை மட்டும் பூமுனைப் போதிகையாக அமைந்துள்ளது. இப்போதிகை விசயநகரர் கலைப்பாணியைச் சேர்ந்ததாகும். எனவே, இக்கோயிலை கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகச் கருதலாம்.

## தொலைவில்லிமங்கலம் – அரவிந்தலோசனன் கோயில்

தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் கோயிலில் கல்வெட்டுக்கள் இடம்பெறவில்லை. எனவே, தற்போதுள்ள கட்டடக் கலை அமைப்பே கோயிலின் காலத்தை அறிய உதவுகிறது.

சதுர அமைப்புடைய கம்புப்பகுதியைக் கொண்ட அரைத்தூண்கள், அன்னவரிசையுடன் கூடிய எழுதகம், ஆலிலை வேலைப்பாடுகளுடன் அமைந்த கபோதம், விமானதளத்தில் இடம்பெற்றுள்ள கிரீவகோட்டத்தில் தெற்கு, மேற்கு, வடக்கு, கிழக்கு ஆகிய பக்கங்களில் முறையே தட்சிணாமூர்த்தி, யோகநரசிம்மர். பிரம்மன், இந்திரன் ஆகியோர் இடம்பெறும் அமைப்பு போன்ற பெரும்பாலான உறுப்புக்கள் பிற்காலப் பாண்டியரது கலைப்பாணியில் திகழ்ந்தாலும் போதிகை, மலர்ப்போதிகையாக விளங்குவதால் இக்கோயிலை விசயநகர-நாயக்கர் தமிழகத்தில் வேரூன்றிய காலமான கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கொள்ளலாம்.

## அழகர் கோயில் – கள்ளழகர் கோயில்

கள்ளழகர் கோயில் யாரால் கட்டப்பட்டது என்பதற்கான நேரடிக் கல்வெட்டுக் கிடைத்துள்ளது. அதன்படி கி.பி. 1464 ல் திருமாலிருஞ் சோலை நின்றான் மாபலி உறங்காவில்லிதாச வாணாதிராயரது[6] அறக்கட்டளைக்கு இணங்க திருவாளன் சோமாஜியால் உபானம் முதல் கலசம் வரை புதுப்பிக்கப்பட்டது என்பதை அறிய முடிகிறது. எனவே, இக்கோயிலின் காலம் கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டு ஆகும்.

தற்போதுள்ள இக்கோயிலின் கட்டடக் கலைப்பாணியானது பிற்காலப் பாண்டியரது கலைப்பாணியைச் சேர்ந்ததாகும். இவ்விமானத்தின் கட்டடக்கலை உறுப்புகளில் இடம்பெற்றுள்ள ஜகதி,

விருத்தகுமுதம், வியாளவரி, வேதி என்ற உறுப்புக்களுடன் அமைந்த (உபபீடம் அற்ற) பிரதிபந்த அதிட்டானம், சுவர்ப்பகுதியில் இடம்பெறும் அரைத்தூண்களின் மேல்உள்ள போதிகை பூமுனையின்றி சிறு மொட்டுப் போல் அமைந்திருப்பதும், எழுதகத்தில் பூதவரி ஆகிய அமைப்பும் பிற்காலப் பாண்டியரது கலைப்பாணியில் அமைந்தவையாகும். எனவே, அழகர்கோயில் கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட பிற்காலப் பாண்டியர் கலைப்பாணியைத் தழுவிய கோயிலாகக் கொள்ளலாம்.

## திருக்குறுங்குடி – நின்றநம்பி கோயில்

திருக்குறுங்குடி நின்றநம்பி கோயில் கருவறையின் வடக்குச் சுவரில் இடம்பெற்றுள்ள மாறவர்மன் சுந்தரபாண்டியனது (கி.பி. 1239 ஆம் வருடத்திய) கல்வெட்டை வைத்து இக்கோயிலின் காலத்தை கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு எனக் கொள்ளலாம். மேலும், கட்டடக் கலைக் கூறுகளில் பூதவரிசையுடன் கூடிய எழுதகம், தாழ்வாரக்கட்டை அமைப்பில்லாத கபோதம், தரங்க அமைப்பைப் பெற்று விளங்கும் போதிகை முதலானவை பிற்காலப் பாண்டியர் கலைப்பாணியின் இறுதிக் காலத்தைச் சேர்ந்ததாக விளங்குகிறது. மேலும் இங்கு அரைத்தூண்களின் சதுரப்பகுதிகளில் இடம்பெறும் நாகபந்தம் பிற்காலப் பாண்டியரின் இறுதிக்காலத்திலும் விசயநகரர் ஆட்சி தொடங்கும் தருணத்திலும் புகுத்தப்பட்டதால் இக்கோயிலைக் கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்ககாலம் எனக் கொள்ளலாம்.

## ஸ்ரீவில்லிபுத்தூர் – வடபத்ரசாயி கோயில்

ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி கோயில் விமானம் அதிக மாற்றங்களைப் பெற்றுவந்துள்ளது. மேலும், இன்று காணப்படும் விமானத்தில் கூடப் பல்வேறு காலகட்டங்களில் கட்டப்பட்ட பகுதிகளைக் காணலாம்.

இக்கோயிலைக் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த பெரியாழ்வாரும் ஆண்டாளும் பாடியுள்ளனர். பெரியாழ்வார் தனது பாடலில் "வண்டு இன்னிசைக்கும் வில்லிபுத்தூர் இனிது அமர்ந்தாய்" என்று பாடியுள்ளார். எனவே, பெரியாழ்வாரது காலத்தில் இறைவனது திருக்கோலம் அமர்ந்த கோலமாக இருந்துள்ளது.

கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த சோழன் தலை கொண்ட வீரபாண்டியனின் கல்வெட்டு மகாமண்டபத்தின் தெற்குச் சுவரில் அமைந்துள்ளது. இதில், இவ் இறைவன் "ஜலசயனத்துக் கிடந்தருளிய பரமசுவாமி"[9] என்று குறிப்பிடப்பட்டுள்ளார். எனவே, பெரியாழ்வார் காலத்தில் இருந்த அமைப்பு இவனது காலத்தில் மாற்றம் அடைந்திருக்கலாம். அதாவது அமர்ந்த கோலத்திலிருந்து இறைவன் கிடந்த கோலத்திற்கு மாற்றப்பட்டிருக்க வேண்டும்.

இதனை அடுத்து, இக்கோயில் விமானத்தின் அதிட்டானத்தில் பல கல்வெட்டுக்கள் இடம்பெற்றுள்ளன. அதில் காலத்தால் முந்தியது திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் எனத் தொடங்கும் முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியனின்[10] (கி.பி. 1268-1311) காலத்தது ஆகும்.

எனவே, இவ்வதிட்டானம் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனலாம். மேலும், அதிட்டானம் உபபீடம் இன்றி ஜகதி, முப்பட்டைக் குமுதம், கண்டம், பட்டிகை, கண்டம், வேதி என்ற உறுப்புக்களைக் கொண்டு பாதபந்த அதிட்டானமாக அமைந்துள்ளமை மேற்கண்ட கருத்துக்கு அணிசேர்ப்பதாக அமைகிறது.

இவ்வதிட்டானத்திற்கு மேல் இடம்பெறும் மற்ற கல்வெட்டுக்கள் கி.பி. பதினைந்து, பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக உள்ளன. மேலும், அதிட்டானம் தவிர பிற உறுப்புக்களான பூமுனைப் போதிகை, சாலை அமைப்புடைய தேவகோட்டக் கபோதத்தின் கீழ் இடம்பெறும் தாழ்வாரக்கட்டை அமைப்பு, வளைந்த கட்டை அமைப்புடைய எழுதகம், தாழ்வாரக்கட்டை அமைப்புக் கபோதம் முதலியன விசயநகர - நாயக்கர் காலக் கலைப்பாணியில் அமைந்துள்ளதால் இக்கோயிலின் அதிட்டானத்திற்கு மேல் உள்ள பகுதிகள் கி.பி. பதினான்கு - பதினைந்தாம் நூற்றாண்டுகளில் திருத்தி அமைக்கப்பட்டிருக்க வேண்டுமெனக் கொள்ளலாம்.

## ஸ்ரீவில்லிபுத்தூர் – ஆண்டாள் கோயில்

ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயிலைக் கட்டியதற்கான நேரடிக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. இக்கோயில் அதிட்டானத்தில் இடம் பெறும் கல்வெட்டுகளில் சர்வபௌமன் சுந்தரத்தோளுடைய மாபலிவாணாதிராயன் (கி.பி. 1466 - 1488) எனும் பாண அரசன் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றைக் கட்டினான் என்பதை இவனது மூன்று கல்வெட்டுக்கள்[11] தெரிவிக்கின்றன. எனினும், இவனது காலத்திற்கு முந்திய இதே நூற்றாண்டினைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் பல இவ்வதிட்டானத்தில் இடம்பெற்றுள்ளதால் இவனது காலத்திற்குச் சற்றுமுன்னரே இங்குக் கோயில் இருந்துள்ளது என்பதை அறிய முடிகிறது.

இவனது காலத்திற்கு முந்தைய கல்வெட்டுக்களில் காலத்தால் முற்பட்ட கல்வெட்டு "கஜவேட்டை கண்டருளிய மதுராபுரி மாநாயகன் திருமாலிருஞ்சோலை நின்றான் மாபலிவாணாதிராயனுடைய (கி.பி. 1428 –1477) தாகும்.

## திருமெய்யம் சத்யகிரிநாதன் கோயில்

திருமெய்யம் கோயிலில் முதலாம் இராசராசனது[13] (கி.பி. 985–1014) கல்வெட்டும், பிற்காலப் பாண்டியரது கல்வெட்டுக்களும்[14] காணப்படுகின்றன. இக்கல்வெட்டுக்களில் காலத்தால் முற்பட்டது

சடையவர்மன் எனும் திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டியனின் (கி.பி. 1253-1274) கல்வெட்டாகும். மேலும், இக்கல்வெட்டு அர்த்த மண்டபத்தின் வடக்குச் சுவரில் இடம்பெற்றுள்ளது. சத்யகிரிநாதன் கோயில் கருவறையும், அர்த்த மண்டபமும் பிற்காலப் பாண்டியர் கட்டடக்கலை அமைப்பைப்பெற்று விளங்குகின்றன. உபபீடம் இல்லாத கபோதபந்த அதிட்டானம், தாழ்வாரக்கட்டை அமைப்பில்லாத கபோதம், பத்தமவரிசையுடன் கூடிய எழுதகம் முதலிய உறுப்புக்கள் பாண்டியர் கலைக்கு எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. எனவே, கல்வெட்டுகளின் துணைகொண்டும், கட்டடக்கலை அமைப்பின் துணைகொண்டும் இக்கோயிலைப் பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சேர்ந்ததாகக் கருதலாம்.

விசயநகர அரசர்களின் கல்வெட்டுக்களில் (கி.பி. 1522 – ஆம் ஆண்டு) கிருஷ்ணதேவராயரது கல்வெட்டும் இங்கு இடம்பெற்றுள்ளமை காணலாம்.

## வரகுணமங்கை – விசயாசனப்பெருமாள் கோயில்

வரகுணமங்கையில் தற்போதுள்ள கோயில் விமானத்தில் கல்வெட்டுக்கள் இடம்பெறவில்லை. எனவே, .கட்டடக்கலைப் பாணியை வைத்தே இதன் காலத்தைக் கூறமுடியும். இவ்விமானத்தில் வர்க்கபேத அதிட்டானம் உபபீடத்துடன் இடம்பெற்றுள்ளது. சுவர்ப் பகுதியில் இடம்பெறும் அரைத்தூண்கள் வட்டம், எண்பட்டை, பதினாறுபட்டை என அமைந்து, அதன் மேல் பூமுனைப்போதிகை காணப்படுகிறது. சாலை அமைப்புடன் கூடிய தேவகோட்டத்தில் சாலையின் கபோதத்தினுள் தாழ்வாரக் கட்டை அமைப்பு, எழுதகத்தில் இடம்பெறும் வளைந்த கட்டை அமைப்பு,கொடுங்கை மற்றும் அதன் கீழ் இடம்பெறும் தாழ்வாரக்கட்டை அமைப்பு முதலியன விசயநகர-நாயக்கரது கலைப்பாணியைச் சேர்ந்ததாகும். எனவே, இக்கோயில் முழுவதும் அவர்களது காலத்தில்தான் கட்டப்பட்டிருக்க வேண்டும்.

## திருப்புளியங்குடி – காய்சினவேந்தன் கோயில்

இக்கோயில் கருவறை, மற்றும் அர்த்த மண்டபத்தில் கல்வெட்டுக்கள் இடம்பெறவில்லை. எனவே, கட்டடக்கலைப் பாணியை வைத்தே இக்கோயிலின் காலத்தைக் கூற வேண்டியுள்ளது.

இக்கோயிலில் இடம்பெறும் பிரதிபந்த அதிட்டானம், சுவர்ப்குதியில் வட்டம், எண்பட்டை, பதினாறுபட்டை என அமைந்துள்ள அரைத் தூண்கள், பூமுனைப்போதிகை, சாலை அமைப்புடைய தேவகோட்டம், தேவகோட்ட கபோதத்தின்கீழ் தாழ்வாரக்கட்டை அமைப்பு, வளைந்த கட்டை அமைப்புடைய எழுதகம், தாழ்வாரக்கட்டை அமைப்புடைய கொடுங்கை முதலான அமைப்புக்கள் விசயநகர-நாயக்கர் காலக் கலைப்பாணியைச் சேர்ந்ததாகும். மேலும், இக்கோயில் கட்டடக்கலை

அமைப்பு பெரும்பான்மையும் வரகுணமங்கை கோயிலமைப்பைப் போன்றே அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

## திருக்கோட்டியூர் – உரகமெல்லணையான் கோயில்

திருக்கோட்டியூர் உரகமெல்லணையான் கோயிலானது பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார் ஆகிய ஆழ்வார்களால் பாடப்பட்ட கோயிலாகும். இவர்களது காலத்தில் இங்கு கோயில் இருந்துள்ளமையை இக்கோயிலில் சாமான்கள்வைக்கும் அறையின் சுவரில் உள்ள சடையன் மாறனின்[16] (கி.பி. 862 – 885) (II ஆம் வரகுணன்) வட்டெழுத்துக் கல்வெட்டால் அறிய முடிகின்றது.

இதனை அடுத்து, பிற்காலப் பாண்டியரது காலத்தில் இக்கோயில் மீண்டும் பல மாற்றத்திற்குள்ளாகி இருக்கலாம் என்பதனை தற்போதுள்ள கோயிலில் இடம்பெற்றுள்ள திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகரதேவன் (கி.பி. 1190–1217), சடையவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி வீரபாண்டியன் (கி.பி. 1253 – 1274), சுந்தரபாண்டிய தேவன் மாறவர்மன் எனும் திரிபுவனச் சக்கரவர்த்தி விக்கிரமபாண்டியன் (கி.பி. 1283 – 1296) ஆகியோரது கல்வெட்டுக்களால் அறியலாம்.

தற்போதுள்ள கோயில் கட்டடக்கலை விசயநகர-நாயக்கர் பாணியில் அமைந்துள்ளது. எனினும், சில உறுப்புக்கள் பாண்டியரது கலைப்பாணியில் இடம்பெற்றுள்ளன. மேலும், சில உறுப்புக்கள் சிதைவடைந்த பிற்காலப் பாண்டியரது கோயிலிலிருந்து அப்படியே எடுத்துப் பயன்படுத்தப்பட்டுள்ளதையும் காண முடிகிறது.

தற்போதுள்ள கோயிலில் விசயநகர-நாயக்கரது கல்வெட்டுக்களான மகாமண்டலேசுவர சதாசிவதேவ மகாராயரின் (கி.பி. 1542 – 1576) கல்வெட்டும், ரகுநாதநாயக்கரின் (கி.பி. 1607) கல்வெட்டும், வீரப்பிரதாப அச்சுததேவ மகாராஜ தேவரின் (கி.பி. 1532) கல்வெட்டும் இடம்பெற்றுள்ளன. இவற்றை நோக்கும்போது கட்டடக்கலை அமைப்பில் அரைத்தூண்களில் சதுரப் பகுதியின் மேல் இடம்பெறும் நாகபந்தம், பூமுனைப் போதிகை, சாலை அமைப்புடைய தேவகோட்ட கபோதத்தின் கீழ் தாழ்வாரக்கட்டை அமைப்பு முதலியன விசயநகர - நாயக்கரது கலைப்பாணியில் அமைந்துள்ளன

எனவே, கல்வெட்டின் துணைகொண்டும் கலைப்பாணியின் துணைகொண்டும் இக்கோயிலை கி.பி. பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதலாம்.

## தாடிக்கொம்பு – சௌந்தரராசப்பெருமாள் கோயில்

தாடிக்கொம்பு-சௌந்தரராசப்பெருமாள் கோயில் விசயநகர-நாயக்கர் கலைப்பாணியில் அமைந்துள்ளது. பாதபந்த உபபீடம், உருண்டையான தண்டுப்பகுதி, பத்மத்துடன் கூடிய முனை கொண்ட

பிரநாள அமைப்பு ஆகியன விசயநகர-நாயக்கர் பாணியில் அமைந்துள்ளன.

இக்கோயில் கருவறைச் சுவரில் இடம்பெற்றுள்ள மூன்று கல்வெட்டுக்களுமே [18] - நாயக்கர் காலத்தைச் சேர்ந்தவையாகும். இதில் காலத்தால் முந்திய கல்வெட்டு கி.பி. 1551 ஆம் வருடத்திய இராசேந்திர பரமேசுவரராமதேவன்[19] கல்வெட்டாகும். இவன் விசயநகர-நாயக்கர் காலத்தில் ஒரு மண்டலத் தலைவனாக இருந்திருக்க வேண்டும்.

## கிருஷ்ணாபுரம் – திருவேங்கடநாதன் கோயில்

விசயநகரப் பேரரசர் இராயர் பெயரால் வழங்கப்பட்ட கிருஷ்ணாபுரம் செப்புப் பட்டயத்தின் வாயிலாக திருவேங்கடநாதன் கோயில் எனும் இவ்வெங்கடாசலபதி கோயில் மதுரை கிருஷ்ணப்ப நாயக்கரால்[20] கட்டப்பட்டது என்பதை அறியமுடிகின்றது. இக்கோயிலில் இடம்பெற்றுள்ள கட்டடக்கலைக் கூறுகளை நோக்கும்போது அதிட்டானத்தில் இடம்பெறும் பிரநாளம் சிம்ம முகத்துடன் தொடங்கி, உருண்டையான தண்டுப்பகுதி மற்றும் பூமுனையுடன் அமைந்துள்ளது. இவ்வமைப்பு விசயநகர-நாயக்கரது பாணி அமைப்பாகும். எனவே, கட்டடக்கலைப்பாணியை வைத்தும், செப்புப்பட்டையத்தின் துணைகொண்டும் இக்கோயிலின் காலம் கிருஷ்ணப்பநாயக்கரின் காலமான கி.பி. பதினாறாம் நூற்றாண்டு[21] என்பது தெளிவாகின்றது.

## தென்திருப்பேரை – மகரநெடுங்குழைக்காதன் கோயில்

மகரநெடுங்குழைக்காதன் கோயில் பிரகாரத்தில் சோழ அரசர்கள் முதலாம் இராசராசன்[22] மற்றும் முதலாம் இராசேந்திரனின்[23] தமிழ்க் கல்வெட்டும் இடம்பெற்றுள்ளன. இவர்களது காலம் கி.பி. பதினாறாம் நூற்றாண்டின் துவக்ககாலம்[24] ஆகும். ஆனால் இன்றுள்ள கோயிலின் கட்டடக்கலைப்பாணி விசயநகர-நாயக்கரது பாணியில் அமைந்துள்ளது. இக்கோயிலில் இடம்பெறும் வர்க்கபேத அதிட்டானம், எண்பட்டை, பதினாறுபட்டையுடன் திகழும் அரைத்தூண்கள், அவற்றின் கீழ்ச் சதுரப்பகுதிகளில் இடம் பெறும் சிறு கோயில் அமைப்பு மற்றும் சிறுஅளவிலான சிற்பங்கள், சதுரப்பகுதிகளின் மேல் நாகபந்தம், அரைத்தூண்களின் மேற்பகுதிகளில் பூமுனைப் போதிகை, சாலை அமைப்புடன் கூடிய தேவகோட்ட கபோதத்தின் கீழ் தாழ்வாரக்கட்டை அமைப்பு, வளைந்த கட்டை அமைப்பு கொண்ட எழுதகம், தாழ்வாரக் கட்டை அமைப்பு கொண்ட கொடுங்கை ஆகியன விசயநகர-நாயக்கரது கலைப்பாணியில் அமைந்துள்ளன. எனவே, இக்கோயிலை கி.பி. பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதலாம். துவக்க காலத்திலிருந்த கோயில் திருத்தியமைக்கப்பட்டு அதிலிருந்த கல்வெட்டுகள் பிரகாரச் சுவரில் வைக்கப்பட்டிருக்கக் கூடும்.

## திருப்புல்லாணி – கல்யாணசெகந்நாதர் கோயில்

திருப்புல்லாணி செகந்நாதர் கோயிலைக் கட்டியதற்கான நேரடிக் கல்வெட்டுக்கள் இல்லை. இக்கோயிலின் இரண்டாம் கோபுர நுழைவாயிலின் வலப்பக்கம் சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டியன்[25] (கி.பி. 1216 – 1239) கல்வெட்டும், எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரன்[26] (கி.பி. 1268 – 1311) கல்வெட்டும் இடம் பெற்றுள்ளன. ஆனால், இவர்களது காலத்தைச் சேர்ந்த கட்டடக்கலை அமைப்பு காணப்படவில்லை. பழைய கோயில் திருத்தி அமைக்கப் பட்டிருக்க வேண்டும்.

தற்போதுள்ள கோயில் கட்டடக்கலை அமைப்பு விசயநகர-நாயக்கர் காலத்தைச் சேர்ந்ததாகும். செகந்நாதர் கோயில் கருவறையின் முன் உள்ள மண்டபத்தில் இடதுபக்கம் உள்ள சுவரில் வாணாதிராயர்[27] காலக் கல்வெட்டுக்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றில் காலத்தால் முந்தியது இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடைய மாபலி வாணாதிராயன் (கி.பி. 1515–1533)[28] கல்வெட்டாகும். எனவே, இக்கோயிலை இவனது காலத்தை ஒட்டியதாகக் கொள்ளலாம்.

மேலும், கட்டடக்கலை அமைப்பில் இடம்பெற்றுள்ள பூமுனைப் போதிகை, வளைந்தகட்டை அமைப்பைக் கொண்ட எழுதகம், தாழ்வாரக்கட்டை அமைப்பைக் கொண்ட கபோதம் முதலியவை விசயநகர-நாயக்கர் காலக் கட்டடக்கலையைச் சேர்ந்ததாக உள்ளதால் இக்கோயில் மாபலிவாணாதிராயனால் துவக்கப்பட்டு விசயநகர-நாயக்கரால் முடிக்கப்பட்டிருக்கலாம்.

## மதுரை – கூடலழகர் கோயில்

கூடலழகர் சுந்தரராசப்பெருமாள் கோயில் பற்றி சங்க இலக்கியங்களிலேயே குறிப்புக்கள் இருப்பதாகக் கூறுவர். பரிபாடலில் கூறப்படும் இருந்தையூர் என்பது மதுரையையும், இருந்தவளமுடையார் என்பது கூடலழகரையும் குறிப்பதாகும்[29]. எனவே, அக்காலத்திலிருந்தே இங்கு கோயில் இருந்து வந்துள்ளதை அறியமுடிகிறது.

இக்கோயிலைத் திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார், பெரியாழ்வார் ஆகிய ஆழ்வார்கள் பாடியதோடு, ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் காலத்தில் இம்மன்னனுக்கு ஏற்பட்ட பரம்பொருள் எது? என்ற ஐயத்தைப் பெரியாழ்வார் தீர்த்து வைத்தார் என்று செவிவழிச் செய்தி கூறுகின்றது. எனவே, இம்மன்னனது காலத்தில் இங்கு கோயில் இருந்திருக்கலாம் என யூகிக்கலாம். மேலும், கருவறையில் இடம் பெற்றுள்ள சுந்தரராசப்பெருமாள் உருவ அமைதியானது அதிக ஆபரணங்கள் முதலியன இல்லாது பாண்டியரது கலைப்பாணியைச் சேர்ந்ததாக அமைந்துள்ளமை மேற்கண்ட கருத்துக்கு அணி சேர்ப்பதாக அமைகிறது.

தற்போதுள்ள கோயில் கட்டுவதற்குக் கல் கொடுத்தவர் இராமராச விட்டல தேவ மகாராசர் (கி.பி. 1547) என்பவராவார்[30] என்றும், இக்கருவறையும், அர்த்தமண்டபமும் இம்முடி எல்லப்ப நாயக்கரால் கட்டிமுடிக்கப்பட்டது[31] என்றும், இக்கோயிலின் அதிட்டானத்தில் இடம் பெற்றுள்ள கல்வெட்டுக்களால் அறியலாம். எனவே, இக்கோயிலின் காலம் கி.பி. பதினாறாம் நூற்றாண்டு ஆகும்.

மேலும், இக்கோயிலில் தற்போதுள்ள கட்டடக்கலை அமைப்பில் இடம் பெறும் கபோதபந்த உபபீடம் (உபபீடத்தின் கண்டத்தில் 160ற்கும் மேற்பட்ட சிற்பங்கள்) வர்க்கபேத அதிட்டானம். 55 அடி நீள, அகலம் கொண்ட சதுரக்கருவறை, அரைத்தூண்களின் சதுரப்பகுதிகளில் அமர்ந்த வடிவிலான சிங்கங்கள், பூமுனைப் போதிகை, மூன்றடி உட்பக்கமாகச் செல்லும் தேவகோட்டப்பள்ளம், தேவகோட்டத்தில் இடம்பெறும் சாலையின் கபோதத்தின் கீழ் தாழ்வாரக்கட்டை அமைப்பு, எழுதகத்தில் வளைந்த கட்டை அமைப்பு, கொடுங்கை அமைப்பு மற்றும் அதன் கீழ்ப்பகுதியில் இடம்பெறும் தாழ்வாரக்கட்டை அமைப்பு, சுமார் ஒன்றறை அடி அளவுள்ள கூடுகளும் அதில் விஷ்ணு மற்றும் அவரது அவதாரங்கள் இடம்பெற்றுள்ளமை ஆகியன விசயநகர-நாயக்கர் காலக் கலைப்பாணியைச் சேர்ந்ததாக அமைகிறது. எனவே, கட்டடக்கலைப் பாணியும், கல்வெட்டும் விசயநகர-நாயக்கர் காலத்தது என்பதை உணர்த்துவதால் இக்கோயிலின் காலம் கி.பி. பதினாறாம் நூற்றாண்டு எனக் கொள்ளலாம்.

## திருமோகூர்–காளமேகப்பெருமாள் கோயில்

திருமோகூர் காளமேகப்பெருமாள் கோயிலில் திரிபுவனச் சக்கரவர்த்தி மாறவர்மன் சுந்தர பாண்டியதேவன்[32] (கி.பி. 1216–1239), திரிபுவன்ச் சக்கரவர்த்தி மாறவர்மன் குலசேகரதேவன்[33] (கி.பி. 1268 – 1311), பசவன்ன நாயக திம்மப்ப நாயக்கர்[34] ஆகியோர்களது கல்வெட்டுக்கள் இடம்பெற்றிருப்பினும் கோயில் கட்டுமானம் பற்றிய நேரடிக் கல்வெட்டு ஏதும் இல்லை. மேலும், இக்கல்வெட்டுக்கள் அனைத்தும் மகாமண்டபச் சுவரிலும், பிரகாரச் சுவரிலும் இடம் பெற்றுள்ளன.

இக்கோயிலின் கருவறையில் கல்வெட்டுக்கள் இடம்பெறவில்லை என்பதாலும், நேரடியான கோயில் கட்டுமானக் கல்வெட்டு இல்லை என்பதாலும் கட்டடக்கலை அமைப்பே காலத்தை அறியத் துணை செய்கிறது. இக்கோயில் விமானத்தில் விசயநகர-நாயக்கர் காலத்தில் பெரிதும் பின்பற்றப்பட்ட அமைப்பான கபோதபந்த உபபீடம், வர்க்கபேத அதிட்டானம், பூமுனைப் போதிகை, வளைந்த கட்டை அமைப்புடைய கொடுங்கை முதலியன இடம்பெறுவதால் இக்கோயில் விசயநகர-நாயக்கரது காலத்தைச் சேர்ந்தது எனக் கருதலாம். எனவே, இக்கோயிலின் காலத்தைக் கி.பி. பதினாறாம் நூற்றாண்டு எனக் கொள்ளலாம்.

## ஸ்ரீவைகுண்டம் – வைகுண்டநாதர் கோயில்

ஸ்ரீவைகுண்டம் கோயிற் கருவறை மற்றும் அர்த்த மண்டபத்தில் கல்வெட்டுக்கள் இடம்பெறவில்லை. பிற இடங்களில் இடம்பெறும் கல்வெட்டுக்களில் காலத்தால் முந்தியது கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் குலசேகரன்[35] (கி.பி. 1268 – 1311) கல்வெட்டாகும். எனவே, இவனது காலத்தில் இங்கு கோயில் இருந்துள்ளமையை அறியலாம். ஆனால், தற்போதுள்ள கோயிலின் கட்டடக்கலை அமைப்பு விசயநகர–நாயக்கர் காலத்தைச் சேர்ந்ததாக உள்ளது.

இக்கோயிலில் இடம் பெற்றுள்ள உபபீடத்துடன் கூடிய வர்க்க பேத அதிட்டானம், வட்டம், எண்பட்டை, பதினாறுபட்டையுடன் அமைந்த அரைத்தூண்கள், அவைகளின் சதுரப் பகுதியில் சிறுகோயில் அமைப்பு, சதுரங்களில் நாகபந்த அமைப்பு, அரைத்தூண்களின் மேற்பகுதியில் பூமுனைப் போதிகை, சாலை அமைப்புடன் கூடிய தேவகோட்ட கபோதத்தினுள் தாழ்வாரக்கட்டை அமைப்புடைய கொடுங்கை ஆகிய உறுப்புக்கள் விசயநகர–நாயக்கரது பாணியில் அமைந்துள்ளன. எனவே, இன்றுள்ள நிலையில் இக்கோயில் கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் தோன்றியதெனக் கருதலாம்.

## ஆழ்வார்திருநகரி – ஆதிநாதர் கோயில்

ஆழ்வார்திருநகரி ஆதிநாதர் கோயிலில் உள்ள கல்வெட்டுக்களில் காலத்தால் முற்பட்ட கல்வெட்டு முதலாம் சடையவர்மன் குலசேகரனின் (கி.பி. 1190-1219)[36] கல்வெட்டாகும். இவனது காலத்தில் இருந்த கோயில் கட்டடம் இப்போது இல்லை.

தற்போதுள்ள கோயில் கட்டடக்கலை அமைப்பு விசயநகர–நாயக்கரது காலத்ததாகும். ஆனால், இவர்களது காலத்தைச் சேர்ந்த கல்வெட்டுக்கள் கருவறைச் சுவரில் இடம்பெறவில்லை. எனவே, இக்கோயிலின் காலத்தைக் கட்டடக்கலைப் பாணியின் அடிப்படையிலேயே கூறவேண்டியுள்ளது.

இக்கோயிலில் இடம்பெற்றுள்ள உபபீடத்துடன் கூடிய வர்க்கபேத அதிட்டானம், வட்டம், எண்பட்டை, பதினாறுபட்டை எனும் அமைப்புக்களுடன் கூடிய அரைத்தூண், அவற்றின் கீழ்ச்சதுரப் பகுதிகளில் சிறு கோயில் அமைப்பு, நாகபந்தம், அரைத்தூண்களின் மேற்பகுதியில் பூமுனைப் போதிகை, சாலை அமைப்புடைய தேவகோட்டத்தில் சாலையின் கபோதப் பகுதியின்கீழ்த் தாழ்வாரக் கட்டை அமைப்பு, வளைந்த கட்டை அமைப்பைக் கொண்ட எழுதகம், தாழ்வாரக்கட்டை அமைப்பைக் கொண்ட கொடுங்கை, ஆகியன விசயநகர–நாயக்கரது கலைப்பாணியைச் சேர்ந்தவை. மேலும், இக்கோயிற் கட்டடக்கலை கூடலழகர், திருமோகூர் ஆகிய

கோயில்களின் கட்டடக்கலையை விட வளர்ச்சியடைந்த நிலையில் காணப்படுவதால் சற்று பின்னோக்கி கி.பி. பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதலாம்.

## திருத்தங்கல்–நின்றநாராயணப்பெருமாள்கோயில்

திருத்தங்கல் நின்றநாராயணப்பெருமாள் கோயிலில் மகாமண்டப வாயிலின் முன்புறம் உள்ள தரையில் மாறன் சடையனின்[37] (கி.பி. 768 -815) கல்வெட்டு காணப்படுகிறது. எனவே, முற்காலப் பாண்டியரது காலத்தில் இங்கு கோயில் இருந்துள்ளமையை அறிய முடிகிறது.

மகாமண்டபத்தின் கிழக்குச் சுவரில் உள்ள கல்வெட்டு[38] இக்கோயிலை மாறவர்மன் முதலாம் சுந்தரபாண்டியன் காலத்தில் (கி.பி. 1216–1239). சோழன் உய்யநின்றாடுவானான குருகுலத் தரையன் என்பவனால் கற்றளியாக்கப்பட்ட செய்தியைக் கூறுகிறது எனினும், இக்கல்வெட்டு மகாமண்டபத்தின் கிழக்குச் சுவற்றில் இடம் பெற்றுள்ளதாலும் இக்காலத்திற்குப் பின் புதிதாக விமானம் கட்டப்பட்டுள்ளதை தற்போதுள்ள கட்டடக்கலை அமைப்பை வைத்தும் அறிய முடிகின்றது.

அதிட்டானத்தில் உபானம், ஜகதி, வேதி என்ற உறுப்புக்கள் மட்டும் இடம் பெற்றுள்ளமை, சுவர்ப்பகுதியில் தேவகோட்டம், கோட்டபஞ்சரம் ஆகியன இடம்பெறாமை, எழுதகம் மற்றும் கபோதம் சாதரணமாக அமைந்திருத்தல் முதலிய அமைப்பைக் கொண்டு இக்கோயில் தற்காலத்தைச் சேர்ந்தது என்பதை அறியலாம். மேலும், கருவறை அதிட்டானப் பட்டிகையில் "அரண்மனை சம்புருதி விருபாஷி அய்யன் மகன் ரங்கன்" என தற்கால எழுத்தமைதியில் கல்வெட்டு காணப்படுவதால் இக்கோயில் கி.பி. பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டினைச் சேர்ந்ததாகக் கருதலாம்.

## தொகுப்புரை

இந்நூலில் விளக்கப்பெறும் கோயில்களில் மன்னார்கோயில் கூடலழகர்கோயில், அழகர்கோயில் மற்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில் ஆகிய நான்கு கோயில்களில் கோயில் கட்டியமைக்கான நேரடியான கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளதால் இவற்றின் காலத்தை சரியாகக் கூறமுடிகின்றது. பிற கோயில்களில் நாங்குனேரி, திருக்கோளூர் ஆகிய கோயில்களில் பாண்டியரது கல்வெட்டும், பாண்டியரது கலைப்பாணியும் இடம்பெற்றுள்ளதால் இவை பாண்டியரது காலத்தைச் சேர்ந்தது (கி.பி. 13 ஆம் நூற்றாண்டு) என்று அறியப்படுகிறது.

பெருங்குளம், தொலைவில்லிமங்கலம்அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன் ஆகிய கோயில்களில் பெரும்பகுதி பாண்டியரது

கலைப்பாணி பின்பற்றப்பட்டிருப்பினும் விசயநகர-நாயக்கரது கலைக்கூறுகளும் இடம்பெற்றிருப்பதால் இவை விசயநகர-நாயக்கரின் துவக்க காலமாகக் (கி.பி. 14-ம் நூற்றாண்டு) கொள்ளப்படுகின்றன.

திருக்குறுங்குடி, ஸ்ரீவில்லிப்புத்தூர் ஆண்டாள்கோயில் மற்றும் வடபத்ரசாயிகோயில், ஆகிய கோயில்களில் விசயநகர-நாயக்கரது கட்டடக்கலைப் பாணி அமைந்திருப்பினும் இவை முன்னர் கண்ட விசயநகர-நாயக்கர் காலக் கோயிற்பாணியைவிடச் சற்று வளர்ச்சியடைந்ததாக உள்ளதால் இவை அதனை அடுத்த காலகட்டமாகக் (கி.பி. 15 - ஆம் நூற்றாண்டு) கொள்ளப்படுகின்றன. மேற்கண்ட கோயில்கள் தவிர பிற கோயில்கள் கலைப்பாணியில் மேலும் சற்று வளர்ச்சி பெற்று விசயநகர-நாயக்கரது கட்டடக் கலைப்பாணியின் உன்னத நிலையினைக் காட்டுவதாக அமைந்துள்ளதால் இவை, விசயநகர- நாயக்கரது கலைப்பாணியின் இறுதி நிலையாகக் (கி.பி. 16,17-ஆம் நூற்றாண்டு) கொள்ளலாம்.

திருத்தங்கல் கோயில் மட்டும் அரச பரம்பரையினரின் காலத்திற்குப் பின் (கி.பி. 18, 19 ஆம் நூற்றாண்டு) கட்டப்பட்ட கோயிலாக அமைந்துள்ளது.

பொதுவாக இங்கு ஆராயப்படுகின்ற கோயில்களில் பல பாண்டியரது காலத்தில் கட்டப்பட்டிருப்பினும் அவை பின்னாளில் திருத்தி அமைக்கப்பட்டுள்ளது தெளிவாகத் தெரிகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. A.R.E., 112 of 1905
2. A.R.E., 349 of 1960-61
3. A.R.E., 715 of 1960-63
4. A.R.E., 253 of 1927-28
5. கள ஆய்வில் ஆய்வாளரால் நேரில் படிக்கப்பட்டது.
6. A.R.E., 307 of 1929-30
7. A.R.E., 353 of 1959-60
8. நாலாயிரத்திவ்வியப்பிரபந்தம், திருமொழி பாடல் 133.
9. S.I.I., vol.XIV 546-1926.
10. A.R.E., 533 of 1926-27.
11. A.R.E., 568, 583, 584 of 1926.
12. வெ. வேதாச்சலம், பாண்டிய நாட்டில் வாணாதிராயர்கள் ப.167.
13. A.R.E., 403 of 1907.
14. A.R.E., 393-398 of 1907
15. A.R.E., 399-402 of 1907.
16. A.R.E 287 of 1902-1925

17. தாட்டிகும்பு என்றால் தெலுங்கில் பனைமரங்களின் கூட்டம் என்று பெயர். எனவே, பனைமரங்கள் கூட்டமாக இருந்த இவ்விடத்தில் (இன்னும் பனைமரங்கள் அதிகம் காணப்படுகின்றன.) விசயநகர -நாயக்கர் காலத்தில் ஊர் உண்டாக்கப்பட்டு கோயிலும் கட்டப்பட்டிருக்கலாம். இதுவே, பின்னாளில் மறுவி தாடிக்கொம்பு என்றாகியிருக்கலாம்.
18 S.I.I.Vol., V, 291.
19. S.I.I. Vol.,II, 879, 880.
20. R.Sathyanatha aiyar, **History of the Nayaks of Madurai,** p.52.
21. Ibid., p.48.
22. A.R.E., 712, 1962-63.
23 A.R.E. , 399-1939-40.
24 எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியம், சோழர் கலைப்பாணி ப.130.
25 A.R.E., 106 of 1903 .
26 A.R.E., 107 of 110 of 1903.
27 A.R.E., 109-113, 114 of 1903
28 வெ. வேதாச்சலம், முன்னது ப. 67
29 மு.இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி ப.241.
30 A.R.E., 556 of 1911.
31. A.R.E., 557 of 1911.
32. A.R.E., 330, 332 of 1918.
33. A.R.E., 333 of 1918.
34. A.R.E., 75, 76 of 1905.
35. A.R.E., 341 of 1960-61.
36. A.R.E., 525 of 1960-61.
37 நடனகாசிநாதன், தொல்லியல் ஆய்வு, கல்வெட்டுக்கள் அறிமுகம். ப. 5 (இக்கல்வெட்டு அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது).
38. M.E.R., 554 of 1922.

# 3

# கட்டடக்கலை

## முன்னுரை

கட்டடக்கலை என்பது, வீடுகள், அரண்மனைகள், தொழிற்சாலைகள், மண்டபங்கள், வழிபாட்டிடங்கள் ஆகியவற்றின் அமைப்புப் பற்றிய பொதுவான ஒரு கலைச்சொல். கோயில் தொடர்பான ஆய்வுகளில் இச்சொல் கோயிற்கட்டடக்கலை (Temple Architecture) என்றும், பிற கட்டடங்களைச் சமயச் சார்பற்ற கட்டடக்கலை (Secular Architecture) என்றும் அழைக்கப்படுகின்றது. மனிதன் வெயிலிலிருந்தும், மழையிலிருந்தும் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள தனக்கென அமைத்துக்கொண்ட இருப்பிடத்தின் கட்டடமே துவக்ககாலக் கட்டடக்கலை அமைப்பாகும். அதே மனிதன் துவக்கத்தில் தான் வணங்குகின்ற இறையுருவைத் தன்னைப்போன்றே பாதுகாப்பாக வைத்துக் கொள்ள வேண்டி அவ்வுருவத்தைச் சுற்றி சுவர் எழுப்பினான். அச்சுவர் துவக்கத்தில் எளிமையாக இருந்தது. மனிதன் கால வெள்ளத்தில் அதனைப் பல்வேறு வகையில் அலங்காரப்படுத்தினான். அவ் அலங்காரங்களில் சில, வட இந்தியக் கோயில்களின் அமைப்பில் பிரசித்தி பெற்றதாகவும், வேறு சில தென்னிந்தியக் கோயில்களின் சிறப்புக் கூறுகளாகவும் கருதப்பட்டன. இவ் அலங்கார அமைப்புக்கள் எவ்வெவ்வாறெல்லாம் அழைக்கப்படவேண்டும் என்பன மத்திய காலத்தில் வகுக்கப்பட்டன. ஒவ்வொரு காலகட்டத்திலும் அல்லது ஒவ்வொரு அரசபரம்பரையின் ஆட்சிக் காலத்திலும் கோயில்கட்டட அலங்காரக் கூறுகளில் சில மாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. விசயநகர-நாயக்கர் காலத்தில் இம்மாற்றங்கள் மேலும் அதிகரிக்கத் தொடங்கின. ஏனெனில் அவர்களது காலத்துக் கோயில்கள் பிரம்மாண்டமான பெருங்கோயில்களாக ஆக்கப்பட்டன. தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் சென்று தம் குறுகிய ஆட்சிக்காலத்தில் இவ் விசயநகர-நாயக்க அரசர்கள் முந்தைய அரசர்கள் காலத்தில் கட்டப்பட்டக் கோயில்களைப் பரவலாக விரிவுப்படுத்தியும், புதிய கோயில்களைக் கட்டியும் உள்ளனர். வழிவழியாக வந்த கட்டடக்கலை அலங்கார மாற்றங்களைப் பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களில் கண்டறிவதே இவ்வியலின் நோக்கமாகும்.

இங்கு, எடுத்துக்கொள்ளப்பட்டுள்ள கோயில்கள் சோழ பாண்டியர் மற்றும் பிற்காலப் பாண்டியர் ஆகியோரால் கட்டப்பட்டு பின் விசயநகர- நாயக்க மன்னர்களால் விரிவுபடுத்தப்பட்டவையாகும். எனவே, இங்கு தற்போதைய நிலையில் உள்ள கோயில்களின் பகுதிகள் எந்தெந்த அரச வம்சத்தின் காலத்தில் கட்டப்பட்டது என்பதைக் கணிக்க இயலவில்லை. கோயில்களை வகைப்படுத்த மிகக் கடினமான சிரத்தை எடுக்க வேண்டியதாகிறது. இங்குக் கட்டடக்கலை என்பது கோயிலின் ஒட்டு மொத்தமான பகுதியைக் குறிக்கின்ற போதிலும் இந்த இயலில் கோயில்களின் விமானம் மட்டுமே கட்டடக்கலை பற்றிய ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது. பின்வரும் பகுதியில் இக்கோயில்களின் கட்டடக்கலை அமைப்பை விரிவாகக் காணலாம்.

இவ்வியலில் கருவறை அமைப்பு, உபபீட அமைப்பு, அதிட்டானம், பிரநாளம், அரைத்தூண், கும்பபஞ்சரம், தேவகோட்டம், கோட்ட பஞ்சரம், சாளரங்கள், எழுதகம், கபோதம், கூடுகள், யாளிவரி விமான தளங்கள், கிரீவகோட்டம், சிகரம், கலசம், அஷ்டாங்க விமானம் ஆகிய உபதலைப்புக்களின்கீழ் எடுத்துக் கொள்ளப்பட்ட கோயில்களின் விமான உறுப்புக்கள் ஒப்பிடப்பட்டு அதன் மூலம் அவ்வுறுப்புக்களின் படிப்படியான வளர்ச்சி நிலையானது கண்டறியப்படுகிறது.

## கருவறை அமைப்பு

பாண்டிய நாட்டு வைணவக்கோயில்களில் விமானத்தின் தரை அமைப்பானது சதுரம், நீள்சதுரம், வட்டம் என்ற மூன்று அமைப்புக்களில் இடம்பெறுகிறது.[1] இத்தகு அமைப்புக்களின்கீழ் இடம்பெறும் கோயில்கள் இங்கு வகைப்படுத்தப்படுகின்றன.

வைணவக் கோயில்களில் திருமால் நின்ற, இருந்த, கிடந்த எனும் மூன்று நிலைகளில் இடம்பெறுவார். பொதுவாக, சதுரம் மற்றும் வட்ட வடிவக் கருவறைகளில் திருமால் நின்ற மற்றும் இருந்த கோலத்தில் இடம்பெறுவார். நீள்சதுர அமைப்பில் திருமாலுக்கே பெரிதும் உரித்தான கிடந்தகோலம் இடம்பெறும். எடுத்துக்கொண்ட கோயில் கருவறைகளில் மேற்கண்ட அமைப்பு இடம்பெற்றுள்ளனவா? அல்லது மாற்றங்கள் ஏதேனும் உண்டா? என்பதுவும் இங்குக் கண்டு தெளியப்படுகிறது.

கருவறையானது மூடிய திருச்சுற்றுகளைக் கொண்ட சாந்தார அமைப்பினைப் பெற்றும், திருச்சுற்று அமைப்பு இல்லாத நிரந்தர அமைப்பைப் பெற்றும் திகழும். எடுத்துக்கொண்ட கோயில்களில் சாந்தார வகைக் கோயில்கள் எவை, நிரந்தரவகைக் கோயில்கள் எவை என்பது பற்றியும், சாந்தார வகை எனில், அதில் எத்தனை திருச்சுற்றுக்கள் இடம்பெறுகின்றன என்பது பற்றியும், இனம் காணப்படுவதோடு, கருவறையின் அளவுகளும், இறைவனின் கோலமும், கருவறையின் அமைப்பில் காணப்படும் மடிப்புக்கள் பற்றியும் இங்குக் கூறப்படுகிறது.

## 1. சதுர வகை

தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் கோயில் *(17.2 அடி)* அமர்ந்த கோலம், தொலைவில்லிமங்கலம் ஸ்ரீநிவாசன் கோயில் *(14.10 அடி)* நின்ற கோலம், திருமெய்யம் சத்யகிரிநாதன் கோயில் *(14.7 அடி)* நின்ற கோலம், தாடிக்கொம்பு சௌந்தரராசப்பெருமாள் கோயில் *(14 அடி)* நின்ற கோலம், கிருஷ்ணாபுரம் திருவேங்கடநாதன் கோயில் *(15.6 அடி)* நின்ற கோலம் என அமைவதோடு இக்கோயில்களின் கருவறைப்பகுதி (அதிட்டானம் முதல் கபோதம் வரையிலான பகுதி) கர்ணம், பத்ரம் போன்ற மடிப்புக்கள் இன்றித் தட்டையாக (Flat) அமைந்துள்ளன. தென்திருப்பேரை மகர நெடுங்குழைக்காதன் கோயில் *(21அடி)* அமர்ந்த கோலம், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில் *(29.6 அடி)* நின்ற கோலம், நான்குனேரி வானமாமலைப்பெருமாள் கோயில் *(23 அடி)* அமர்ந்த கோலம் ஸ்ரீவைகுண்டம் வைகுண்டநாதர் கோயில் *(23.6 அடி)* நின்ற கோலம், ஆழ்வார்திருநகரி ஆதிநாதர் கோயில் *(35.9 அடி)* நின்ற கோலம், வரகுணமங்கை விசயாசனப்பெருமாள் கோயில் *(23 அடி)* அமர்ந்த கோலம், திருப்புல்லாணி கல்யாணசெகந்நாதர் கோயில் *(18 அடி)* அமர்ந்த கோலம், திருக்கோட்டியூர் உரகமெல்லணையான் கோயில்[2] *(32.5 அடி)* கிடந்த கோலம் என அமைவதோடு இக்கோயில்களின் கருவறையில் கர்ணம், அகாரை, பத்ரம், அகாரை, கர்ணம் என்ற அமைப்புக்கள் இடம்பெற்றுள்ளன.



படம் 1

மதுரை கூடலழகர்கோயில் *(55 அடி)* அமர்ந்த[3] கோலம், திருமோகூர் காளமேகப்பெருமாள்கோயில் *(36 அடி)* நின்ற கோலம் திருக்குறுங்குடி

நின்றநம்பிகோயில் (29 அடி) நின்ற கோலம், பெருங்குளம் ஸ்ரீநிவாசன்கோயில் (23.6 அடி) நின்ற கோலம் என அமைவதோடு கருவறை கர்ணம், அகாரை, பிரதிகர்ணம், அகாரை, பத்ரம், அகாரை, பிரதிகர்ணம், அகாரை, கர்ணம் என்ற அமைப்புடன் திகழ்கின்றன. (பார்க்க : வ.ப.எண். 1)

## 2. நீள் சதுரவகை

திருத்தங்கல் நின்றநாராயணப்பெருமாள் கோயில் (10.6 ×16.6 அடி) நின்ற கோலம், திருக்கோளூர் வைத்தமாநிதிப்பெருமாள் கோயில் (13.8 × 23.6 அடி) கிடந்த கோலம் என இக்கோயில்களின் அளவுகளும் இறைவனின் கோலங்களும் அமைகின்றன. இவற்றில், திருத்தங்கல் கோயிற்கருவறை செவ்வக அமைப்பில் இருப்பினும் இறைவனது கோலம் நின்ற கோலமாக அமைந்துள்ளது. மேற்கண்ட கோயிற் கருவறைகளானது மடிப்புக்கள் இன்றி அமைந்துள்ளன.



படம் 2

திருப்புளியங்குடி காய்சினவேந்தன் கோயில் (24×29.5) அடி) கிடந்த கோலம், ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி கோயில் [4] (33.4 ×51 அடி) கிடந்த கோலம், மன்னார்கோயில் இராசகோபாலசுவாமி கோயில்[5] (29.6 ×39.3 அடி) நின்ற கோலம் என அமைகின்றன. இவற்றில், திருப்புளியங்குடி கருவறையில் கர்ணம், அகாரை, பத்ரம், அகாரை, கர்ணம் எனும் அமைப்பும், (பார்க்க: வ.ப. எண் 2)

ஸ்ரீவில்லிப்புத்தூர் வடபத்ரசாமி கோயில் கருவறையில் (கர்ணம், அகாரை, பத்ரம், அகாரை, பத்ரம், அகாரை கர்ணம் எனும் அமைப்பும் (பார்க்க வ.ப. எண் : 3) மன்னார்கோயில் இராசகோபாலசுவாமி கோயிலில் கர்ணம், அகாரை, பிரதிகர்ணம், அகாரை, பிரதிபத்ரம், அகாரை, பத்ரம், அகாரை, பிரதிபத்ரம், அகாரை, பிரதிகர்ணம்,

அகாரை, கர்ணம் எனும் அமைப்பும் இடம்பெற்றுள்ளன. (பார்க்க : வ.ப.எண். 4 )



படம் 3



படம் 4

## 3. வட்டவகை

அழகர்கோயில் கள்ளழகர் கோயிலில் (85 அடிகள் சுற்றளவு) நின்ற கோலம் இடம்பெற்றுள்ளது. எடுத்துக்கொண்டுள்ள கோயில்களில் அழகர்கோயில் கருவறை மட்டுமே வட்ட வடிவில் அமைந்துள்ளது. (பார்க்க. வ.ப.எண் 5) இத்தகு அமைப்பை ஒரு சோதனை முயற்சியாகச் செய்துள்ளனர் என எண்ணத் தோன்றுகிறது. ஏனெனில், இவ்வமைப்பு பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களில் தொடர்ந்து பின்பற்றப்படவில்லை.



படம் 5

இத்தகைய வட்டவடிவக் கருவறை அமைக்கும் முறை பௌத்தர்களின் தாக்கமாக இருக்கக்கூடும். பௌத்த சைத்தியங்கள் அனைத்தும் இவ்வடிவ அமைப்பைக் கொண்டவையே. பிள்ளையார் பட்டியில் உள்ள குடைவரைக் கோயிலில் அரைவட்டவடிவ அமைப்புடைய சன்னதியைக் காணலாம். தமிழகத்தில் இத்தகைய வட்டவடிவக் கருவறை அமைப்பு பள்ளிப்படைக் கோயில்களில் மிகுதியாகப் பின்பற்றப்பட்டுள்ளது[6].

இதுவரை கண்ட கருவறை அமைப்பு மற்றும் அவற்றில் இடம் பெறும் இறையுரு ஆகியவற்றைப் பார்க்கும்போது சதுரம், வட்டம் ஆகிய அமைப்பினைக் கொண்ட கருவறைகளில் இறைவனின் நிலை நின்ற கோலம் அல்லது அமர்ந்த கோலம் என அமைகிறது. திருக்கோட்டியூர் உரகமெல்லணையான் கோயிலில் மட்டும் சதுரக்கருவறையில் கிடந்த கோலம் அமைந்துள்ளது.

நீள்சதுர அமைப்புடைய கருவறைகளில் இறைவனின் நிலை சயனகோலமாக அமையும். ஏனெனில், செவ்வக அமைப்பே, சயனக்கோலத்திற்காக உருவான அமைப்பாகும். இருப்பினும், திருத்தங்கல் மற்றும் மன்னார்கோயிலில் கருவறை செவ்வகமாக இருந்தும் இறைவன் நின்ற கோலத்தில் இடம் பெற்றுள்ளார்.

எனவே, சதுரம் மற்றும் வட்டவடிவக் கருவறைகளில் இறைவனின் கோலம் நின்ற கோலம், அமர்ந்த கோலம் என பெரிதும் அமைகின்றன. ஆனால், நீள்சதுரக் கருவறையில் இறைவனின் நிலை கிடந்த கோலமாகத்தான் அமைய வேண்டும் என்ற கட்டாயம் பின்பற்றப்

படவில்லை. நின்ற கோலத்திலும் இடம்பெறுகிறது. எனினும், நீள்சதுர அமைப்புடைய கருவறைகள் கிடந்த கோலத்திற்குப் பெரிதும் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதை அறிய முடிகின்றது.

## சாந்தார நிரந்தர வகைகள்

கோயில்களின் அமைப்பை வைத்து அவற்றைச் சாந்தார, நிரந்தர என்ற இருவகைகளில் பாகுபடுத்தலாம். கோயில் கருவறையினைச் சுற்றி மூடிய திருச்சுற்று (பிரதட்சனபாதம்) அமைந்திருக்குமானால் அவ்வகைக் கோயில்கள் சாந்தார வகைக் கோயில்கள் எனப்பெயர் பெறும். அவ்வாறு மூடிய திருச்சுற்றுக்கள் இல்லாத கோயில்கள் நிரந்தர வகைக் கோயில்கள் எனப்படும்.

இந்நூலில் இடம்பெறும் கோயில்களில் கூடலழகர், திருக்கோட்டியூர், மன்னார்கோயில், அழகர்கோயில் ஆகிய கோயில்கள் சாந்தார வகைக் கோயில்களாகும். இவற்றில் கூடலழகர், திருக்கோட்டியூர் ஆகிய கோயில்கள் இரண்டு மூடிய திருச்சுற்றுக்களைப் பெற்று விளங்குகின்றன. மன்னார்கோயிலும் அழகர்கோயிலும் ஒரே ஒரு மூடிய திருச்சுற்றுடன் விளங்குகின்றன.

மேற்கண்ட கோயில்கள் தவிர ஏனைய பத்தொன்பது கோயில்கள் நிரந்தர வகைக் கோயில்களாகத் திகழ்கின்றன.

## பிரகாரம்

பிற்காலப்பாண்டியரது ஆட்சிக்காலத்தில் கட்டப்பட்ட கோயில் களில் பெரும்பாலானவை கருவறை, அர்த்தமண்டபம் மகாமண்டபம், எனும் அமைப்பினைப் பெற்று விளங்குகின்றன. உதாரணமாக, மதுரை மாவட்டம் திருமாணிக்கம் என்னும் ஊரில் உள்ள சிவன் கோயில், திருநெல்வேலி நெல்லையப்பர்கோயில் போன்றவற்றைக் கூறலாம். பிற்காலப் பாண்டியர்களுக்குப் பின்வந்த விசயநகர-நாயக்கர் பிற்காலப் பாண்டியரால் கட்டப்பட்ட கோயில்களில் புதிய திருப்பணிகளை மேற்கொண்ட பொழுது கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவற்றைச் சுற்றியும், சில கோயில்களில் மகாமண்டபத்தைச் சேர்த்தும் பிரகாரம் அமைத்துள்ளனர். பெரும்பாலான கோயில்களில் இது ஒரு தனிச்சிறப்புக் கூறாகத் திகழ்கின்றது. மேலும், விசயநகர -நாயக்கர் காலத்தில் புதியதாகக், கட்டப்பட்ட கோயில்களிலும் இத்தகைய அமைப்புக் காணப்படுகிறது.

இப்பகுதியில் தாடிக்கொம்பு, ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை, தொலைவில்லிமங்கலம், அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன், நாங்குனேரி, திருக்கோளூர், அழகர்கோயில், திருப்புல்லாணி, பெருங்குளம், தென்திருப்பேரை, திருப்புளியங்குடி ஆகிய பன்னிரெண்டு கோயில்கள் இத்தகு பிரகார அமைப்பைக் கொண்டு திகழ்கின்றன. இவற்றில், தாடிக்கொம்பு, ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை,

தொலைவில்லிமங்கலம், அரவிந்தலோசனன், நாங்குனேரி, திருக்கோளூர், அழகர்கோயில், திருப்புல்லாணி ஆகிய கோயில்களில் கருவறை மற்றும் அர்த்தமண்டபத்தைச் சுற்றிப் பிரகாரம் அமைக்கப்பட்டுள்ளது. பெருங்குளம், தென்திருப்பேரை, திருப்புளியங்குடி, தொலைவில்லிமங்கலம் ஸ்ரீநிவாசன் ஆகிய கோயில்களில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றைச் சுற்றிப் பிரகாரம் அமைக்கப்பட்டுள்ளது.

இத்தகு பிரகாரங்கள் அமைக்கப்பட்டு அர்ததமண்டபம், அல்லது மகாமண்டபத்தில் பிரகாரம் தொடங்குமிடத்திலும், முடியுமிடத்திலும் இருவாயில்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இப்பிரகாரங்கள் அமைத்ததன் நோக்கம், கோயில் முழுவதையும் சுற்றி வருவதைவிட இறைவன் உறைந்திருக்கும் கருவறைப் பகுதியை மட்டும் சுற்றிவந்தால் கோயிலையே சுற்றி வந்ததுபோல் என்ற கருத்தின் அடிப்படையில் இருக்கலாம், அல்லது பாதுகாப்பு கருதி இத்தகு பிரகார அமைப்பு ஏற்படுத்தப்பட்டிருக்கலாம். சமீப காலத்தில் பெரும்பாலான கோயில்களில் இப்பிரகாரங்களின் கூரைக்கும் கருவறையின் கூரைக்கும் இடையே உள்ள திறந்த வெளிகள் பாதுகாப்புக் கருதி கம்பிகளாலும், நீண்ட கருங்கற்களாலும் அடைக்கப்பட்டுள்ளன.

பிரகார அமைப்பைக் கொண்ட கோயில்கள் சிலவற்றில் நூற்றி எட்டு திவ்யதேசங்களில் உறைந்துள்ள இறைவனின் திருக்கோலங்கள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. ஸ்ரீவைகுண்டம் கோயில் இதற்கு ஒரு சிறந்த உதாரணமாகும்.

## உபபீட அமைப்பு

உபபீடமானது பொதுவாக, கோயிலின் கம்பீரமான தோற்றத்திற்காகவும், அழகிற்காகவும், பாதுகாப்பிற்காகவும் அமைக்கப்படுகிறது எனக்கொள்ளலாம். தமிழகக் கோயில்க்ளின் விமானங்களில் உபபீடம் முன்னர் சொன்ன காரணங்களுக்காகவே அதிக அளவில் பயன்படுத்தப் பட்டிருப்பதைக் காணலாம். தமிழகத்தில் முதன் முதலாக மாமல்லபுரத்து திரௌபதி, அர்ச்சுனரதங்களில் இவ்வுபபீடம் இடம் பெறுகிறது. பல்லவர் காலத்துக் கட்டுமானக் கோயில் விமானங்களிலும் இது ஓர் அங்கமாகவே இருந்து வந்துள்ளது. உதாரணமாக உத்தரமேரூர் சுந்தரவரதர் கோயிலைக் கொள்ளலாம்.[8] பல்லவருக்குப்பின் எழுப்பப் பட்ட சோழர் மற்றும் பாண்டியர்களின் கோயில்களிலும் உபபீடம் அமைக்கப்பட்டன. குறிப்பாக முற்காலச் சோழர்களது கோயில்களில் இத்தகு உபபீடங்கள் சிற்பங்களுடன் அழகுற அமைக்கப்பட்டன. சோழ மண்டலத்தில் திருமங்கலம் என்ற ஊரில் உள்ள சாமவேதீசுவரர் கோயில், தஞ்சை பிரகதீசுவரர் கோயில்[9] ஆகியவற்றைச் சோழர்களது கோயிலுக்கும், இராமேசுவரம்[10] கோயிலைப் பாண்டியர்களது

கோயிலுக்கும் உதாரணங்களாகக் கொள்ளலாம். இவ்வாறு, சிற்பங்களுடன் அழகிய உபபீடத்தை அமைக்கும் மரபினைச் சோழர்களுக்குப்பின் விசயநகர-நாயக்க மன்னர்களின் காலத்தைச் சேர்ந்த கோயில்களில் மிகுதியாகக் காணமுடிகிறது. இதற்கு ஒரு நல்ல உதாரணம் மதுரை கூடலழகர் கோயிலாகும்.

எடுத்துக் கொண்டுள்ள கோயில்களில் தாடிக்கொம்பு, திருப்புளியங்குடி, பெருங்குளம், வரகுணமங்கை, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில், ஆழ்வார்திருநகரி, கூடலழகர், ஸ்ரீவைகுண்டம், திருமோகூர், தென்திருப்பேரை ஆகிய பத்துக் கோயில்களின் விமானங்களில் உபபீட அமைப்புக் காணப்படுகிறது. உறுப்புக்களை அடிப்படையாகக் கொண்டு இக்கோயில்களின் உபபீடம் மூன்று வகைகளாகப் பிரிக்கப்படுகின்றன.

## 1. முதல்வகை

இவ்வகை உபபீடமானது உபானம், கண்டம், பட்டிகை என்ற உறுப்புகளைத் தாங்கி அலங்காரம் இன்றி எளிமையாகக் காணப்படுகிறது. இதனைப் "பாதபந்த உபபீடம்" என்பர்.[11] இவ்வகை உபபீடம் தாடிக்கொம்பு, திருப்புளியங்குடி, பெருங்குளம் ஆகிய மூன்று கோயில்களில் அமைக்கப்பட்டுள்ளது.

## 2. இரண்டாம் வகை

இவ்வகை உபபீடமானது, உபானம், பத்மஜகதி, கண்டம், பத்ம இதழ்தாங்கிய பட்டிகை, போன்ற உறுப்புகள்ளக் கொண்டு குறைந்த அலங்காரங்களுடன் காணப்படுகிறது. இதனை "பத்ம பந்த உபபீட" வகையில் சேர்க்கலாம்[12]. இத்தகைய உபபீடம் வரகுணமங்கை கோயிலில் காணப்படுகிறது.

## 3. மூன்றாம் வகை

இவ்வகை உபபீடம் கபோதத்தைக் கொண்டுள்ள உபபீடம் எனப்பிரிக்கப்படுகிறது. பொதுவாக, இவ்வகையில் உபானம், பத்மஜகதி, பட்டிகை, சிறிய யாளிவரிசை, கபோதம், கண்டம், கபோதம், (சில சமயங்களில் கபோதத்துக்கு மேல் சிறிய யாளிவரிசை) என்ற அமைப்பில் உறுப்புக்கள் இடம்பெறும். இத்தகு உபபீடம் "கபோத பந்த உபபீடம்" எனப்படும்[13]. இத்தகைய உபபீடம் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில், ஆழ்வார்திருநகரி, மதுரை கூடலழகர் கோயில், ஸ்ரீவைகுண்டம், திருமோகூர் முதலிய கோயில்களில் இடம் பெறுகின்றது.

தென்திருப்பேரை கோயிலில் உபபீடம் இடம் பெற்றுள்ளது. ஆனால் சமீபத்தில் (1995 – ஆம் ஆண்டு நடைபெற்ற கும்பாபிசேகத்தின் போது) இவ்வுபபீடம் முடிய சிமெண்டினால் தளம் அமைக்கப்பட்டதால் உபபீடம் மறைந்துள்ளது.

உபபீடத்தின் கண்டபகுதி மற்றும் கபோதக் கூடுகளின் உட்பகுதி ஆகிய இடங்களில் முன்னமே கூறப்பட்டது போல் சிறிய அளவிலான சிற்பங்கள் இடம் பெறுவதுண்டு. இத்தகு சிற்பங்கள் மதுரை கூடலழகர் கோயில் உபபீடத்தின் கண்டபகுதியில் மட்டும் இடம்பெற்றுள்ளது. இக்கண்டச் சிற்பங்களைப் பற்றி விரிவாகச் "சிற்பக்கலை" எனும் இயலில் விளக்கப்படுகிறது.

## அதிட்டானம்

விமானத்தின் ஆறு அங்கங்களில் முதலாவது அங்கம் அதிட்டானம் ஆகும். விமானத்தின் பிற பகுதிகள் அனைத்தும் இவ்வதிட்டானத்தின் மீதே அமைகின்றது. விமானத்தின் ஆறு அங்கங்களை மனிதனது உடலின் முக்கிய பாகங்களுடன் ஒப்பிடுவர். [14] அதில் அதிட்டானம் பாதத்திற்கு ஒப்பிடப்படுகிறது. இவ்வதிட்டானம் உபபீடம் கொண்டோ, உபபீடம் இன்றியோ அமையலாம். அதிட்டானம் பல்வேறு உறுப்புக்களைக் கொண்டது. அமைப்பில் இவ்வுறுப்புக்களை மாற்றி மாற்றி பல்வேறு விதமான அதிட்டான வகைகளைத் தோற்றுவிப்பர். [15]

தமிழகக் கோயில்களில் இவ் அதிட்டான அமைப்பு பல்லவர்களின் துவக்க காலத்தைச் சேர்ந்த மகாபலிபுரம் பஞ்சபாண்டவரதங்களிலேயே இடம்பெற்றுள்ளதைக் காணலாம். தமிழகக் குடைவரைகளில் இவ் அதிட்டான அமைப்புக் காணப்பட்டாலும் பெரும்பாலான குடைவரைகளில் அதிட்டானம் செதுக்கப்படாமலேயே உள்ளது. மேலும், குடைவரைக் கோயில்களில் அதிட்டான உறுப்புக்கள் அதிக அளவில் இடம்பெறவில்லை. அதே காலத்தில் தோன்றிய கட்டுமானக் கோயில்களில் இவ்வதிட்டானத்தின் வளர்ச்சியைப் பார்க்கமுடிகின்றது.

கட்டடக்கலை நூற்களில் மயமதம், மானசாரம் முதலியவற்றில் அதிட்டான வகைகள் பல கொடுக்கப்பட்டுள்ளன[16]. இந்நூல்களில் கொடுக்கப்பட்டுள்ள பெயர்களுக்கும்[17] இங்கு எடுத்துக் கொண்ட கோயில்களின் அதிட்டான அமைப்பிற்கும் சரியான தொடர்பு காணப்படவில்லை. எனவே, இங்கு கள ஆய்வு அடிப்படையிலும், மெய்ஸ்டர் தொகுத்துள்ள நூல்[18] அடிப்படையிலும் அதிட்டானங்கள் இனங்காணப்படுகின்றன.

பொதுவாக, அதிட்டானமானது அதில் இடம்பெறும் உறுப்புக்களின் அமைப்பின் அடிப்படையிலும் அது எவ்வுறுப்பால் அடைக்கப்பட்டிருக்கின்றதோ அதன் அடிப்படையிலும் பெயர் பெறும். (பந்தம் எனில் அடைப்பு எனப் பொருள்படும்.) உதாணரமாக அதிட்டானம் கபோதத்தினால் அடைக்கப்பட்டிருந்தால் கபோதபந்த அதிட்டானம் எனப் பெயர் பெறும்.

இந்நூலில் விளக்கப் பெறும் இருபத்தி மூன்று கோயில்களில் நான்கு வகையான அதிட்டான வகைகள் காணப்படுகின்றன. அவை

1. பாதபந்த அதிட்டானம்
2. கபோதபந்த அதிட்டானம்
3. பாதபந்த - கபோதபந்த அதிட்டானம் அல்லது வர்க்கபேத அதிட்டானம்
4. பிரதிபந்த அதிட்டானம் என்பனவாகும்.

## 1. பாதபந்த அதிட்டானம்

பாதபந்த அதிட்டானம் ஜகதி, முப்பட்டைக்குமுதம், கண்டம், பட்டிகை, கண்டம், வேதி முதலான உறுப்புக்களைக் கொண்டு அமையும்.[19] இதில் தூண்களின் கம்புப்பகுதியானது (கால்) முப்பட்டைக்குமுதம் வரை இறங்கியிருக்கும். எனவே, கால்களால் (தூண்) அடைக்கப்பட்டிருப்பதால் இது பாதபந்த அதிட்டானம் எனப்படுகிறது. (பார்க்க : வ.ப.எண். 6)



படம் 6

எடுத்துக்கொண்ட கோயில்களில் தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன், நாங்குனேரி, வடபத்ரசாயி, திருக்கோளூர், தாடிக்கொம்பு, பெருங்குளம், கிருஷ்ணாபுரம், திருக்கோட்டியூர் ஆகிய ஒன்பது கோயில்களின் அதிட்டானங்களும் பாதபந்த வகையைச் சார்ந்துள்ளன. (உதாரணம் பார்க்க நி.ப.எண்.3) எனினும் இவற்றிடையே சிறுசிறு வேறுபாடுகளும் காணப்படுகின்றன. இவை பொதுவாக ஜகதி, முப்படடைக்குமுதம், கண்டம், பட்டி, கண்டம், வேதி என்ற உறுப்புக்களைக் கொண்டுள்ளன. ஸ்ரீநிவாசன் கோயிலில் கண்டம், பட்டிகை, கண்டம், பட்டிகை ஆகிய உறுப்புக்கள் [illegible] வெளியில் தெரியும்படி இடம்பெற்றுள்ளன. எனவே [illegible] தெரிகின்ற உறுப்புக்களின் அமைதியை வைத்துத் தரையில் மறைந்துள்ள உறுப்புக்கள் ஜகதி, முப்பட்டைக்குமுதம் ஆகியன என்பதை [illegible]

முடிகிறது. கிருஷ்ணாபுரத்தில் உபானம் கூடுதலாக இடம் பெற்றுள்ளது. ஆனால், அதற்கு மேலுள்ள அதிட்டானத்தில் இரண்டு கண்டங்களுக்குப் பதிலாக ஒரு கண்டமும் ஒரு பட்டிகையும் மட்டுமே இடம் பெறுகின்றன.

பாதபந்த அதிட்டானத்தில் உறுப்புக்கள் அலங்காரம் இன்றி எளிமையாக அமைந்துள்ளன. இவ்வதிட்டான உறுப்புக்களின் மேற் பகுதியான வேதி பத்மத்துடன் காணப்படுகிறது. சில அதிட்டானங்களில் (பெருங்குளம், தாடிக்கொம்பு, தொலைவில்லிமங்கலம் அரவிந்த லோசனன் கிருஷ்ணாபுரம்) உபானம் இடம்பெறுகிறது. சுவர்ப்பகுதியில் உள்ள அரைத்தூண்கள் மற்றும் தேவகோட்டங்களின் கால்ப்பகுதி (அரைத்தூண்களின் தண்டுப்பகுதி) முப்பட்டைக்குமுதம் வரை இறங்கி குமுதத்தின் மேல் நிற்பதைக் காண முடிகிறது.

## 2. கபோதபந்த அதிட்டானம்

இவ்வகை அதிட்டானங்களில் உபானம், பத்மஜகதி, விருந்த குமுதம், கண்டம், கபோதம், கண்டம், வேதி ஆகிய உறுப்புக்கள் இடம் பெறும்.[20] இதில் கீழ்க்கண்டத்தின்மேல் பட்டிகைக்குப்பதிலாகக் கபோதம் இடம் பெற்றிருப்பின் "கபோத பந்த அதிட்டானம்" எனப்படும். (பார்க்க : வ.ப.எண். 7)



படம் 7

திருப்புல்லாணி, திருக்குறுங்குடி, திருமெய்யம், திருக்கோட்டியூர் ஆகிய நான்கு கோயில்களில "கபோத பந்த அதிட்டானம்" இடம் பெற்றுள்ளது. இவற்றில் திருமெய்யம, திருக்கோட்டியூர் ஆகிய கோயில் அதிட்டானங்கள் உபானம், ஜகதி, விருத்தகுமுதம், கண்டம், சிம்மமுக நுனியையுடைய கூடுகளுடன் கூடிய கபோதம், சிறுவடிவ வியாளவரி, கண்டம், பத்மத்துடன் கூடிய வேதி ஆகிய உறுப்புக்களைக் கொண்டு விளங்குகின்றன.

திருக்குறுங்குடியில் சிறுவடிவ வியாளவரிக்குப்பதிலாக செவ்வகக்கட்டை வரிசை இடம்பெறுகிறது. திருப்புல்லாணியில் யாளிவரியோ, செவ்வகக்கட்டையோ இடம்பெறவில்லை.

## 3. பாதபந்த – கபோதபந்த அதிட்டானம் அல்லது வர்க்கபேத அதிட்டானம்

கர்ணப் பகுதியிலும், பத்ரப்பகுதியிலும் அதிட்டான உறுப்புக்கள் ஒரே மாதிரியாக அமையாது மாறி மாறி அமைவது வர்க்கபேத அதிட்டானம் எனப்படும்.[21] இவற்றில், சில கோயில்களில் கர்ணம், அகாரை, பத்ரம் ஆகிய மூன்று பகுதிகளிலும் வேறு வேறு உறுப்புக்கள் இடம் பெற்றும் அமையும். அதாவது, கர்ணப் பகுதியில் கபோதபந்த அதிட்டான அமைப்பும் பத்ரப்பகுதியில் பாதபந்த அதிட்டான அமைப்பும் இடம்பெற்றுவரும். இவ்வாறு ஒரே அதிட்டானத்தில் பாதபந்த அமைப்பும், கபோதபந்த அமைப்பும் இடம்பெறுவதால் இது "பாதபந்த–கபோதபந்த அதிட்டானம் அல்லது வர்க்கபேத அதிட்டானம்" (இன்றைய ஸ்தபதியர் இவ்வமைப்பை இப்படி அழைக்கின்றனர்) எனப்படுகிறது. (பார்க்க : வ.ப.எண். 8 மற்றும் நி.ப. எண். 6)



படம் 8

கூடலழகர், திருமோகூர், ஆண்டாள்கோயில், ஆழ்வார்திருநகரி, ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை, திருப்புளியங்குடி தென்திருப்பேரை ஆகிய எட்டுக் கோயில்களில் இவ்வதிட்டானம் அமைந்துள்ளது. இவற்றில், கூடலழகர், திருமோகூர், ஆண்டாள் கோயில், ஆழ்வார்திருநகரி, ஸ்ரீவைகுண்டம் ஆகிய ஐந்து கோயில்களில் ஒரே மாதிரியான அதிட்டான உறுப்புக்கள் இடம்பெறுவதோடு, இவற்றில் சுவர்ப்பகுதியில் இடம்பெறும் தேவகோட்டம், கோட்டபஞ்சரம் ஆகியவற்றின் புடைப்புக்கேற்ப அவற்றிற்கு நேராக அதிட்டானத்திலும் புடைப்புக் காட்டப்பட்டுள்ளது. விசயநகர – நாயக்கர் காலத்துக் கோயில்களில் பெரும்பாலானவை இத்தகைய அமைப்புடன் காணப்படுகின்றன. வரகுணமங்கை, திருப்புளியங்குடி, தென்திருப்பேரை ஆகிய இடங்களில் அதிட்டானம் அலங்காரமின்றி எளிமையாக அமைக்கப் பட்டுள்ளது.

## 4. பிரதிபந்த அதிட்டானம்

பிரதிபந்த அதிட்டானம் என்பது பாதபந்த அதிட்டான உறுப்புக்களை அப்படியே பெற்று அதில் தூண்களின் கால்ப்பகுதி காட்டப்படாது இருப்பின் அது "பிரதிபந்த அதிட்டானம்" எனப்படும்.[22] இவற்றில் ஜகதி, குமுதம், கண்டம், பட்டிகை, கண்டம், வேதி ஆகிய உறுப்புக்கள் இடம் பெறும். கீழ்க்கண்டத்தில் யாளிகள் இடம்பெறும். *(பார்க்க : வ.ப.எண். 9)*



படம் 9

மன்னார்கோயில் மற்றும் அழகர்கோயில் ஆகிய கோயில்களின் அதிட்டானங்கள் பிரதிபந்த வகையைச் சார்ந்தவை. இதில், மன்னார் கோயில் அதிட்டானம், ஜகதி, விருத்தகுமுதம், வியாளவரி, பட்டிகை, கண்டம், பத்ம இதழ்தாங்கிய வேதி ஆகியவற்றுடன் அமைந்துள்ளது. அழகர்கோயில் அதிட்டானத்தில் ஜகதி, விருத்த குமுதம், வியாள்வரி, வேதி ஆகிய உறுப்புக்கள் இடம்பெற்றுள்ளன.

திருத்தங்கல் கோயில் அதிட்டானம் குன்றின்மேல் அமைந்துள்ளதால் அதில் உபானம், ஜகதி, வேதி ஆகிய உறுப்புக்கள் மட்டும் அமைந்துள்ளன. இவ்வதிட்டானத்தை அதிட்டான வகைகளில் எதிலும் சேர்க்க இயலவில்லை.

## பிரநாளம்

கோயிற் கட்டடக்கலை உறுப்புக்களில் பிரநாளம்[23] ஓர் அங்கமாக விளங்குவதோடு மட்டுமின்றி இறைவனுக்குச் செய்யப்படும் பூசையுடன் தொடர்புடையதாக விளங்குகிறது. இது இறைவனுக்கு. அபிஷேகம் செய்யும் திருமஞ்சன நீர் வெளியேறுவதற்காக அமைக்கப்படும் ஒரு கட்டடக்கலைக் கூறாகும். மேலும், பிரநாளம் அது இடம்பெற்றுள்ள கோயிலின் காலத்தைக் கணிக்க உதவும் ஓர் உறுப்பாகவும் உள்ளது. எனவே, பிரநாளம் ஓர் அலங்கார அமைப்பாக இன்றி பயன்பாட்டுத் தேவை கருதி அமைக்கப்பட்டதாகக் கொள்ளலாம்.

பிரநாளம், விமானத்தின் வடக்குப்பக்கம் அதிட்டானத்தின் உறுப்புக்களில் எது கருவறையின் தளத்திற்கு இணையான உயரத்தில்

உள்ளதோ அதில் அமைக்கப்படும். இது கருவறையின் உள்ளே ஆரம்பித்துக் கருவறைச் சுவரின் வெளியே பிரகாரத்தில் நீட்டியபடி அமைக்கப்படும். சில கோயில்களில் தரைமட்டத்திலிருந்து சற்று கீழே இறங்கி அதிட்டானத்தில் ஜகதி அளவில் கூட இடம் பெறுவதுண்டு. மயமத வாஸ்து சாஸ்திரம் (கி.பி. 11-ஆம் நூற்றாண்டு) திராவிடக் கோயில் களில் பிரநாளம் அமைக்கப்படவேண்டிய இடங்களாக உபபீடம், ஜகதி, கண்டம், பட்டிகை ஆகிய உறுப்புக்களைக் கூறுகின்றது.[24]

பிரதிபந்த அதிட்டானக் கோயில்களில் பட்டிகை அல்லது கண்டம், குமுதம் போன்ற பகுதிகளில் பிரநாளம் அமைக்கலாம் என சுமார் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த காசியப சில்பசாஸ்திரம் கூறுகிறது.[25]

காரண ஆகமத்தில் பிரநாளம் மகாப்பட்டிக்குக் கீழ் அமைக்கப்பட வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. (காரண ஆகமம் 11.33 அதஸ்தாத்து மகாபட்டிகா நாளீநிர்கமன குரு). ஆகமங்களில் பிரநாளம் பற்றிக் கூறுமிடத்து பிரநாளமானது அதன் ஆரம்பத்தில் சிம்மமுகம் கொண்டும் இறுதியில் மகரமோ யானையினுடைய துதிக்கையோ கொண்டும் இடம்பெறல் வேண்டும். மேலும், பிரநாளத்தின் நடுவில் தண்ணீர் வருவதற்கான பள்ளம் வெட்டப்பட்டிருக்க வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது.

தமிழகத்தில் பிரநாளம் குடைவரைக் கோயில்களிலேயே காணக் கிடைக்கின்றது.[26] கட்டுமானக் கோயில்களில் முதல்முதலாக திருத்தணி வீரட்டானேசுவரர் கோயிலில் (அபராஜித பல்லவன் காலம் 885-903) இடம்பெறுகிறது.[27] அக்காலத்தில் கட்டப்பட்ட கோயில்களில் பிரநாளம் பயன்பாடற்ற உறுப்பாகக் கருதப்பட்டாலும் பின்னர் எழுந்த கோயில்களில் இது தவிர்க்க இயலாத ஒரு கூறாக இடம்பெற்றது.

துவக்க காலத்தில் பிரநாளம் சிம்ம முகத்துடன் துவங்கி இறுதியில் சாதாரணமாக முடிவதாயும், அதில் வேலைப்பாடு இன்றியும் அமைந்திருந்தது. அதே காலகட்டத்தில் சில கோயில்களில் மகாமண்டபத்தில் அலங்கரிக்கப்படாத (உதாரணம் : பத்தமடை வில்வநாதர் கோயில்) பிரநாளம் இடம்பெற்றுள்ளது. இத்தகைய அலங்கரிக்கப்படாத பிரநாளங்கள் பிற்காலத்தில் கருவறையிலும் இடம் பெற்றன. இத்தகு பிரநாளங்களின் தண்டுப்பகுதி சுருங்கியதாகவும் அதே சமயத்தில் அதன் நடுவில் தண்ணீர் வருவதற்கான பள்ளத்துடனும் அமையும். இதனை அடுத்த காலகட்டத்தில் சிம்ம முகத்துடன் கூடிய தண்டுப்பகுதியில் சிறிய அளவிலான அலங்காரக் கூடுகள் இடம் பெற்றுள்ளன. இத்தகைய் அமைப்பு பிற்காலப் பாண்டியர் காலத்தில் அதிக அளவில் காணலாம். இதற்கு உதாரணமாக நாங்குனேரி வானமாமலை கோயிலில் இடம்பெற்றுள்ள பிரநாளத்தைக் கூறலாம். (பார்க்க : வ.ப.எண். 10)



படம் 10

விசயநகர-நாயக்கரது காலத்தில் இவ்வுருண்டையான தண்டுப் பகுதி நீண்டு விளங்கியதோடு அதிக வேலைப்பாட்டுடன் திகழ்ந்தது. இக்காலகட்டத்திற்குப் பின்னர் தோன்றிய பிரநாளம் பெரும்பாலும் சிம்ம முகத்துடன் துவங்கி கூர்மையான பூமுனையுடன் அமைந்தது. சில இடங்களில் பிரநாளம் சிம்மமுகன்றி அமைந்துள்ளதைக் காண முடிகின்றது.

பதினைந்து, பதினாறாம் நூற்றாண்டுகளில் பிரநாளத்தில் சிம்ம முகத்திற்குப் பதிலாக யானைத் தலையும் தண்டுப்பகுதியில் யானையின் துதிக்கை அமைப்பும் இறுதியில் பூமுனையும் கொண்டு காணப்படுகிறது.

இந்நூலில் விளக்கப்பெறும் கோயில்களில் ஸ்ரீவைகுண்டம், தாடிக்கொம்பு, தொலைவில்லிமங்கலம் ஸ்ரீநிவாசன், ஆழ்வார்திருநகரி, தென்திருப்பேரை, நாங்குனேரி, கிருஷ்ணாபுரம் ஆகிய கோயில்களில் மட்டுமே முறைப்படி பிரநாளம் இடம்பெற்றுள்ளது. இவற்றின் அமைப்பை வைத்துப் பார்க்கும் பொழுது இவை கருவறையின் வடபகுதியில் அதிட்டானத்தின் கண்டத்தில் பொருத்தப்பட்டுள்ளன எனத் தெரிகிறது. நாங்குனேரி கோயில் பிரநாளம் சிம்ம முகத்துடன் காணப்படுகிறது. தண்டுப்பகுதி எளிமையாகவும் இறுதியில் பூமுனை இன்றியும் அமைந்துள்ளது. இதுவே, காலத்தால் முந்தியதாகத் தெரிகிறது. பத்தமடை வில்வநாதர் கோயிலில் உள்ளதுபோல் அமைந்திருப்பதால் இதனைப் பிற்காலப் பாண்டியர் காலப் பிரநாளமாகக் கொள்ளலாம்.

இதனை அடுத்து இதே அமைப்புடன் திகழும் பிரநாளம் ஸ்ரீவைகுண்டத்தில் காணப்படுகிறது. இப்பிரநாளம் உபபீடத்தின் கபோதப் பகுதியில் இடம்பெறுகிறது. மேலும், இது தேவகோட்டத்தின் நேர் கீழே அமைந்துள்ளது.

ஸ்ரீநிவாசன்கோயில் பிரநாளம் எளிய அமைப்புடன் சிம்ம முகமின்றியும் பூமுனையின்றியும் காணப்படுகிறது. இஃது அமைப்பில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் மகாமண்டபத்தில் காணப்படும் பிரநாளம் போல் காணப்படுகிறது.

கிருஷ்ணாபுரம்கோயில் அதிட்டானத்தில் கண்டம் மற்றும் வேதிப்பகுதியில் பிரநாளம் இடம்பெறுகிறது. இப்பிரநாளம் விசய நகர-நாயக்கர் கலைப்பாணியில் அமைந்துள்ளது. பிரநாளம் சிம்ம முகத்துடன் தொடங்கி உருண்டையான தண்டுப்பகுதியுடனும், தண்டுப்பகுதி பூமுனையுடனும் காணப்படுகிறது. (பார்க்க வ.ப.எண். 11)



படம் 11

தாடிக்கொம்புகோயில் பிரநாளம் அதிட்டானத்தின் குமுதத்தில் இடம்பெற்றுள்ளது. இது சிம்ம முகம் இன்றி அமைந்துள்ளது. தண்டுப்பகுதி உருண்டையாகவும் முனை பத்மத்துடனும் அமைந்துள்ளது. இதுவும் விசயநகர - நாயக்கர் காலத்தைச் சேர்ந்தது.

தென்திருப்பேரை, ஆழ்வார்திருநகரி ஆகிய கோயில்களில் சமீப காலத்தில் பிரநாளம் வைக்கப்பட்டுள்ளது. தென்திருப்பேரையில் பிரநாளமானது பத்மஜகதி மற்றும் கண்டப்பகுதியில் இடம் பெற்றுள்ளது. இக்கோயிலில் 1995-ஆம் ஆண்டு நடைபெற்ற குடமுழுக்கின்போது இறையுருவின் மேல் இருந்த சுதை நீக்கப்பட்டு தொடர்சியான திருமஞ்சன நீருக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதால் புதிதாகப் பிரநாளம் வைத்துள்ளனர். [28]

ஆழ்வார்திருநகரியில் உபபீடத்தின் கபோதப் பகுதியில் பிரநாளம் இடம்பெற்றுள்ளது. இப்பிரநாளம் எவ்வித அலங்காரமுமின்றி சாதாரண அமைப்பில் இடம்பெற்றுள்ளது. முந்தைய பிரநாளம் பழுதடைந்து போன காரணத்தால் அண்மையில் புதிய பிரநாளம் வைக்கப் பட்டிருக்கக் கூடும்.

அழகர்கோயிலில் பிரநாளம் கருவறையில் இடம்பெறாது அர்த்த மண்டபத்தில் இடம்பெற்றுள்ளது. விசயநகர-நாயக்கர் காலத்தில் அர்த்த

மண்டபத்தின் உட்பகுதியில் நான்கு தூண்களுடன் கூடிய குறடு அமைக்கப்பட்டுள்ளது. கள்ளழகர் (உற்சவர்) பல நாட்களுக்கு இங்குதான் எழுந்தருளுவார். எனவே, இங்கு திருமஞ்சனம் நடைபெறுவதற்காகப் பிரநாளம் அமைக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி கோயிலில் கருவறை தற்பொழுது மேல்தளத்தில் உள்ளது. இதன் கீழ்த்தளத்தில் இலட்சுமிநரசிம்மர் கருவறை உண்டு. இக்கருவறையின் உட்பக்கம் சதுர வடிவில் உள்ளது. இதன் வெளிப்பகுதி பிற்காலத்தில் நீள்சதுரமாக நீட்டப்பட்டுள்ளது என்பதை முன்னரே கண்டோம். எனவே, கீழ்த்தளம் செவ்வக வடிவிலேயே உள்ளது. கீழ்த்தளத்தில் பிரநாளம் இல்லை. மேல்தளத்தில் உள்ள கருவறையின் வடக்குப்பக்கம் பிரநாளம் வைக்கப்படவில்லை. மாறாக கருவறையைச் சுற்றியுள்ள திருச்சுற்றுப் பாதையை அடுத்து வெளிச்சுவரில் வடகிழக்கு மூலையில் அமைக்கப்பட்டுள்ளது. இதனைப் பிரநாளம் எனக்கருத இயலாது. ஆனால், இது பிரநாள வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. இங்கு பிரநாளத்திற்குப் பயன் ஏதுமில்லை. இதுபோன்று தேவையற்ற நிலை ஏற்படும்போது, கோயிலைத் திருத்தி அமைப்பவர்கள் முந்தைய பிரநாளத்தினை கோயிற்சுவரில் ஏதேனுமொரு இடத்தில் வைத்து விடுவது பல கோயில்களில் காணப்படும் வழக்கமாகும். இது பழைய கோயிலின் எச்சத்தைக் காண உதவுகின்றது.

இங்கு எடுத்துக் கொள்ளப்பட்ட கோயில்கள் பலவற்றில் பிரநாளம் இல்லை. இதற்குக் காரணம் கருவறையில் உள்ள இறையுரு சுதையினால் செய்யப்பட்டிருந்ததேயாகும். எனவே, திருமஞ்சனம் நடைபெறாததால் பிரநாளம் வைக்கப்படாமல் இருந்திருக்க வேண்டும். உதாரணமாக, மதுரை கூடலழகர் கோயிலில் பிற்காலப் பாண்டியரின் திருமால் இறையுருவம் கல்லில் செய்யப்பட்டு சுதை பூசப்பட்டிருப்பதால் இங்குக் கருவறையில் பிரநாளம் இல்லை.

## அரைத்தூண்

அரைத்தூண் என்பது சுவர்ப்பகுதியில் இடம்பெறும் அலங்கார வேலைப்பாடுகளுள் ஒன்றாகும். விமானத்தின் ஆறு அங்கங்களில் ஒன்றான சுவர்ப்பகுதி "கால்" எனப் பெயர் பெறுவதே இந்த அரைத்தூண்கள் இங்கு இடம் பெறுவதால்தான் எனக் கொள்ளலாம். அரைத்தூண் எனும் அமைப்பு தமிழகத்தில் பல்லவரது குடைவரைக் கோயில்களிலேயே காணக்கிடைக்கின்றது.

குடைவரைகளில் தோன்றிய அரைத்தூண், அமைப்பில் சில மாற்றங்களுடனும், வளர்ச்சியுடனும் பஞ்சபாண்டவ இரதங்களிலும், கட்டுமானக் கோயில்களிலும் இடம்பெறத் தொடங்கியது.

அரைத்தூண்களின் கீழ்ப்பகுதியில் பத்மபீடம் இடம்பெறுதலைப் பஞ்சபாண்டவ இரதங்களில் திரௌபதி இரதத்திலேயே காண

முடிகிறது.[29] மேலும், அரைத்தூண்களின் கீழ்ப்பகுதியைச் சதுரமாக அமைத்தலையும், அவற்றின் கம்புப் பகுதி சதுரம், மற்றும் எட்டுப்பட்டையுடன் காணப்படுவதையும் பஞ்சபாண்டவ இரதங்களில் காணலாம்.

பிற்காலத்தில் வந்த அரைத்தூண்களின் அமைப்பானது குடைவரைகளிலும் ஆரம்ப காலக் கட்டுமானக் கோயில்களிலும் இடம் பெற்றிருந்த அமைப்பாகவே இருப்பதால் தூண்களின் அமைப்பு கோயில்களின் காலத்தைக் கணிக்கப் பயன்படவில்லை எனினும் அரைத்தூண்களின் சதுரப்பகுதியில் இடம் பெறும் நாகபந்தம், முப்பத்தி இரண்டு பட்டைகள், கட்டுக்கள் முதலான வளர்ச்சி நிலைகளும் அரைத்தூண்களின் மேற்பகுதியில் இடம்பெறும் போதிகையும் கோயில்களின் காலத்தை அறியத் துணை செய்கின்றன.

எடுத்துக் கொண்ட கோயில்களின் அரைத்தூண்களைப்பற்றிப் பின்வரும் பகுதி விளக்குகின்றன. (பார்க்க நி.ப. எண் 3, 5) பொதுவாக, அரைத்தூண்களை அதன் உறுப்புக்களை வைத்துக் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம்.

1. சதுரப்பகுதி
2. கம்புப்பகுதி
3. மாலசுதானம்
4. பத்மபந்தம்
5. கலசம்
6. தாடி
7. குடம்
8. பத்ம இதழ்
9. பலகை
10. வீரகண்டம்
11. போதிகை என்பன.

இவ் அடிப்படையில் இக்கோயில்களின் அரைத்தூண்கள் கீழ்க்கண்டவாறு ஒப்பிடப்படுகின்றன.

## சதுரப்பகுதி

திருப்புல்லாணி, அழகர்கோயில், திருமோகூர், கூடல்ழகர், திருமெய்யம், ஆழ்வார்திருநகரி, வரகுணமங்கை, ஸ்ரீவைகுண்டம், திருப்புளியங்குடி, திருக்குறுங்குடி, ஆண்டாள்கோயில், வடபத்ரசாயி கோயில், திருக்கோட்டியூர், தென்திருப்பேரை, திருத்தங்கல் ஆகிய கோயில்களில் அரைத்தூண்களின் கீழ்ப்பகுதி சதுர அமைப்பும் அதன் மேல் நாகபந்தமும் கொண்டு விளங்குகின்றன.

அழகர்கோயில் மற்றும் நாங்குனேரி கோயில்களில் சதுரப் பகுதிகளுக்கு மேல் நாகபந்தம் இடம் பெறவில்லை.

அரவிந்தலோசனன், ஸ்ரீநிவாசன், திருக்கோளூர், கிருஷ்ணாபுரம், தாடிக்கொம்பு, மன்னார்கோயில், பெருங்குளம் ஆகிய ஏழு கோயில்களில் அரைத்தூண்களின் கீழ்ப்பகுதியில் சதுர அமைப்பு இடம் பெறவில்லை. (பார்க்க நி.ப.எண். 3) ஆனால், ஸ்ரீநிவாசன் கோயிலில் மட்டும் சதுரத்திற்குப் பதிலாக பத்ம பீடம் இடம் பெற்றுள்ளது.

மேற்கண்ட சதுர அமைப்புடைய கோயில்களில் தென் திருப்பேரையில் சதுரப்பகுதியினுள் சிற்றுருவச் சிற்பங்கள்

செதுக்கப்பட்டுள்ளன. இவைகளில் பெரும்பாலானவை பாகவத, இராமாயணக் கதைகள் தொடர்புடையனவாகும். ஆழ்வார்திருநகரி, ஸ்ரீவைகுண்டம் ஆகிய கோயில்களில் சிறுகோயில் அமைப்புக் காணப்படுகிறது. சிற்றுருவ அமைப்பும் சிறுகோயில் அமைப்பும் விசயநகர-நாயக்கர்கால கலைத்திறனைச் சேர்ந்ததாகும்.

திருப்புல்லாணி, திருமோகூர், திருமெய்யம், திருப்புளியங்குடி, வரகுணமங்கை, ஆண்டாள்கோயில், வடபத்ரசாயிகோயில், திருக்குறுங்குடி, திருக்கோட்டியூர் ஆகிய ஒன்பது கோயில் சதுரங்களில் கொடிக்கருக்கு வேலைப்பாடுகள் அமைந்துள்ளன.

அழகர்கோயில், திருத்தங்கல், நான்குனேரி, பெருங்குளம் ஆகிய நான்கு கோயில்களில் சதுரங்கள் வேலைப்பாடின்றி காணப்படுகின்றன.

கூடலழகர் கோயிலில் மட்டும் சதுரப்பகுதியில் சிறு சிம்மங்களும், யாளிகளும் இடம்பெற்றுள்ளன.

## கம்புப்பகுதி

கம்புப்பகுதியானது அரைவட்டமாகவோ, சதுரமாகவோ, எண்பட்டையாகவோ பதினாறுபட்டையாகவோ அமையும்.

அழகர்கோயில், திருமெய்யம் ஆகிய கோயில்களில் கம்புப்பகுதி அரைவட்டமாக அமைந்துள்ளது.

நாங்குனேரி, திருப்புல்லாணி, பெருங்குளம், அரவிந்தலோசனன், ஸ்ரீநிவாசன், மன்னார்கோயில், தாடிக்கொம்பு, கிருஷ்ணாபுரம், திருக்கோளூர் ஆகிய கோயில்களில் கம்புப்பகுதி சதுரமாக அமைந்துள்ளது.

தென்திருப்பேரையில் எட்டுப்பட்டை மற்றும் பதினாறுபட்டை அமைப்புகள் காணப்படுகின்றன.

ஆண்டாள், வடபத்ரசாயி, வரகுணமங்கை, திருப்புளியங்குடி, ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி, கூடலழகர், திருமோகூர் ஆகிய கோயில்களில் அரைவட்டம், எண்பட்டை மற்றும் பதினாறுபட்டை அமைப்பு இடம்பெற்றுள்ளது.

## மாலசுதானம்

எடுத்துக்கொண்ட கோயில்களில் திருத்தங்கல் மற்றும் தாடிக்கொம்பு தவிர ஏனைய கோயில்களில் மாலசுதானம் இடம் பெற்றுள்ளது. திருப்புல்லாணியில் மாலசுதானம் பகுதியில் சிற்றுருவச் சிற்பங்களாக இரணிய நரசிம்மர் யுத்தக்காட்சிகள் இடம்பெற்றுள்ளன. இதன் இருபுறம் அடியவர் இருவர் வணங்கிய நிலையிலும் உள்ளனர். மாலசுதானத்தில் சிறுசிற்பங்களை அமைக்கும் இத்தகு அமைப்பு தமிழகத்தில் பிற்காலப்பல்லவர் காலத்திலும் சோழர் காலத்திலும் நடைமுறையிலிருந்திருக்கின்றது.[30]

## பிற உறுப்புக்கள்

அரைத்தூணில் பிற உறுப்புக்களான பத்மபந்தம், கலசம், தாடி, குடம், பத்ம இதழ், பலகை முதலியன பெரும் பகுதி ஒரே மாதிரியாக இடம் பெற்றுள்ளதால் அவை பிற உறுப்புக்கள் எனும் இத்தலைப்பின் கீழ் கூறப்படுகின்றன.

அனைத்துக்கோயில்களிலும் பத்மபந்தம் அமைந்துள்ளது. திருத்தங்கல் கோயில் கம்புப்பகுதியின் மேற்பகுதி சதுரமாக அமைந்துள்ளதால் இதில் பத்மமும், அதனை அடுத்து இடம்பெறும் பிற உறுப்புக்களும் இடம்பெறவில்லை.

அனைத்துக் கோயில்களிலும் கலசம் முச்சுடர் வேலைப்பாட்டுடன் திகழ்கிறது. தாடியானது பத்மஇதழ் வேலைப்பாட்டுடன் அமைந்துள்ளது. நாங்குனேரியில் மட்டும் அலங்காரம் இன்றி செதுக்கப்பட்டுள்ளது. குடம் பூ வேலைப்பாட்டுடன் அமைந்துள்ளது. அனைத்துக் கோயில்களிலும், கூர்மையாகவும், கீழ்நோக்கி மடித்தும் காணப்படுகின்றன. நாங்குனேரி, மன்னார்கோயில், திருக்குறுங்குடி, திருக்கோளூர், பெருங்குளம், ஆண்டாள்கோயில், வடபத்ரசாயிகோயில், தாடிக்கொம்பு, அரவிந்தலோசனன், ஸ்ரீநிவாசன் கோயில் ஆகியவற்றில் பலகை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு மேற்பகுதி தட்டையாகவும், கீழ்ப்பகுதி விருத்தமாகவும் அமைகிறது.

தென்திருப்பேரை, கூடலழகர், திருமெய்யம், திருமோகூர், அழகர்கோயில், கிருஷ்ணாபுரம், திருப்புல்லாணி, திருக்கோட்டியூர், வரகுணமங்கை, திருப்புளியங்குடி, ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி ஆகிய கோயில்களில் பலகை பிரிக்கப்படாது சதுர வடிவமாக அமைந்துள்ளது. இதில், கூடலழகர் கோயிலில் பலகையின் விளிம்பில் கொடிவேலைப்பாடு இடம்பெற்றுள்ளது. இத்தகு அமைப்பு சோழர்காலக் கோயில்களில் குறிப்பாகத் தஞ்சை பெரிய கோயிலில் காணப்படுகிறது. பாண்டிய நாட்டில் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் இத்தகு அமைப்பைக் காணலாம்.

வீரகண்டம் எல்லாக் கோயில்களிலும் எளிமையாகவே காணப்படுகிறது.

## போதிகை

போதிகையில் பல்லவர்பாணி, முற்காலச் சோழர்பாணி, பிற்காலச் சோழர்பாணி, விசயநகர-நாயக்கர் பாணி எனப் பல்வேறு வளர்ச்சி நிலைகள் உள்ளன.[31] பொதுவாக கோயில்களின் காலத்தைக் கணக்கிட போதிகை பயன்படுகிறது. எனினும், சில நேரங்களில் போதிகையை மட்டும் வைத்துக் கோயிலின் காலத்தைக் கணக்கிட இயலவில்லை. ஏனெனில், ஒரு கோயில் எந்த அரச பரம்பரையினரின் காலத்தில் கட்டப்பட்டதோ, அந்த அரசப்பரம்பரையினரின் கலைப்பாணியைச்

சேர்ந்த போதிகை அக்கோயிலில் பயன்படுத்தப்படாது அதற்கு முந்தைய அரச பரம்பரையினரின் கலைப்பாணியைச் சேர்ந்த போதிகை அமைப்பு பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆகவே, கோயிலின் பிற கட்டடக் கலை உறுப்புக்களையும், போதிகைய்யையும் ஒட்டு மொத்தமாக வைத்துப் பார்க்கின்றபோது ஓரளவிற்கு கோயிலின் காலத்தைக் கணிக்கலாம். இப்பகுதியில் கோயில்களில் எந்தெந்த அரச பரம்பரையினரின் கலைப்பாணி போதிகையில் பின்பற்றப்பட்டுள்ளது என்பதைக் காண்போம்.

அழகர்கோயில், திருமெய்யம், திருக்குறுங்குடி, பெருங்குளம் ஆகிய கோயில்களில் போதிகை சிறுமொட்டு வடிவத்தில் காணப்படுகின்றது. இது பிற்காலப் பாண்டியரது பாணியாகும்.

திருத்தங்கல், மன்னார்கோயில், திருக்கோளூர், தாடிக்கொம்பு, கிருஷ்ணாபுரம், நாங்குனேரி ஆகிய கோயில்களில் ஆப்புகள் நீட்டிய வெட்டுப் போதிகை இடம் பெற்றுள்ளது. இத்தகையவை சோழர்களுடைய அமைப்பாகும். (பார்க்க நி.ப. எண். 5) எனவே, சோழர்காலப் போதிகைப்பாணி இங்கு பின்பற்றப்பட்டுள்ளது எனக் கொள்ளலாம். இம்மாதிரி முந்தைய பாணிகளைப் பிற்காலத்தில் இணைக்கும் வழக்கம் இருந்துள்ளதனை திருமோகூர், யானைமலை போன்ற கோயில்களிலும் காணலாம்.

ஆண்டாள் கோயில், வடபத்திரசாயிகோயில், அரவிந்தலோசனன், ஸ்ரீநிவாசன், திருக்கோட்டியூர், திருப்புல்லாணி, கூடலழகர், திருமோகூர், தென்திருப்பேரை, ஸ்ரீவைகுண்டம் ஆகிய கோயில்களில் விசயநகர-நாயக்கர் கலைப்பாணியைச் சேர்ந்த போதிகை அமைப்பான பூமுனைப் போதிகை இடம்பெற்றுள்ளது. (பார்க்க நி.ப.எண். 3)

எனவே, போதிகை அமைப்பை வைத்துப் பார்க்கின்றபோது தாடிக்கொம்பு, கிருஷ்ணாபுரம், திருமோகூர் போன்ற விசயநகர-நாயக்கர் கலைப்பாணியைச் சேர்ந்த கோயில்களில்கூட முற்காலச்சோழர் கலைப்பாணியிலமைந்த வெட்டுப் போதிகைகள் இடம்பெற்றுள்ளன. எனவே, அவ்வவ்வரச பரம்பரைக்குரிய கலைப்பாணியில் போதிகைகள் அமையாது அதற்கு முற்பட்டவரின் கலைப்பாணியைப் பின்பற்றியும் போதிகை அமைக்கப்பட்டுள்ளது. எனவே போதிகையை வைத்துக் கோயிலின் காலத்தை முழுமையாகக் கணக்கிட முடியவில்லை. எனினும், விமானத்தின் அனைத்து உறுப்புக்களையும் வைத்துக் கோயிலின் காலம் கணக்கிடும் போது போதிகையும் பயன்படவே செய்கின்றது.

## கும்பப்பஞ்சரம்

பஞ்சரம் என்பது சுவர்ப்பகுதியில் இடம்பெறும் ஓர் அலங்கார வேலைப்பாடாகும். இப்பஞ்சரம் கும்பப்பஞ்சரம், கம்பப்பஞ்சரம், கோட்டப்பஞ்சரம் என மூவகைப்படும். இவை மூன்றும்

தேவகோட்டத்தை ஒட்டி அதன் இருபுறமும் உள்ள அகாரை மற்றும் கர்ணப்பகுதியில் இடம்பெறும்.

கும்பப்பஞ்சரம் என்பது அடிப்பகுதியில் கலசமும் அதன் மேல் கால்ப்பகுதியும் அதற்குமேல் பஞ்சரமும் இடம்பெறுவது ஆகும்.(பார்க்க நி.ப. எண். 4) கம்பப்பஞ்சரம் என்பது இதே அமைப்பைப் பெற்று கீழே கும்பம் இன்றி அமையும்.[32]

கும்பம் என்பது வளமை, செழுமை என்பதைக் குறிக்கும் ஒரு குறியீடு எனலாம். இத்தகு கும்பம் பௌத்தக் கலைகளில் தொடங்கப் பெற்று பின்னர் இந்து மற்றும் சமணக் கலைகளில் இடம்பெறத் துவங்கிற்று. தமிழகத்தைப் பொருத்தமட்டில் குடைவரைக் கோயிலில் இப்பஞ்சரம் இடம்பெறவில்லை. பல்லவர் காலத்தில் எழுந்த கட்டுமானக் கோயில்களிலும், முற்காலப்பாண்டியரது கோயில்களிலும் இக்கும்பப் பஞ்சரம் இடம்பெறவில்லை. முதன்முதலாகக் கும்பப் பஞ்சரம் சோழர் காலத்துக் கோயில்களில் இடம்பெறுகிறது. தஞ்சை பிரகதீஸ்வரர் கோயிலில் (கி.பி.1018 ல்) கூட கும்பப்பஞ்சரத்தைக் காணலாம். கும்பப்பஞ்சரம் ஆரம்ப காலங்களில் எளிமையாக அமைக்கப்பட்டுப் பிற்காலத்தில் பல மடிப்புக்களுடனும், அலங்காரங்களுடனும் காணப்பட்டது.

இங்கு எடுத்துக்கொள்ளப்பட்ட கோயில்களில் கூடலழகர், திருமோகூர், திருக்குறுங்குடி, திருப்புளியங்குடி, ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி ஆகிய ஆறு கோயில்களில் கும்பப்பஞ்சரம் இடம் பெற்றுள்ளது. இவை தவிர பிறகோயில்களில் கும்பப் பஞ்சரமோ, கம்பப் பஞ்சரமோ இடம் பெறவில்லை.

மேற்கண்ட கோயில்களில் காணப்படும் கும்பப்பஞ்சரங்கள் அனைத்தும் பொதுவாக மடிப்புக்களுடன் காணப்படுகின்றன. மேலும், ஒரே கோயில் சுவரில் இடம்பெறும் கும்பப் பஞ்சரங்கள் ஒவ்வொன்றும் வேறுபட்ட மடிப்புக்களைக் கொண்டும் காணப்படுகின்றன. பல்வேறு விதமான மடிப்புக்களுடன் கும்பப் பஞ்சரங்கள் காணப்படுவதற்கு ஆழ்வார்திருநகரி கோயிலை உதாரணமாகக் கூறலாம்.

கும்பப் பஞ்சரங்கள் அகாரைப் பகுதிகளிலும் கர்ணப்பகுதிகளிலும் இடம்பெறுகின்றன. கும்பப்பஞ்சர தண்டுப்பகுதியின் துவக்கத்தில் இருபுறமும் தோரணஅமைப்பு இடம்பெறுகின்றது. கம்புப்பகுதியின் மேலே கலசம், தாடி, கும்பம், பலகை ஆகிய உறுப்புக்கள் இடம்பெறுகின்றன. பலகைக்கு மேல் சில கோயில்களில் நான்கு சிறு சிம்மங்களும் சில கோயில்களில் சிம்மங்கள் இன்றி சாதாரண கட்டை அமைப்பும் இடம்பெற்றுள்ளன. கண்டத்திற்கு மேல் கபோதம் இடம்பெறுகிறது. இக்கபோதப் பகுதியில் ஒன்று அல்லது இரண்டு கூடுகள் இடம்பெறுகின்றன. சில, கபோதக் கூடுகள் இன்றியும் அமைந்துள்ளன. கபோதத்திற்கு மேல் சிம்மமுகத்துடன் கூடிய பஞ்சரம் இடம் பெறுகிறது.

நாங்குநேரி கோயிலில் கம்பப்பஞ்சரம் இடம்பெற்றுள்ளது. இது மடிப்புக்கள் இன்றி அமைந்துள்ளது. இக்கம்பப்பஞ்சரம் கும்பப் பஞ்சரத்தின் அமைப்பினைப் பெற்றும் கீழே கும்பம் இன்றிக் காணப்படுகிறது.

இதுவரை கண்டவற்றிலிருந்து கோயில்களில் கும்பப்பஞ்சரமோ கம்பப்பஞ்சரமோ இடம்பெற்றுள்ளன என்பதை அறிய முடிகிறது. எனினும், இவைகள் இடம் பெறாமலும் அமைகின்றன. பெரும்பாலான கோயில்களில் கும்பப்பஞ்சரமோ, கம்பப்பஞ்சரமோ இடம்பெறா விட்டாலும், கோட்டப்பஞ்சரம் இடம்பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

## கோட்டப்பஞ்சரம்

கோட்டப்பஞ்சரம் என்பது சுவர்ப்பகுதியில இடம்பெறும் ஓர் அலங்கார வேலைப்பாடு ஆகும். இது தேவகோட்டத்தின் இருமருங்கிலும் அகாரை மற்றும் கர்ணப்பகுதிகளில் இடம்பெறும். கோட்டப்பஞ்சரம் அமைப்பில் பெரும்பகுதி தேவகோட்டத்தை ஒத்துக் காணப்பட்டாலும் தேவகோட்டத்தினின்று வேறுபட்டதாகும். இது தேவகோட்டத்தைப் போன்று அரைத்தூண்களைப் பெற்றிருந்தாலும் அவ் அரைத் தூண்களின் உட்பகுதி வெட்டப்பட்ட அமைப்பில் காணப்படும். கோட்டப்பஞ்சரத்தின் மேற்பகுதி சாலை அமைப்புடனோ, பஞ்சர அமைப்புடனோ, அல்லது சாலை, பஞ்சர அமைப்புடனோ காணப்படும்.

ஆரம்பகாலப் பல்லவரது கோயில்களில், தேவகோட்டத்தின் இருமருங்கிலும் கோட்டப்ப்ஞ்சரம் இடம்பெறாமல் இறைவுருவங்கள் மட்டும் இடம்பெற்றன. சோழர் காலத்தில் கோட்டப்பஞ்சரங்கள் அமைக்கப்பட்டு அதனுள் இறையுருவங்களும் இடம்பெற்றன. ஆனால், பாண்டிய நாட்டில் இறையுருவங்கள் இன்றியே கோட்டப்பஞ்சரங்கள் இடம்பெறுகின்றன. மேலும், இறையுரு வைப்பதற்கான பள்ளம் இன்றியே கோட்டப்பஞ்சரம் அமைந்துள்ளது.

எடுத்துக் கொண்டுள்ள கோயில்களில் கோட்டப்பஞ்சரமானது, ஸ்ரீவைகுண்டம், தென்திருப்பேரை, திருக்கோட்டியூர், வரகுணமங்கை, திருப்புளியங்குடி, ஆழ்வார்திருநகரி, திருப்புல்லாணி, திருமோகூர், கூடலழகர், மன்னார்கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில் ஆகிய பதினாறு கோயில்களில் மட்டும் காணப்படுகிறது.

அவற்றில் ஸ்ரீவைகுண்டம் மற்றும் ஆழ்வார்திருநகரியில் மட்டும் கோட்டப்பஞ்சரத்தின் மேற்பகுதியில் கபோதமும் அதன்மேல் பஞ்சரஅமைப்பும் இடம்பெறுகின்றன. மற்ற கோயில்களில் கபோதத்தின் மேல் சாலை அமைப்புக் காணப்படுகிறது.

கோட்டப்பஞ்சர கபோதங்களில் சிம்ம முகநுனியுடன் கூடிய கூடுகள் இடம்பெற்றுள்ளன. இக்கூடுகளில் முகப்பட்டியானது கொடி மற்றும்

மலர் வேலைப்பாடுகளுடன் காணப்படுகின்றன. இக்கூடுகளில் உருவங்கள் எதுவும் காணப்படவில்லை.

மன்னார்கோயில் மற்றும் திருப்புல்லாணி ஆகிய கோயில்கள் தவிர பிறகோயில்களில் கோட்டப்பஞ்சரக் கபோதங்கள் தாழ்வார அமைப்புடன் விளங்குகின்றன. கூடலழகர் மற்றும் ஆண்டாள் கோயில்களில் கோட்டப்பஞ்சரக் கால்களின் கீழ்ப்பகுதியில் சதுரங்களும், அவற்றில் அமர்ந்த நிலையிலான சிம்மங்களும் இடம்பெற்றுள்ளன. திருக்கோட்டியூரில் பின்னிய நாகஅமைப்பு மற்றும் கொடி வேலைப்பாடுகள் காணப்படுகின்றன. சிலவற்றில் அடியவர் சிற்பம் இடம்பெறுகிறது. ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி மற்றும் தென்திருப்பேரை ஆகிய கோயில்களில் இச்சதுரப் பகுதியில் சிறு கோயில் அமைப்புக் காணப்படுகிறது. பிற கோயில்களில் சதுரங்களில் கொடி வேலைப்பாடுகள் இடம்பெறுகின்றன.

கோட்டப்பஞ்சர சாலை அமைப்புக்களின் மேல் பஞ்சரம் அமைந்துள்ளது. இப்பஞ்சரத்தினுள் சிறு கோயில் அமைப்புக் காணப்படுகிறது. மன்னார்கோயிலில் மட்டும் இப்பஞ்சர அமைப்பினுள் சிலவற்றில் அனுமன், காளியகிருஷ்ணன் உருவங்கள் சிறிய அளவில் இடம்பெற்றுள்ளன.

இதுவரைகண்ட கோட்டப்பஞ்சர அமைப்புக்களிலிருந்து கீழ்க்காணும் முடிவுகள் பெறப்படுகின்றன. பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களின் கோட்டப்பஞ்சரங்களில் இறையுரு இடம்பெறவில்லை. மேலும், கோட்டப்பஞ்சரங்களின் மேற்பகுதி சாலை அமைப்பு அல்லது கபோத அமைப்பைக் கொண்டு அதன் மேல் பஞ்சர அமைப்புடன் காணப்படுகின்றன. இப்பஞ்சரத்தினுள் சிறுகோயில் அமைப்பும், சிலவற்றில் இறையுருவங்கள் அமைக்கும் வழக்கமும் இருந்துள்ளன.

## தேவகோட்டம்

கருவறையின் சுவர்ப்பகுதியில் தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய மூன்று பக்கங்களிலும் தேவகோட்டங்கள் அமையும். இவை சில்சமயம் அர்த்த மண்டபம் மற்றும் மகாமண்டபச் சுவர்களிலும் அமைவதுண்டு. இந்தத் தேவகோட்டங்களில் ஒவ்வொரு திசைக்கும் இன்னின்ன கடவுள் உருவத்தை வைக்க வேண்டும் என ஆகம விதி கூறுகிறது.[33] அதன்படி சைவக்கோயில் எனில், தெற்கே தட்சிணாமூர்த்தியும், மேற்கே லிங்கோத்பவரும், வடக்கே பிரம்மன் அல்லது துர்க்கையும் இடம் பெறவேண்டும். இது பொது விதியாகும். இவை மாறியும் வரலாம். அதாவது மேற்கில் லிங்கோத்பவருக்குப் பதிலாக யோகநரசிம்மரோ அல்லது அர்த்த நாரீசுவரரோ வைக்கப்படலாம். அதேபோல் வைணவக் கோயில் எனில், திருமாலின் வெவ்வேறு அவதாரச் சிற்பங்கள் அமையும்.

தமிழகத்தில் தேவகோட்ட அமைப்பு குடவரைக் கோயில்களில் இல்லை. இவ்வமைப்பு பல்லவரது பஞ்சபாண்டவ இரதங்களில்தான் முதன்முதலில் காணப்படுகிறது. மேலும், தேவகோட்டங்களில் இறையுருவங்களை வைக்கும் மரபின் துவக்க நிலையையும் இதில் காண முடிகிறது.

கி.பி. எட்டாம் நூற்றாண்டில் காஞ்சிபுரத்தில் கட்டப்பட்ட இராசசிம்மேசுவரம் எனும் கைலாசநாதர் கோயிலில் கருவறைச் சுவரின் மேற்குப்பக்கம் லிங்கோத்பவரும், வடக்கே திரிபுராந்தகரும், தெற்கே ஊர்த்துவதாண்டவ மூர்த்தியும் இடம்பெற்றுள்ளனர். எனவே, கி.பி. எட்டாம் நூற்றாண்டில் கூட தேவகோட்டச் சிற்பங்கள் எவ்வெப்பக்கத்திற்கு எந்தெந்த இறைவுரு இடம் பெற வேண்டும் என்ற நியதி வகுக்கப்படவில்லை எனத் தெரிகிறது. அதன் பின்னர் சோழர் காலத்தில்தான் இந்நியதி ஏற்படுத்தப்பட்டு அது பின்பற்றப் பட்டிருக்கிறது. இக்காலத்தில் தெற்கே தட்சிணாமூர்த்தி, வடக்கே பிரம்மன் அல்லது துர்க்கை, மேற்கே அர்த்தநாரி / திருமால் / நரசிம்மர் / லிங்கோத்பவர் என வரையறை செய்யப்பட்டது.

தேவகோட்டத்தில் சிலை வைக்கும் வழக்கம் பல்லவர் காலத்தில் துவங்கப்பட்டாலும், சோழர் காலத்தில் அது முறைப்படுத்தப்பட்ட ஒன்றாக விளங்கியது. ஆனால், பாண்டியர்கள் தாங்கள் கட்டிய கோயில்களில் தேவகோட்டங்களையும் அதில் இறையுருவங்கள் வைப்பதற்கான பள்ளங்களையும் வைத்தனரேயன்றி இறையுருவங்களை வைக்கவில்லை. இவ்வாறு, பாண்டியர்கள் சிலைகள் வைக்காததன் காரணம் என்ன என்பது பற்றி அறிய இயலவில்லை. ஒரு வேளை சோழர்களது கட்டடக்கலைப் பாணியிலிருந்து தங்களது பாணியைப் பிரித்துக் காட்ட வேண்டி இப்படிச் செய்திருக்கலாம். மேலும், இவர்கள் இறையுருவங்களை கபோதத்திற்கு மேலே வைக்கத் தொடங்கினர். இறையுருவங்களை உயரத்தில் வைக்க வேண்டும் என்பது அவர்களது எண்ணமாயிருந்திருக்க வேண்டும். பாண்டியருக்குப்பின் வந்த விசயநகர–நாயக்கரும் பிற்காலப்பாண்டியரது கலைப்பாணியின் சில கூறுகளை மட்டும் பின்பற்றினர். இனி எடுத்துக் கொண்ட கோயில்களில் தேவகோட்ட அமைப்பினைக் காணலாம்.

எடுத்துக் கொண்ட கோயில்களில் திருத்தங்கல், அழகர்கோயில், திருக்கோளூர், ஆகிய மூன்று கோயில்கள் தவிர ஏனைய கோயில்க்ளில் தேவகோட்டங்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றில் ஆழ்வார்திருநகரி மற்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி கோயில்[14] ஆகிய இடங்களில் மட்டும் தேவகோட்டங்களில் இறையுருவங்கள் இடம் பெற்றுள்ளன. பிறகோயில்கள் அனைத்தும் இறையுரு வைப்பதற்கான பள்ளத்துடன் கூடிய தேவகோட்டத்துடன் காணப்படுகின்றன. ஆண்டாள்கோயில், மற்றும் திருமோகூரில் இத்தேவகோட்டப்பள்ளத்தில் இறையுரு வைப் பதற்கான பீடம் காணப்படுகிறது.

ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை, புளியங்குடி ஆகிய கோயில் தேவகோட்டங்களின் உட்பகுதியில் வடிவவியல் உருவ அமைப்புக் கொண்ட போலிச்சாளரங்கள் காணப்படுகின்றன.

எடுத்துக் கொண்ட கோயில்களில் இடம் பெறும் தேவகோட்டங்களின் அமைப்பை வைத்து அவற்றை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவையாவன.

1. தோரண அமைப்புடைய தேவகோட்டம்.
2. சாலை அமைப்புடைய தேவகோட்டம்.

## தோரண அமைப்புடைய தேவகோட்டம்

தேவகோட்டத்தின் மேற்குபகுதியில் தோரணம் இடம் பெறுதல் என்பது பல்லவர், சோழர், முற்காலப் பாண்டியர், பிற்காலப் பாண்டிர், விசயநகர-நாயக்கர் ஆகிய அனைத்து அரச பரம்பரையினர் காலங்களிலும் பின்பற்றப்பட்டு வந்துள்ளது. இத்தோரணம் மூன்று வகைப்படும்[35] அவை.

1. பத்ர தோரணம், 2. சித்ர தோரணம். 3. மகர தோரணம்.

தோரணம் தேவகோட்டத்தின் மேற்பகுதியில் பத்மம் தாங்கிய பலகையின்மேலோ தேவகோட்டத்தின் மேற்பகுதியில் உள்ள கூடுகளுடன் கூடிய கபோதத்தின்மேலோ இடம்பெறும். கிருஷ்ணாபுரம், தாடிக்கொம்பு, அரவிந்தலோசனன், ஸ்ரீநிவாசன் ஆகிய நான்கு கோயில்களில் பத்மம் தாங்கிய பலகையின் மேலும் (பார்க்க நி.ப.எண்.3) திருக்குறுங்குடி, நாங்குனேரி ஆகிய கோயில்களில் கூடுகளுடன் கூடிய கபோதத்தின் மேலும் இடம்பெற்றுள்ளது. மேலும், இக்கோயில்களில் அரவிந்தலோசனன், ஸ்ரீநிவாசன், திருக்குறுங்குடி, கிருஷ்ணாபுரம் ஆகிய கோயில்களில் பத்ர தோரணமும், தாடிக்கொம்பில் சிம்மமுகத்துடன் கூடிய தோரணமும் இடம்பெற்றுள்ளன.[36] எனவே, மேற்கண்ட மூன்று தோரணங்கள் தவிர சிம்மமுகத்துடன் கூடிய தோரணமும் உண்டு என்பது இங்குப் பெறப்படுகிறது.

தோரணங்களுக்கு நடுவே சிறுவடிவிலான இறை உருவங்கள் இடம்பெறுவதுண்டு. இதனை மேற்கண்ட கோயில்களில் காணலாம். இதில் திருக்குறுங்குடி கிருஷ்ணாபுரம் ஆகியவற்றில்

தெற்கே - தட்சிணாமூர்த்தி.
மேற்கே - யோகநரசிம்மர்.
வடக்கே - பிரம்மன்.
என்ற அமைப்புக் காணப்படுகிறது.

ஸ்ரீநிவாசன் மற்றும் அரவிந்தலோசனன் கோயில்களில் தெற்குப்பக்கம் மட்டும் தட்சிணாமூர்த்திக்குப் பதிலாக வெண்ணெய்க்கு ஆடும் கண்ணன் சிற்பம் இடம்பெற்றுள்ளது. நாங்குனேரியில்

தெற்கே - வெண்ணெய்க்கு ஆடும் கண்ணன்.

மேற்கே - யோகநரசிம்மர்.

வடக்கே - லெட்சுமிவராகர்.

என இடம் பெற்றுள்ளன.

தோரணங்களுக்கிடையே இடம்பெறும் சிறு சிற்பங்களின் வைப்புமுறையில் முறையான ஒரு அமைப்புக் காணப்படவில்லை. இருப்பினும் எடுத்துக் கொண்டுள்ள கோயில்களின் தேவகோட்ட, மகரதோரணங்களுக்கு நடுவே தெற்கே தட்சிணாமூர்த்தியோ வெண்ணெக்கு ஆடும் கண்ணன் சிற்பமோ இடம்பெறுகிறது. மேற்கே நரசிம்மர் சிற்பம் இடம் பெறுகிறது. வடக்கே பிரம்மன் அல்லது லெட்சுமிவராகர் சிற்பம் என்ற ஓர் அமைப்பினைக் காணமுடிகிறது.

## சாலை அமைப்புடைய தேவகோட்டம்

எடுத்துக்கொண்ட கோயில்களில் பதினான்கு கோயில்களில் சாலை அமைப்பினைக் கொண்ட தேவகோட்டங்கள் இடம் பெற்றுள்ளன. இத்தேவகோட்டங்கள் மேற்பகுதியில் கூடுகளுடன் கூடிய கபோதத்தையும் அதற்கு மேல் சாலை அமைப்பையும் கொண்டு விளங்குகின்றன. (பார்க்க நி.ப.எண். 4) இவற்றில், திருமெய்யம், பெருங்குளம், வரகுணமங்கை, மன்னார்கோயில் ஆகிய கோயில்களின் தேவகோட்டமானது கபோதத்திற்கு கீழ்த்தாழ்வார அமைப்பு இன்றியும், திருப்புல்லாணி, கூடலழகர், திருமோகூர், ஆண்டாள்கோயில், தென்திருப்பேரை, திருப்புளியங்குடி, ஆழ்வார் திருநகரி, வடபத்ரசாயி, திருக்கோட்டியூர், ஸ்ரீவைகுண்டம் ஆகிய கோயில்களில் தேவகோட்டமானது கபோதத்திற்குக் கீழ்த் தாழ்வார அமைப்புடனும் விளங்குகின்றன.

## கபோதக் கூடுகள்

மேற்கண்ட கோயில் கபோதங்களில் கூடுகள் அமைந்துள்ளன. இக்கூடுகள் எவ்வித அலங்காரம் இன்றியோ, அலங்கரத்துடனோ, கூடுகளுக்குள் சிற்பங்கள் மற்றும் சிறுகோயில் அமைப்புடனோ திகழ்கின்றன.

திருமோகூர், திருப்புல்லாணி, திருப்புளியங்குடி, வடபத்ரசாயி, ஸ்ரீவைகுண்டம், திருக்கோட்டியூர், பெருங்குளம், திருமெய்யம், மன்னார்கோயில் ஆகிய கோயில்களில் கபோதக் கூடுகள் அலங்காரம் இன்றி சாதாரணமாகப் காணப்படுகின்றன.

ஆழ்வார் திருநகரி மற்றும் ஆண்டாள்கோயில் கூடுகளில் முகப்பட்டி மலர்வேலைப்பாட்டுடன் அமைந்துள்ளது. வரகுணமங்கைக்கூடுகளில் இறைவுருவங்கள் காணப்படுகின்றன. அவைமுறையே

தற்கே - ஆலிலைக்கண்ணன்.

மற்கே - இராமன்.

டக்கே - காளியகிருஷ்ணன்.

ன அமைந்துள்ளன.

லழகர் கோயிலில் கூடுகளுக்குப் பதிலாக சிறு சிற்பங்கள் பெறுகின்றன. (பார்க்க நி.ப.எண் 4) அவை,

தற்கே - நடனமாது, பாம்பு, நடனமாது, நாடோடி, கையில் குழந்தையுடன் பெண்.

மற்கே - குதிரைவீரன், அடியவர், கருடநாராயணன், யாளி, குதிரைவீரன், பிரம்மன்.

டக்கே - அடியவர், ஆடை நெகிழ்ந்த பெண், சங்கூதும் ஆண், நடனமாது, இருகுரங்குகள்.

ன்திருப்பேரையில் கூடுகளுக்குள் சிறுகோயில் அமைப்பு பெற்றுள்ளது.

ம

ருங்குளம், திருக்கோட்டியூர், ஸ்ரீவைகுண்டம், வடபத்ரசாயி, ளியங்குடி, வரகுணமங்கை, தென்திருப்பேரை, ஆண்டாள் ல், திருப்புல்லாணி ஆகிய கோயில்களில் எளிமையான சாலை ப்புக் காணப்படுகிறது. இவற்றில், திருப்புல்லாணியில் மட்டும் யை இரு கோபுரம்தாங்கிகள் தாங்கியபடி உள்ளனர். பொதுவாக, த்தின் சிகரத்தைத்தான் கோபுரம்தாங்கிகள் தாங்கி நிற்பர். இங்கு, காட்டத்தில் அமைந்த சாலையைக் கோபுரம்தாங்கிகள் தாங்கி பிற்காலத்தில் கட்டடக்கலை அடைந்த வளர்ச்சியைக் கிறது.

ழ்வார்திருநகரி, மன்னார்கோயில், திருமோகூர், கூடலழகர், மய்யம் ஆகிய கோயில்களில் சாலையின் நடுவே நாசி பெறுகிறது.

றில், ஆழ்வாரிதிருநகரி மற்றும் மன்னார்கோயிலில் சாலையானது ள் ஏதும் இன்றி உள்ளது. கூடலழகர், திருமோகூர், திருமெய்யம் வற்றின் சாலை நாசிகளில் சிறுகோயில் அமைப்பு இடம்பெறுகிறது. மய்யத்தில் வடக்குப்பக்க சாலையின் நாசியில் இடம்பெறும் ாயிலினுள் குழலூதும் கண்ணன் அமைக்கப்பட்டுள்ளார்.

ரங்கள்

ாயிற்கட்டடக்கலையில் இடம்பெறுகின்ற பல்வேறு கூறுகளில் ங்கள் அலங்கார வேலைப்பாட்டிற்காகவும், பயன்பாட்டுத் பக்காகவும் இடம்பெறும் ஒருகூறாகும். இச்சாளரங்கள்

காற்றோட்டத்திற்காகவும், வெளிச்சத்திற்காகவும், கோயிற்சுவர்களில் அமைக்கப்பட்டன. இவை, ஆரம்ப காலங்களில் எளிமையாக இருந்தன. காலம் செல்லச்செல்ல பல்வேறு பரிசோதனைகளுக்கு உட்படுத்தப் பட்டு புதிய, புதிய வடிவங்களைப்பெற்று நன்கு வளர்ச்சியடைந்தன.

சாளரம் என்பது கோயிற்கருவறையின் வெளிச்சுவரிலும் அர்த்தமண்டபம் மற்றும் மகாமண்டபத்தின் சுவர்களிலும் ஒளியும், காற்றும் உட்செல்லத் துளைகள் பல அமையுமாறு சிற்ப வேலைப்பாட்டினால் அழகுறச் செய்யப்பெறும் சிறப்பப் பலகணியாகும்.

இந்தியாவில் காலத்தால் முற்பட்டதாக கி.பி. முதலாம் நூற்றாண்டைச் சார்ந்த சில சைத்தியங்களிலும், விகாரங்களிலும், சதுரவடிவத் துளைகளையுடைய சாளரங்கள் வெட்டப்பட்டுள்ளன.[37] பௌத்த சமணர்களைப் பின்பற்றி இந்துக்களும் தங்களுடைய மதக்கட்டடங்களைத் நிறுவத்தொடங்கினர். இந்துக்கோயில்கள் துவங்கப்பட்டபோது அவற்றின் சமகாலத்தில் இருந்த பௌத்த, சமண சமயக் கட்டடக்கலைக்கூறுகள் சிலவற்றைத் தங்களுடைய படைப்பிற்கு மாதிரியாக எடுத்துப் பயன்படுத்தினர்.

வடஇந்தியாவில் குப்தர்களது காலத்தில் மத்தியப் பிரதேசத்திலுள்ள நாச்னா குதாரோவிலுள்ள (NachnaKuthara) கி.பி. 6ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பார்வதி கோயிலின் கருவறைச் சுவர்களில் சதுரவடிவத் துளைகளைக் கொண்ட சாளரங்கள் இடம் பெறுகின்றன.[38] இச்சாளரத்தைச் சுற்றி அழகுவேலைப்பாடுகளும், அவற்றிற்குக் கீழே பூதகணச் சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன.

இவர்களை அடுத்து கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் எட்டாம் நூற்றாண்டு வரையிலான வாதாபிச் சாளுக்கியரின் கோயில்கள் பலவற்றின் கருவறையானது இரட்டைச் சுவர்களைக் கொண்டு அமைந்திருந்தது. இச்சுவர்களுக்கு இடையிலுள்ள திருச்சுற்றுப் பாதைக்கு வெளிச்சமும், காற்றோட்டமும் கிடைக்கவேண்டி அதன் வெளிச்சுவரில் சாளரங்கள் அமைக்கப்பட்டன. இவற்றில், பெரும்பாலான சாளரங்கள் வடிவவியல் உருவ (Geometric patterns) அமைப்புக்களைக் கொண்டதாக விளங்குகின்றன. ஒரு கோயிற் சுவரில் இடம்பெறும் சாளரங்கள் அனைத்தும் ஒரே மாதிரியாக இல்லாது பல்வேறு விதமான அமைப்புக்களில் விளங்குகின்றன.

## தமிழகக் கோயில்களில் சாளரங்கள்

தமிழகத்தில் கோயிற்சாளரங்கள் முதல்முதலாகப் பல்லவர் கோயில்களில் காணக்கிடைக்கின்றன. உதாரணமாக, காஞ்சி வைகுண்டப்பெருமாள் கோயில், உத்திரமேரூர் சுந்தரவரதப் பெருமாள் கோயில் ஆகிய கோயில்களின் கருவறை வெளிச்சுவர் மற்றும் மண்டபச்சுவர் ஆகியவற்றில் வடிவவியல் உருவ அமைப்புக் களையுடைய சாளரங்கள் அமைக்கப்பட்டுள்ளன.[39]

... பல்லவர் கோயில்களைப் போல, சோழர் கோயில்களிலும் மிகக் குறைந்த அளவில் சாளரங்கள் காணப்படுகின்றன. தஞ்சைப் பெரிய கோயிலிலும், கங்கைகொண்டசோழபுரம் கோயிலிலும் அவற்றின் இரண்டாவது பூமியின் அர்த்தமண்டபச் சுவர்களிலும் வடிவவியல் உருவ அமைப்புக்களுடைய சாளரங்கள் இடம்பெறுகின்றன. சாந்தார வகைக் கருவறையினைக் கொண்ட இவ்விரு கோயில்களிலும் கருவறையின் வெளிச்சுவர்களில் சாளரங்கள் அமைக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இவைதவிர பனிரெண்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட தாராசுரம் ஐராவதேசுவரர், திருபுவனம் கம்பகேசுவரர் கோயில்களில் பிணைந்த கொடி அமைப்புக்களைக் கொண்ட சாளர வகைகள் நிறுவப்பட்டுள்ளன. இவ்வாறு, தோன்றி வளர்ந்த இச்சாளர அமைப்பு பாண்டிய நாட்டுக் கோயில்களிலும் இடம் பெற்றது.

பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களில் அழகர்கோயில், கூடலழகர்கோயில், ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை, திருப்புளியங்குடி, திருக்கோட்டியூர் ஆகிய ஆறு கோயில்களில் சாளரங்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றில், கூடலழகர், அழகர்கோயில், திருக்கோட்டியூர் ஆகிய மூன்று கோயில்களும் திருச்சுற்று வழி உடையவை. எனவே, இக்கோயில்களில் சாளரங்கள் பல அமைப்புக்களில் இடம்பெற்றுள்ளன. மேலும், கூடலழகர் திருக்கோட்டியூர் ஆகிய கோயில்களில் இரண்டிரண்டு திருச்சுற்றுக்களும், அழகர்கோயிலில் ஒரு திருச்சுற்றும் இடம் பெற்றிருப்பினும் இக்கோயில் கருவறைகளின் வெளிச்சுவரில்தான் சாளரங்கள் இடம்பெற்றுள்ளன.

## 1. அழகர்கோயிற் சாளரங்கள்

அழகர்கோயிலில் கருவறையின் வெளிச்சுவர் மற்றும் அர்த்தமண்டபச் சுவரில் சாளரங்கள் இடம்பெற்றுள்ளன. இங்கு கருவறைச் சுவரில் உள்ள சாளரங்கள் மட்டுமே எடுத்துக் கொள்ளப்படுகின்றன. கருவறைச் சுவரில் மொத்தம் ஏழு சாளரங்கள் இடம்பெற்றுள்ளன. அமைப்பைவைத்து இவற்றை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையாவன.

### அ. சதுரவடிவத் துளைகளையுடையவை

சதுரவடிவத் துளைகளையுடைய சாளரங்கள் நான்கு இடம் பெற்றுள்ளன. நான்கு சாளரங்களும் வெவ்வேறு விதமான சதுரவடிவங் களைக் கொண்டதாக அமைந்துள்ளன. ஒரு சாளரம் எட்டு சதுரப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு அதில் நான்கு மட்டும் சதுரவடிவுடைய துளைகளுடன் விளங்குகின்றன. மற்ற நான்கு சதுரங்கள் வேலை செய்யப்படாது உள்ளன. அடுத்தவகைச் சாளரமும் எட்டுப்

பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, அவை அனைத்தும் நடுவில் ஒரு வட்டமும் அதனைச்சுற்றி இலை வடிவங்களும் கொண்டு இடம்பெற்றுள்ளன. இவ்வட்டத்திற்கு நடுவிலும், இலைகளுக்கு இடையிலும் துவாரங்கள் காணப்படுகின்றன. அடுத்தாக உள்ள சாளரம் எட்டு சதுரங்களாகப் பிரிக்கப்பட்டு அவற்றின் நடுவில் அன்னப்பறவைகள் இடம் பெற்றுள்ளன. இவ்வண்ணங்கள் தவிர பிறபகுதிகள் துவாரங்களுடன் காணப்படுகின்றன. நான்காவதாக உள்ள சாளரம் முதல் சாளரத்தைப் போன்று எட்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஆனால், இதில் அனைத்துப் பிரிவுகளும் சதுர அமைப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இச்சதுரங்கள் அனைத்தும் துளைகளுடன் காணப்படுகின்றன.

## ஆ. வட்டவடிவத் துளைகளையுடையவை

மூன்று சாளரங்கள் வட்டவடிவமான துளைகளைக் கொண்டும், வட்டங்களின் நடுவில் சிற்பங்களைக் கொண்டும் திகழ்கின்றன. ஒரு சாளரத்தில் வட்டங்களின் நடுவில் சிம்மமுகங்கள் இடம்பெற்றுள்ளன.

அடுத்த சாளரத்தில் வட்டங்களின் நடுவில் இறையுருவங்கள் இடம் பெறுகின்றன. இதில், கஜலட்சுமி, நரசிம்மர், வில்லை ஒடித்த நிலையில் இராமர், நடனமாடும் கண்ணன், நடனமாதர், காளிங்கநர்த்தணன், இராமர், சீதை, இலக்குவன் ஆகிய சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

இதனை அடுத்த சாளரத்தில் யாளிகள், சிம்மங்கள், நடனமாது, குழலூதும்கண்ணன் ஆகிய சிற்பங்கள் இடம்பெறுகின்றன. மேற்கண்ட கட்டடங்கள் அனைத்தையும் சுற்றிச் சட்டம் போன்ற வடிவம் இடம்பெற்றுள்ளது. இச்சட்டங்கள் கொடி வேலைப்பாடுகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளன.

## 2. கூடலழகர் கோயிற் சாளரங்கள்

கூடலழகர் கோயிற் கருவறையின் தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய மூன்று பக்கங்களிலும் பக்கத்திற்கு இரண்டு என மொத்தம் ஆறு சாளரங்கள் இடம்பெற்றுள்ளன. இச்சாளரங்கள் அனைத்தும் சுவர்ப்பகுதியின் அகாரையில் இடம் பெற்றுள்ள கோட்டபஞ்சரத்தினுள் அமைகின்றன. இச்சாளரங்களின் கீழ் அந்தந்த திசைக்குரிய திக்குபாலகரின் சிறுசிற்பம் வாகனத்துடன் இடம் பெறுகிறது.

தெற்கே அமைந்துள்ள முதல் சாளரம் சதுர வடிவத் துளைகளுடன் காணப்படுகிறது.

இரண்டாம் சாளரம் கொடிப்பெண், மனித உருவம், அன்னம் ஆகிய சிற்பங்களுடன் காணப்படுகிறது.

மூன்றாம் சாளரமானது வட்ட வடிவங்களைக் கொண்டு திகழ்கிறது. இதனுள் மனித உருவங்கள் இடம்பெற்றுள்ளன.

நான்காம் சாளரம் சதுரமாகவோ, வட்டமாகவோ பிரிக்கப்படாது, அதில் யாளிகள், சங்கு, சக்கரம், அன்னம் முதலிய உருவங்கள் இடம்பெற்றுள்ளன.

ஐந்தாம் சாளரமானஇது சிறுசிறு சதுரகட்டங்களும், அக்கட்டங்களின் நடுவில் துவாரங்களும் கொண்டு விளங்குகின்றன.

ஆறாம் சாளரம் வட்டமான வடிவங்களைக் கொண்டு திகழ்கிறது. மேற்கண்ட சாளரங்கள் ஒவ்வொன்றின் கீழ்ப்பகுதியிலும் தெற்கிலிருந்து முறையே அக்னி, எமன், நிருத்தி, வருணன், வாயு, குபேரன், ஆகியோர் அவரவருக்கு உரிய வாகனங்களான முறையே, ஆட்டுக்கடா, எருமைக்கடா, சவம், மகரம், மான், தேர் ஆகியவற்றில் அமர்ந்த வண்ணம் இடம்பெறுகின்றனர். குபேரனுக்கு வாகனம் குதிரை. ஆனால், இங்கு குதிரைக்குப் பதிலாகத் தேர் இடம் பெற்றுள்ளது. இங்கு தேர் குதிரையின் குறியீடாகும். கருவறையின் கிழக்கே, சாளரங்கள் இடம்பெறவில்லை என்பதால் ஈசானன் மற்றும் இந்திரன் காணப்படவில்லை.

## 3. திருக்கோட்டியூர் கோயிற் சாளரங்கள்

இக்கோயிலின் முதல் தளத்திலும், இரண்டாம் தளத்திலும் கோஷ்ட பஞ்சரத்தினுள் சாளர அமைப்பு பக்கத்திற்கு இரண்டு என மூன்று பக்கங்களிலும் அமைவதால் மொத்தம் பனிரெண்டு சாளரங்கள் இடம் பெற்றுள்ளன. இச்சாளரங்கள்யாவும் சதுரவடிவத் துளைகளை உடையனவாகும்.

ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை, திருப்புளியங்குடி ஆகிய கோயில்களில் மூடிய திருச்சுற்று இல்லையாதலால் இங்குக் கருவறையில் ஒரே சுவர் மட்டும் இடம்பெற்றுள்ளது. எனவே, இங்கு இடம்பெறும் சாளரங்கள் போலிச் சாளரங்களாக இடம்பெறுகின்றன. இப்போலிச் சாளரங்கள் தேவகோட்டங்களின் உட்பகுதிச் சுவரில் கீழிருந்து மேல் வரை வடிவவியல் உருவ அமைப்புக்களைக் கொண்டு விளங்குகின்றன.

இதுவரைகண்ட சாளரங்களின் அமைப்பிலிருந்து கீழ்க்கண்ட முடிவுகளைப்பெறலாம். சாளரமானது அஷ்டாங்கவிமானக் கோயில்கள், சாந்தரா வகை விமானக் கோயில்கள் ஆகிய இரண்டுவகைக் கோயில்கள் மட்டும் இடம் பெறுகிறது.

இச்சாளரங்கள் வட்டங்களையோ, சதுரங்களையோ, பெரும்பாலும் கொண்டு விளங்குகின்றன. இவற்றில் இறையுருவங்களும், யாளி முதலான விலங்குகளும் இடம்பெறுகின்றன. சாந்தார வகையைச் சாராத நிரந்தரவகை விமானங்களில் சாளரங்கள் இடம்பெறுவதில்லை. ஏனெனில் தீய ஆவிகள் கருவறையினுள் புகுந்துவிடும் என்ற நம்பிக்கையால் அவ்வாறு இடம்பெறாமல் இருக்கலாம் என்ற ஒரு நம்பிக்கை நிலவி வருகிறது.

இத்தகு நிரந்தர வகைக்கோயில் தேவகோட்டங்களில் சிலவற்றில் போலிச் சாளரங்கள் இடம்பெற்றுள்ளன. விசயநகர - நாயக்கர் காலத்தில் சாளர அமைப்பில் வளர்ச்சியினைப் காணமுடிகிறது. கருவறை தவிர அர்த்த மண்டபங்களில் இடம்பெறும் சாளரங்களும் அமைப்பில் கருவறையில் இடம்பெறும் சாளரங்களை ஒத்துள்ளன.

## எழுதகம்

கபோதத்தின் கீழ் இடம்பெறும் புடைப்புப்பகுதியே எழுதகம் என்று அழைக்கப்படுகிறது. இவ்வெழுதகப் பகுதியில் வழக்கமாக பூதகணவரிசை, அன்னவரிசை, பத்மவரிசை போன்ற சிறப அலங்கார வேலைப்பாடு இடம்பெறும். சில கோயில்களில் இவ்வகையான அலங்கார வரிசை இடம்பெறாமலும் எழுதகங்கள் அமைவதுண்டு. விசயநகர-நாயக்கர்காலக் கோயில்களின் எழுதகப்பகுதிகளில் வளைந்த கட்டை அமைப்பும் (Struts) இடம்பெறுகிறது. இக்கட்டைகள் அவற்றிற்கு மேலே உள்ள கபோதத்தைத் தாங்குவது போல இருக்கும். இக்கட்டை மரத்தாலான அமைப்புக்களை நினைவுபடுத்துவனவாக அமைந்துள்ளது.

தமிழகத்தில் எழுதக அமைப்பு பல்லவர்காலக் குடைவரைக் கோயில்களில் முதன்முதலாகக் காணப்படுகிறது.[40] குடைவரைக் கோயில்களில் ஆரம்பகால எழுதகங்களில் பூதகணவரிசை இடம் பெறுகிறது. பாண்டியரது குடைவரைக் கோயில்களிலும் பூதகண வரிசையைக் காணலாம்.[41] குடைவரைக் கோயில்களில் இடம்பெற்ற இவ்வெழுதக அமைப்பு பின்னர் நிர்மாணிக்கப்பட்ட பல்லவர், பாண்டியர், சோழர், காலக் கட்டுமானக் கோயில்களில் இன்றியமையாத கூறாக அமைகின்றது.

பூதகணவரிசை, அன்னவரிசை, பத்மவரிசை ஆகிய எழுதக அலங்கார வேலைப்பாடுகள் பல்லவர், பாண்டியர், சோழர் காலக் கோயில்களில் இடம்பெறுகின்றன. வளைந்த கட்டை அமைப்புத் தமிழகத்தில் முதன் முதலாக விசயநகர-நாயக்கர் காலக் கோயில்களில் இடம் பெறுகின்றது.[42]

மேற்சொன்ன பூதகணவரிசை, அன்னவரிசை, பத்மவரிசை ஆகிய எழுதக அலங்கார வேலைப்பாடுகள் விசயநகர-நாயக்கர் காலம் வரை தொடர்ந்து இடம்பெற்று வந்தாலும் அவை இவர்களால் அமைக்கப்பட்ட கோயில்களில் அதிக அளவில் இடம் பெறாது வளைந்த கட்டை அமைப்பு அதிக முக்கியத்துவம் பெற்றது.

இந்நூலில் விளக்கப்பெறும் கோயில்களின் எழுதகத்தில் பூதகணவரிசை இடம்பெறும் கோயில்கள், அன்னவரிசை இடம்பெறும் கோயில்கள், பத்மவரிசை இடம்பெறும் கோயில்கள், வளைந்த கட்டை அமைப்பு இடம்பெறும் கோயில்கள், மலர் வேலைப்பாடு இடம்பெறும் கோயில்கள், அலங்காரவேலைப்பாடு எதுவும் இடம்பெறாத கோயில்கள் எனப் பிரிக்கப்பட்டுள்ளன.

## 1. பூதகணவரிசை

அழகர்கோயில், திருக்குறுங்குடி ஆகிய கோயில்களில் மட்டும் பூதகணவரிசை இடம்பெறுகிறது. இப்பூதகணவரிசையில் பூதங்கள் பல்வேறு விதமான நிலைகளில் காணப்படுகின்றன. (பார்க்க வ.ப. எண். 12) தப்பு, மத்தளம் போன்ற வாத்தியக் கருவிகளை சில பூதங்கள் இசைப்பது போலவும், சில கொம்பு, சங்கு முதலான இசைக்கருவிகளை ஊதுவது போலவும், இன்னும் சில பூதங்கள் பலவிதமான நிலைகளில் நடனமாடுவது போலவும் காணப்படுகின்றன. சில பூதங்கள் தலைகீழாகத் (acrobatic) தொங்குவதுபோல் காணப்படுகின்றன.



படம் 12

## 2. அன்னவரிசை

தொலைவில்லிமங்கலம் ஸ்ரீநிவாசன் மற்றும் அரவிந்தலோசனன், திருக்கோளூர், பெருங்குளம் ஆகிய நான்கு கோயில்களில் அன்னவரிசை இடம்பெறுகின்றன. இவ் அன்னங்கள் பக்க வாட்டுப் பார்வையில் அமைந்துள்ளன. (பார்க்க வ.ப.எண் 13 ) இவ் அன்ன வரிசையின் முனைகளில் சிறு யாளி வடிவங்கள் காணப்படுகின்றன. பெருங்குளம் கோயிலில் மட்டும் அன்ன வரிசையின் முனைகளில் சிறு வடிவ யாளிகளுக்குப் பதிலாக சிறுவடிவ சிம்மங்கள் இடம் பெறுகின்றன.



படம் 13

## 3. பத்ம வரிசை

நாங்குனேரி, மன்னார்கோயில், திருமெய்யம் ஆகிய கோயில்களில் பத்மவரிசை இடம் பெற்றுள்ளது. மன்னார்கோயில் மற்றும் திருமெய்யம் கோயில்களில் பத்மவரிசை ஆழமாக வெட்டப்படவில்லை.

திருக்கோட்டியூரில் மட்டும் பூவேலைப்பாடு இடம்பெற்றுள்ளது.

## 4. வளைந்த கட்டை வரிசை

கபோதத்தில் தாழ்வாரக்கட்டை அமைப்பு இடம் பெறும் போது மட்டுமே இவ்வமைப்பைத் தாங்குவது போல் எழுதகத்தில் வளைந்த கட்டை வரிசை இடம்பெறுகிறது. இவ்வமைப்புப் பயன்பாட்டுத் தேவை காரணமாக இடம்பெறுவதுபோல் தோன்றினாலும் உண்மையில் அலங்கார வேலைப்பாட்டு அமைப்பே ஆகும்.

தமிழகத்தில் முதன்முதலில் ஹொய்சாளரது காலத்துக் கண்ணனூர் கோயிலான போசேசுவரர் கோயிலில்தான்(கி.பி. 1235) வளைந்த கட்டை அமைப்பைக் காணமுடிகிறது.[43] அதன் பின்னர் விசயநகர-நாயக்கர் காலத்தில் இவ் அமைப்பு தொடர்ந்து பின்பற்றப்பட்டுள்ளது.

கூடலழகர், திருமோகூர், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள் மற்றும் வடபத்ரசாயி, ஸ்ரீவைகுண்டம், வரகுணங்கை. ஆழ்வார்திருநகரி, தென்திருப்பேரை, புளியங்குடி, திருப்புல்லாணி ஆகிய பத்துக் கோயில்களில் வளைந்தகட்டை வரிசை இடம்பெறுகின்றது. தென்திருப்பேரை கோயிலில் மட்டும் இவ்வளைந்த கட்டைகளுக்கிடையே ஆங்காங்கே சிற்றுருவச் சிற்பங்களாக யோக நரசிம்மர், வேணுகோபாலன், பெண்ணுருவம், யானை, குரங்கு, அன்னம், பூவேலைப்பாடு, கொடிக்கருக்குவேலைப்பாடு ஆகியன செதுக்கப்பட்டுள்ளன. இக்கட்டை அமைப்பின் முனைகளில் சிறுவடிவ யாளிகள் இடம் பெறுகின்றன.

## 5. வேலைப்பாடு அற்ற அமைப்பு

தாடிக்கொம்பு, கிருஷ்ணாபுரம், திருத்தங்கல் ஆகிய கோயில்களில் மேற்கண்ட எவ்வித அலங்கார வேலைப்பாடும் இன்றி எழுதகம் அமைந்துள்ளது.

எழுதகம் பற்றி இதுவரை கண்டவற்றிலிருந்து கீழ்க்காணும் முடிவுகளைப் பெறலாம். குடைவரைக் கோயில்களின் காலத்திலிருந்தே எழுதக அமைப்பு தொடர்ந்து இடம்பெற்றுள்ளது. அக்காலத்தில் இடம்பெற்ற அன்னவரிசை, பூதகணவரிசை, பத்மவரிசை ஆகியன பிற்காலப் பாண்டியரது காலம்வரை தொடர்ந்து இடம்பெற்று வந்துள்ளது. விசயநகர-நாயக்கரது காலத்தில் தான் இவ்வமைப்பு மாறி வளைந்த கட்டைஅமைப்பு பெரிதும் இடம்பெறுகின்றது. கேரளத்துக் கோயில்களில் இவ்வளைந்த கட்டை அமைப்பை வெகுவாகக் காணலாம்.

## கபோதம்

கபோதம் பயன்பாட்டுத்தேவை கருதி எழுதகத்தின் மேல் அமைகிறது. கவிழ்ந்திருப்பதால் இது கபோதம் எனப் பெயர் பெறுகின்றது. இது மழை நீரானது கருவறைச் சுவரின் வெளிப்பகுதியில் படாமலிருப்பதற்காக

அமைக்கப்படுவதாகும். கபோதம் குடைவரைக் கோயில்களிலேயே செதுக்கப்பட்டுள்ளது. விசயநகர-நாயக்கர் காலத்தில் தான் இக்கபோதம் தாழ்வார (கொடுங்கை) அமைப்பைப் பெறுகிறது. கபோதம் சிம்மமுக நாசியுடன் கூடிய கூடுகளுடன் அமையும். மேலும், கபோதத்தின் மேல் அலங்கார வேலைப்பாடுகள் இடம்பெறும் (பார்க்க நி.ப.எண். 4). குறிப்பாக ஆலிலை வேலைப்பாடு இடம்பெறும். கொடுங்கை அமைப்பு இடம்பெறும் போது அதன் கீழ்ப்பகுதி தாழ்வாரக்கட்டை அமைப்புடன் காணப்படும்.

ஆய்வுக்குட்பட்ட கோயில்களில் திருக்குறுங்குடி, நாஙகுனேரி, கிருஷ்ணாபுரம், திருத்தங்கல், அழகர்கோயில், மன்னார்கோயில், திருமெய்யம், தாடிக்கொம்பு, பெருங்குளம், தொலைவில்லிமங்கலம், ஸ்ரீநிவாசன் மற்றும் அரவிந்தலோசனன், திருக்கோளூர், திருக்கோட்டியூர் ஆகிய பதின்மூன்று கோயில்களில் கபோதம் தாழ்வார அமைப்பின்றிச் சாதாரணமாகக் காணப்படுகிறது.

இவற்றில் நாங்குனேரி, பெருங்குளம், தாடிக்கொம்பு, திருமெய்யம், திருத்தங்கல், அழகர் கோயில், கிருஷ்ணாபுரம், திருக்குறுங்குடி, ஆகிய கோயில்களில் கபோதத்தின் மேல் அலங்கார வேலைப்பாடு எதுவும் இடம்பெறவில்லை.

திருக்கோட்டியூர், திருக்கோளூர், தொலைவில்லிமங்கலம், அரவிந்தலோசனன், ஸ்ரீநிவாசன், மன்னார்கோயில் ஆகிய கோயில்களில் கபோதத்தின் முனைப் பகுதிகளில் ஆலிலை வேலைப்பாடுகள் இடம்பெற்றுள்ளன.

கொடுங்கை அமைப்பானது திருமோகூர், தென்திருப்பேரை, வடபத்ரசாயி, ஆண்டாள், திருப்புல்லாணி, வரகுணமங்கை, ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவைகுண்டம், கூடலழகர், திருப்புளியங்குடி ஆகிய பத்து கோயில்களில் காணப்படுகின்றது. இக்கொடுங்கையின் முனைகளில் ஆலிலை வேலைப்பாடு இடம்பெறுவதோடு, நடுவே பத்ம இதழ் வேலைப்பாடும் அழகுசெய்கின்றன. கபோதம் அல்லது கொடுங்கையின் மேல் கூடுகள் செதுக்கப்பட்டுள்ளன.

## கூடுகள்

கூடு என்பது ஒரு அலங்கார வேலைப்பாடாகும். பௌத்தர்களது சைத்தியங்களில் குதிரை லாடம் போன்று அமைக்கப்பட்ட ஜன்னல் அமைப்புக்களே இந்துக் கோயில்களில் சிறிய அளவினதாய் கபோதத்தில் அலங்கார வேலைப்பாட்டின் அங்கமாகத் திகழ்கின்றது. இங்கு இவை ஒவ்வொன்றும் சாளரம் போன்று சித்தரிக்கப்பட்டுள்ளன என்பதை அவற்றினுள் அமைக்கப்பட்டிருக்கும் மனித உருவங்கள் கீழே எட்டிப் பார்ப்பது போல் உள்ள நிலையிலிருந்து உணரலாம். பின்னாளில் மனிதனது முகத்தினை மட்டும் அல்லது தோள் வரைக்கும் காட்டும்

பழக்கத்திலிருந்து மாறுபட்டு, நடனமாடும் உருவங்களும் இறைவுருவங்களும் இடம்பெற்றன.

தமிழகத்தில் கூடுகளின் துவக்கத்தைக் குடைவரைக் கோயில்களிலேயே காணலாம். முதன் முதலாகப் பல்லவரது பஞ்சபாண்டவ இரதங்களில் இடம்பெற்ற இக்கூடுகள் பாண்டியரது குடைவரைகளிலும் இடம்பெற்றன. இக்கூடுகளின் வளர்ச்சி நிலையைப் பிற்காலத்தில் எழுந்த கட்டுமானக் கோயில்களில் காண முடிகின்றது. சிம்மமுகநுனியுடன் அமையும் கூடுகளின் ஓரங்களில் உள்ள முகப்பட்டி, அலங்காரத்துடனோ, அலங்காரம் இன்றியோ அமையும். கூடுகளின் உட்பகுதி பள்ளமாக வெட்டப்பட்டு அதில் இறையுருவங்கள், மனிதத் தலைகள், சிறுகோயில் அமைப்பு என ஏதேனும் ஒன்றை அமைப்பர். சில சமயம் கூடுகளின் உட்பகுதி ஆழமாக வெட்டப்படாமலும் இருக்கும்.

இந்நூலில் இடம்பெறும் கோயில்கள் அனைத்திலும் கூடுகள் சிம்ம முக நுனியுடன் இடம்பெற்றுள்ளன. தென்திருப்பேரையில் மட்டும் சிம்மத்தின் உடலும் காட்டப்பட்டுள்ளது. பெரும்பாலான கோயில்களின் இச்சிம்மமுக நாசியானது அதிக அளவில் உடைந்து காணப்படுகிறது.

ஸ்ரீவைகுண்டம் வரகுணமங்கை, தென்திருப்பேரை, திருப்புல்லாணி, ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில், மன்னார்கோயில், திருக்கோட்டியூர், நாங்குனேரி, தாடிக்கொம்பு, அழகர்கோயில், கிருஷ்ணாபுரம் ஆகிய கோயிற்கூடுகளின் முகப்பட்டி அலங்காரமின்றிக் காணப்படுகின்றன.

திருக்குறுங்குடி, கூடலழகர், ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி, ஆழ்வார்திருநகரி, திருத்தங்கல், திருமெய்யம், பெருங்குளம், திருக்கோளூர், தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன், திருமோகூர் ஆகிய கோயில்களில் கூடுகளின் முகப்பட்டி கொடி வேலைப்பாட்டுடன் காணப்படுகிறது.

திருப்புல்லாணி, தாடிக்கொம்பு, கிருஷ்ணாபுரம், பெருங்குளம், திருக்குறுங்குடி, ஆகிய கோயில்களில் கூடுகளின் உட்பகுதி பள்ளம் இன்றி காணப்படுகிறது. திருக்கோட்டியூர், தொலைவில்லிமங்கலம் ஸ்ரீநிவாசன் மற்றும் அரவிந்தலோசனன், திருக்கோளூர் ஆகிய கோயில்களில் பள்ளம் செதுக்கப்பட்டிருப்பினும் அவைகளில் எவ்வித சிற்பங்களும் இடம்பெறவில்லை.

நாங்குனேரி, திருத்தங்கல், வடபத்ரசாயி, ஆகிய கோயில்களில் கூடுகளுக்குள் மனிதத் தலைகள் இடம்பெற்றுள்ளன.

திருமோகூர், திருமெய்யம், ஆழ்வார்திருநகரி, தென்திருப்பேரை, ஸ்ரீவைகுண்டம் ஆகிய கோயில்களில் கூடுகளுக்குள் சிறு கோயில் அமைப்பு இடம்பெறுகிறது.

அழகர்கோயில், வரகுணமங்கை, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில், திருப்புளியங்குடி, மன்னார்கோயில், கூடலழகர் ஆகிய கோயில்களில் கூடுகளுக்குள் இறையுருவங்கள், சிறுகோயில் அமைப்பு மற்றும் சிற்றுருவச் சிற்பங்கள் ஆகியன மாறி மாறி இடம்பெற்றுள்ளன (பார்க்க நி.ப.எண் .4).

அழகர்கோயிலில் நான்கு கூடுகள் இடம்பெற்றுள்ளன. ஆய்வுக்குட்பட்ட கோயில்களிலேயே மிகப் பெரிய கூடுகள் அழகர் கோயிற்கூடுகளே. இவை சுமார் மூன்றரையடி உயரமுடன் காணப்படுகின்றன. முகப்பட்டி சுமார் அரையடி அகலத்துடன் நன்கு வெட்டப்பட்டுள்ளது. இக்கூடுகளில் சிம்மம், புலி, பூதகணம் கையில் மலர்ச் செண்டுடன் பெண், அடியவர் ஆகிய சிற்பங்கள் பெரிய அளவில் இடம்பெற்றுள்ளன.

வரகுணமங்கைக் கோயிலில் கோவர்த்தனதாரி சிற்பமும், நின்ற நிலையில் திருமால் சிற்பமும் இரண்டு கூடுகளில் இடம்பெற்றுள்ளன. பிற கூடுகளில் சிறுகோயில் அமைப்புக் காணப்படுகிறது.

ஆண்டாள் கோயில் கூடுகளில் சக்கரம், யாளி, அசுரமுகம் ஆகியன இடம்பெற்றுள்ளன. அசுரமுகத்தில் கோரைப்பற்கள் நன்கு காட்டப்பட்டுள்ளன. பிற கூடுகளில் மனித முகங்கள் இடம் பெற்றுள்ளன.

திருப்புளியங்குடி கோயிலில் நடனமாடும் கண்ணன், இராமன், கருடாழ்வார் ஆகிய சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. பிற கூடுகளில் சிறு கோயில் அமைப்புக் காணப்படுகிறது.

மன்னார்கோயிலில் இராமர், யோகநரசிம்மர், சண்டேசுவரர், கையில் அமுதகலசத்துடன் மோகினி, தாமரை வட்டம், தப்படிக்கும் கலைஞன் ஆகிய சிற்பங்கள் கூடுகளில் இடம் பெற்றுள்ளன. பிற கூடுகளில் சிறு கோயில் அமைப்புக் காணப்படுகிறது.

எடுத்துக்கொண்ட கோயில்களில் அதிகமான கூடுச் சிற்பங்கள் அழகுற இடம்பெற்றுள்ளமை கூடலழகர் கோயிலில்தான். இக்கோயிலில் முப்பத்தியிரண்டு கூடுகள் இடம்பெற்றுள்ளன. அனைத்துக் கூடுகளிலும் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

இக்கூடுகளில் இடம் பெற்றுள்ள சிற்பங்களில் பெரும்பான்மையான சிற்பங்கள் திருமாலின் சிற்பங்களும், அவரின் அவதாரச் சிற்பங்களுமாகும். திரும்மால் அமர்ந்த கோலத்திலும், கருடன் மேலமர்ந்த கருடநாராயணனாகவும், இலக்குமியுடனமர்ந்து இலக்குமி நாராயணனாகவும் காட்சிதருகின்றார். இவைதவிர, அவரது அவதாரங்களான இராமர், யோகநரசிம்மர், வேணுகோபாலன், திரிவிக்ரமன் ஆகிய உருவங்கள் இடம்பெற்றுள்ளன. அடுத்தடுத்த கூடுகளில் தொடர்புடைய சிற்பங்களாக இவ் அவதாரச் சிற்பங்கள் அமைந்துள்ளன. உதாரணமாக இராமனுக்கு அடுத்த கூட்டில் இலக்குவனும், யோக நரசிம்மருக்கு அடுத்த கூட்டில் இரணிய

நரசிம்மயுத்தம், மற்றும் இரணியவதை முதலியன இடம்பெற்றுள்ளன. மேற்கண்ட சிற்பங்களில் திருமால் சிம்மத்தின் மேல் அமர்ந்து அவரது இடது தொடையில் இலக்குமி அமர்ந்திருக்கும் சிற்பம் அரிதான ஒன்றாகும். இது திருமாலுக்கு சிம்மமும் ஒரு வாகனமாகக் கருதப்பட்டு வந்த செய்தியைத் தெரிவிக்கின்றது.

திருமாலின் உருவங்கள் தவிரப் பிறகூடுகளில் காளியின் உருவங்களும் மன்மதன் உருவமும் இடம் பெற்றுள்ளன. மேலும், அரச உருவம், குறத்தி, உருவங்கள், சிறுகோயில் அமைப்பு ஆகியன இடம்பெற்றுள்ளன.

ஆரம்பகாலத்தில் கோயில்களில் அலங்காரமின்றிச் செதுக்கப்பட்டு வந்த கூடுகள் பிற்காலத்தில் அக்கோயில் எச்சமயம் சார்ந்ததோ அச்சமயம் சார்ந்த சிற்பங்களுடன் கூடியதாக இடம்பெற்றன. இதற்கு நல்ல உதாரணம் கூடலழகர் கோயிலாகும்.

## யாளிவரி

கபோதத்திற்குமேல் இடம்பெறும் யாளிவரியில், யாளியானது முழுமையாகவோ, பாதியாகவோ காட்டப்படும். இது அலங்கார வேலைப்பாடாக அமைகிறது. இந்த யாளிவரியின் முனைகளில் மகரங்கள் இடம் பெறும். யாளிவரிக்குப் பதிலாக உத்திரக்கட்டை முனை வரிசையோ அலங்காரமற்ற உத்திரம் மட்டுமோ காட்டப்படுவதுமுண்டு.

### 1. யாளிவரிசை

எடுத்துக் கொண்ட கோயில்களில் தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் மற்றும் வடபத்ரசாயி, வரகுணமங்கை, திருப்புளியங்குடி, ஆழ்வார்திருநகரி, மன்னார்கோயில், திருமோகூர், கூடலழகர் ஆகிய பதினோரு கோயில்களில் யாளி வரிசை இடம்பெற்றுள்ளது (பார்க்க நி.ப.எண். 4).

இவற்றில் திருக்கோட்டியூர் தவிர பிறகோயில்களில் யாளிகள் முழு உருவங்களாக தேவராயன் பேட்டை (சோழர் கி.பி. 980) கோயில்[45] போன்று காட்டப்பட்டுள்ளன. திருக்கோட்டியூரில் மட்டும் யாளிகள் திருமியாச்சரார் மாயசித்தேசுவரர் கோயில்[46] போன்று பாதி உருவங்களாகக் காட்டப்பட்டுள்ளன.

தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன், தென்திருப்பேரை, ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி, வரகுணமங்கை, புளியங்குடி, ஆழ்வார்திருநகரி, ஆகிய கோயில்களில் யாளிகள் பக்கவாட்டுப் பார்வையுடன் திருவெறும்பூர் பிப்பிலவனேசுவரர் கோயில்[47] போன்று இடம்பெற்றுள்ளன.

இவற்றில் வரகுணமங்கை மற்றும் புளியங்குடிக் கோயில்களில் யாளிகள் நேர்த்தியாகச் செதுக்கப்படவில்லை.

திருக்கோட்டியூர் யாளிகள் ஒன்றன்பின் ஒன்று என்ற வரிசையிலும் எதிரெதிரான அமைப்பிலும் இடம்பெற்றுள்ளன. ஆண்டாள்கோயில். மன்னார்கோயில், திருமோகூர், கூடலழகர், ஆகிய கோயில்களிலும் திருக்கோட்டியூர் யாளிவரிசை அமைப்பைப் போன்றே இடம் பெற்றுள்ளது. இவற்றில் திருக்கோட்டியூர் மற்றும் மன்னார்கோயிலில் யாளிகளுக்கிடையே சிறு அளவிலான இறையுருவங்களும், சிம்மங்களும், பூதகணங்களும் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன.

மன்னார்கோயில் யாளிவரிசையில் கருவறையின் தெற்குப்பகுதியில் சரபேசர் உருவமும், வடக்கே வினாயகி உருவமும் இடம்பெற்றுள்ளமை அரிதான காட்சியாகும்.

யாளிவரிசையின் முனைகளில் மகரங்கள் இடம்பெறுகின்றன. கூடலழகர் கோயிலில் மட்டும் மகரங்களுக்குப் பதிலாக சிம்மங்கள் [48] இடம்பெறுகின்றன.

நாங்குனேரி, திருக்குறுங்குடி, கிருஷ்ணாபுரம், ஸ்ரீவைகுண்டம், பெருங்குளம் ஆகிய கோயில்களின் கருவறையைச் சுற்றியுள்ள பிரகாரத்திற்கும், கருவறைக்கும் இடையே உள்ள திறந்த வெளியானது பாதுகாப்புக் கருதி சமீப காலத்தில் நீளமான பலகைக் கற்களாலும், கம்பி வளைகளாலும் மூடப்பட்டுள்ளதால் யாளிவரிசையானது சிமெண்டினாலும், பலகைக்கற்களாலும் மறைக்கப்பட்டுள்ளது. எனினும் ஆங்காங்கே யாளிகள் தெரிகின்றன.

## 2. உத்திரக்கட்டை முனைவரிசை

**(A Rafter course chamfered in to pyramidal tips)**

திருக்கோளூர், திருத்தங்கல் ஆகிய கோயில்களில் மட்டும் யாளிவரியில் யாளிகளுக்குப் பதிலாக உத்திரக்கட்டை முனைவரிசை இடம் பெறுகிறது.

## 3. உத்திரம்

தாடிக்கொம்பு, திருமெய்யம், அழகர்கோயில் ஆகியவற்றில் யாளிகளோ, உத்திரக்கட்டை முனைவரிசையோ இடம்பெறவில்லை மாறாக உத்திரம் போன்ற அமைப்பு இடம்பெற்றுள்ளது.

## விமான தளங்கள்

விமானம் அதன் தளங்களின் எண்ணிக்கையைப் பொருத்துப் பெயர் பெறுவதுமுண்டு. ஒருதளம் கொண்ட விமானம் "ஏகதள விமானம்"என்றும் "அல்ப விமானம்" என்றும் பெயர்பெறும். இரண்டு தளங்களைக் கொண்ட விமானம் "துவிதளவிமானம்" என்றும், மூன்று தளங்கள் கொண்ட விமானம் "திரிதளவிமானம்" என்றும் அழைக்கப்படும்.

விமான தளங்களில் நான்கு பக்கங்களிலும் அவ்வத்திசைகளுக்குரிய கடவுளரின் உருவங்கள் இடம்பெறும். மேலும், விமானதள உறுப்புக்களான கர்ணம், பஞ்சரம், சாலை போன்றவை இடம் பெறுவதோடு அவற்றில் சுதையாலான சிற்பங்களையும் அமைப்பர். இச்சிற்பங்கள் பெரும்பாலும் இதிகாச புராணச்சிற்பங்களாக அமையும். இத்தகு சிற்பங்கள் அமைக்கப்படாவிட்டாலும் விமான தளங்களில் அந்தந்த திசைக்குரிய கடவுள் உருவங்கள் கட்டாயமாக இடம் பெறும். இவை விமான தேவதைகள் என்று அழைக்கப்படும்.

இங்கு ஆய்வுக்காக எடுத்துக் கொண்ட அனைத்துக் கோயில்களிலும் கருவறைக் கூரையின் மேற்பகுதியானது, சுதை மற்றும் செங்கற்களால் கட்டப்பட்டுள்ளது. மேலும், பெரும்பாலான கோயில்களில் இப்பகுதி சேதமடைந்தபடியால் புதிதாக சிமெண்டினால் புதுப்பிக்கப்பட்டுள்ளது. இருப்பினும், தற்போதுள்ள சுதைச் சிற்பங்களின் அமைப்பும் இங்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

துவக்க காலத்தில் மகாபலிபுரம் பஞ்சபாண்டவர் இரதங்களில் "ஏகதள விமானம்" (திரௌபதி ரதம்), "துவிதளவிமானம்" (அர்ச்சுனன் ரதம்), "திரிதள விமானம்" (தர்மராஜ ரதம்) என மூன்று தள அமைப்பு வரை பரிசோதனை முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. பின்னர், இவை கட்டுமானக் கோயில்களிலும் இடம்பெற்றன. துவக்க காலத்திலிருந்தே விமான தளங்களை மேலும் மேலும் கூட்டி அமைக்கப்படும் வழக்கம் இருந்து வந்துள்ளது. பல்லவர் காலத்தை அடுத்த சோழர் கால விமானத்தில் அதிகபட்சமாக பதினோரு தளங்கள் வரை (தஞ்சை பிரகதீஸ்வரர் கோயில்) இடம்பெற்றன. பின்னர், பாண்டியர் மற்றும் விசயநகர-நாயக்கர் காலத்தில் விமானத்தின் உயரத்தைக் குறைத்து, கோபுரத்தின் உயரத்தை அதிகமாக்கினர். எனவே, அதிகமான உயரம் உடைய விமானங்கள் சோழ நாட்டில்தான் வெகுவாக இடம் பெற்றுள்ளன. பாண்டிய நாட்டில் அத்தகு விமானம் இல்லை.

எடுத்துக்கொண்ட கோயில் விமானங்கள் ஒன்று முதல் இரண்டு வரையிலான தளங்களைக் கொண்டு அமைந்துள்ளன. விமான தளங்களில் இடம்பெறும் தேவதைகள் பற்றியும், அவை இடம்பெறும் அமைப்புமுறை பற்றியும் இங்கு விளக்கப்படுகிறது. விமான தளங்களில் இடம்பெறும் புராண, இதிகாச சிற்பங்கள் பற்றி "சிற்பக்கலை" எனும் இயலில் விளக்கப்படுகிறது.

## 1. ஏகதள விமானம்

பொதுவாக, கபோதத்திற்கு மேலே கர்ணம், பஞ்சரம், சாலை, பஞ்சரம், கர்ணம் என்ற அமைப்பு நான்கு பக்கங்களிலும் இடம் பெறுவதையே ஒரு தளம் என்பர். ஆனால், ஆய்வுப் பகுதியில் சில கோயில்களில் இத்தகு அமைப்பு இடம்பெறாது கபோதத்தின் மேல் கிரீவம் இடம்பெறுகிறது. அழகர்கோயில், திருத்தங்கல், திருக்கோளூர்

ஆகிய மூன்று கோயில்களிலும் கபோதத்தின் மேல் கிரீவம், சிகரம், கலசம் என இடம்பெறுகின்றன. இத்தகு அமைப்பைக் கொண்ட விமானங்களைக் கட்டிடக்கலை வல்லுநர்கள் ஏகதள விமானம் என்றே கூறிவருகின்றனர். துவக்ககாலப் பாண்டியர் மற்றும் சோழர் கோயில்கள் பல ஏகதள சிற்றாலயங்களாகும்.

ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை, திருப்புளியங்குடி, திருப்புல்லாணி, நாங்குனேரி, திருமெய்யம், கிருஷ்ணாபுரம், ஆகிய ஏழுகோயில்களில் ஏகதள விமான அமைப்பு இடம்பெறுகிறது. இவற்றில், திருமெய்யம், கிருஷ்ணாபுரம் ஆகிய கோயில் விமானத்தில் விமான தேவதைச் சிற்பங்கள் இடம் பெறவில்லை.

ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை, திருப்புளியங்குடி ஆகிய மூன்று கோயில்களில் விமான தேவதைகளின் அமைப்பு ஒரே மாதிரியாக அமைந்துள்ளது. அவை முறையே.

தெற்கே – தட்சிணாமூர்த்தி.
மேற்கே – இலட்சுமி நரசிம்மர் / யோகநரசிம்மர் / திருமால்.
வடக்கே – பிரம்மன்.
கிழக்கே – இந்திரன்.

இக்கோயில்களில் விமானத்தளத்தின் மேற்குப் பக்கத்தில் மட்டும் ஸ்ரீவைகுண்டத்தில் இலட்சுமிநரசிம்மர், வரகுணமங்கையில் யோகநரசிம்மர், திருப்புளியங்குடியில் மகாவிஷ்ணு இரு தேவியருடன் என மாறி அமைந்துள்ளன. இருப்பினும் அவற்றை முறையே திருமாலின் வெவ்வேறு உருவங்கள் என்ற ஓர் அமைப்பினுள் அடக்கலாம்.

நாங்குனேரியில்

தெற்கே – காளியகிருஷ்ணன்.
மேற்கே – நரசிம்மர்.
வடக்கே – இலட்சுமிவராகர்.
கிழக்கே – திருமால்.

என்ற அமைப்பும், திருப்புல்லாணியில்

தெற்கே – நரசிம்மர்.
மேற்கே – திருமால்.
வடக்கே – வராகர்.
கிழக்கே – திருமால்.

என்ற அமைப்பும் இடம் பெற்றுள்ளது.

## 2. துவிதள விமானம்

தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் மற்றும் வடபத்ரசாயிகோயில்,

தென்திருப்பேரை, ஆழ்வார்திருநகரி, பெருங்குளம், திருக்குறுங்குடி, திருமோகூர், தாடிக்கொம்பு, மன்னார்கோயில், கூடலழகர் ஆகிய பன்னிரெண்டு கோயில்களில் துவிதள விமானமும் அதில் விமான தேவதைகளும் இடம்பெற்றுள்ளன. இவற்றில் தாடிக்கொம்புக் கோயிலில் இரண்டு தளங்களிலும் விமான தேவதைச் சிற்பங்கள் இடம் பெறவில்லை.

பெருங்குளம் மற்றும் மன்னார்கோயிலின் முதல்தளத்தில் சிற்பங்கள் சிதைந்துவிட்டன. இரண்டாம் தளத்தில் மட்டுமே சிற்பங்கள் உள்ளன. திருக்குறுங்குடி, வடபத்ரசாயி, அரவிந்தலோசனன் ஆகிய கோயில்களின் இரண்டு தளங்களிலும் விமான தேவதைகளின் அமைப்பு ஒரே மாதிரியாக கீழ்க்கண்டவாறு அமைந்துள்ளது.

தெற்கே – தட்சிணாமூர்த்தி.

மேற்கே – யோகநரசிம்மர்.

வடக்கே – பிரம்மன்.

கிழக்கே – இந்திரன்.

இதில் வடபத்ரசாயிகோயில் இரண்டாம் தளத்தின் மேற்பகுதியில் யோகநரசிம்மருக்குப்பதிலாக இலட்சுமிநரசிம்மரும், அரவிந்த லோசனன் கோயிலில் கருடநாராயணர் இலட்சுமியுடனும் இடம்பெற்றுள்ளனர். மேலும், அரவிந்தலோசனன்கோயில் இரண்டாம் தளத்தின் தெற்குப்பக்கம் தெட்சிணாமூர்த்திக்குப் பதிலாக இராவண – அனுக்ரகமூர்த்தி இடம் பெற்றுள்ளார். மேற்கண்ட கோயில்களில் அந்தந்தத் திசைகளுக்குரிய விமான தேவதைகள் மாற்றம் பெற்றிருந்தாலும் அவ் இடத்தில் அதே இறைவனின் வேறு வடிவம் இடம்பெற்றுள்ளமை நோக்கத்தக்கதாகும்.

அடுத்த நிலையாக, ஆழ்வார்திருநகரி, தென்திருப்பேரை கூடலழகர் ஆகிய மூன்று கோயில்களில் நான்கு பக்கமும் திருமால் தனியாகவோ, தன் இரு தேவியருடனோ இடம்பெற்றுள்ளார். ஆழ்வார்திருநகரிக்கோயில் இரண்டாம் தளத்தின் வடக்கில் மட்டும் வஸ்திர அபகர்ணக் கண்ணன் சிற்பம் இடம்பெறுகிறது. கூடலழகர் கோயிலின் முதல் தளத்தில் தெற்குப்பக்கம் மட்டும் தட்சிணாமூர்த்தி சிற்பம் இடம் பெறுகிறது.

திருமோகூர், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில் ஆகிய விமான தளங்களில் முறையே

தெற்கே – யோகநரசிம்மர் / இலட்சுமிநரசிம்மர் / இரணியவதம்.

மேற்கே – திருமால் தேவியருடன்.

வடக்கே – இலட்சுமிவராகர் / இலட்சுமிநாராயணன்.

என்ற அமைப்பு இடம் பெற்றுள்ளது. இவற்றில் திருமோகூரில் முதல் தளத்தின் தெற்குப்பகுதியில் இலட்சுமிநரசிம்மரும் இடம் பெற்றுள்ளார்.

ஆண்டாள்கோயில் இரண்டாம் தளத்தின் கிழக்கே இலட்சுமி வராகருக்குப் பதில் இலட்சுமி நாராயணர் இடம்பெறுகிறார்.

திருக்கோட்டியூர் விமான தளத்தில் விமான தேவதைகள் அமைப்பானது மற்ற கோயில்களைப் போலன்றி மாறி அமைந்துள்ளது. இதன் முதல் தளத்தில்

தெற்கே - தண்டபாணி (பழனி முருகன்).
மேற்கே - நரசிம்மர் .
வடக்கே - பிரம்மன்.
கிழக்கே - இந்திரன்.

என அமைந்துள்ளது. இதில் தெற்குப்பக்கம் மட்டும் தெட்சிணாமூர்த்திக்குப் பதிலாக தண்டபாணி இடம்பெற்றுள்ளார். இது மாறுபாடான ஒன்றாகும். இரண்டாம் தளத்தில்

தெற்கே - தட்சிணாமூர்த்தி
மேற்கே - திருமால்
வடக்கே - பிரம்மன்
கிழக்கே - விநாயகர்

என அமைந்துள்ளது. இதில் கிழக்குப்பக்கம் வினாயகர் இந்திரனுக்குப் பதில் அமைந்திருப்பது மாறுபாடானதே. எனவே, இக்கோயிலில் முதல் தளத்தில் தண்டபாணியும், இரண்டாம் தளத்தில் விநாயகரையும் இடம்பெறச் செய்தது சமீபத்தில் நடந்த விமானத்திருப்பணியின் போது செய்யப்பட்ட மாற்றமாகக் கருதலாம்.

இதுவரை கண்ட விமானதேவதைகளின் அமைப்பிலிருந்து பாண்டிய நாட்டு வைணவக் கோயில் விமான தளங்களில்

தெற்கே - தட்சிணாமூர்த்தி (அ) நரசிம்மர்.
மேற்கே - நரசிம்மர் (அ) திருமால்.
வடக்கே - பிரம்மன் (அ) வராகர்.
கிழக்கே - இந்திரன் (அ) திருமால்.

என்ற அமைப்புப் பொதுவானதாக அமைகிறது. எனினும் ஒவ்வொரு கோயிலிலும் ஏதேனும் ஒரு தேவதை மாறித்தான் உள்ளது. எனவே விமான தேவதைகள் இவ்வை இவை இன்னின்ன பக்கங்களில் இடம் பெறவேண்டும் என்ற வரையறை பிற்காலத்தில் பின்பற்றப்படவில்லை என்பதை இதன் மூலம் உணரலாம்.

## கிரீவமும் கிரீவகோட்டமும்

பிரஸ்தரத்திற்கு[50] மேல் அமையும் பகுதி கிரீவம் எனப்படும். இப்பகுதி சிகரத்தை விடச் சற்று உள்ளடக்கி இருக்கும். இக்கீரிவப் பகுதி சிகரத்தின் அமைப்பினையே பெற்றிருக்கும். மேலும், கிரீவமானது சதுரம், வட்டம்,

—

நீள்சதுரம், எண்பட்டை என நான்கு வகையான அமைப்புக்களில் இடம்பெறும். இக்கிரிவப் பகுதியில் திசைக்கு ஒன்று என கோட்டங்கள் அமைந்திருக்கும். இவற்றில், அந்ததந்தத் திசைக்குரிய கடவுள் உருவங்களை இடம்பெறச் செய்வர்.

கிரீவ கோட்டங்களில் இடம்பெறும் கடவுள் உருவங்கள் சைவசமயக் கோயில்களிலும், வைணவக் கோயில்களிலும் வேறுவேறாக அமையும். வைணவக் கோயில்களில் இரண்டுவிதமான கிரீவகோட்ட சிற்ப அமைப்புக் காணப்படுகிறது. முதலாவதாக

தெற்கே - தட்சிணாமூர்த்தி

மேற்கே - திருமால்

வடக்கே - பிரம்மன்

கிழக்கே - இந்திரன்

(இது சைவசமயக்கோயிலைப்போன்ற அமைப்பு முறையாகும்.)

இரண்டாவதாக நான்கு திசைகளிலும் திருமால் இடம்பெறும் அமைப்பும் காணப்படுகின்றது. அவ்வாறு திருமால் இடம்பெறும்போது திருமாலின் வடிவங்களான நரசிம்மர், வராகர், கருடநாராயணன் ஆகிய சிற்பங்கள் இடம்பெறுகின்றன. சில இடங்களில் திருமாலின் தேவியரும் திருமாலுடன் இடம்பெற்றுள்ளனர். இத்தகு அமைப்பு வைணவக் கோயிலுக்கே உரிய சிறப்பு அமைப்பாக விளங்குகிறது.

## 1. முதல் வகை

தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன், திருக்குறுங்குடி, மன்னார்கோயில், வரகுணமங்கை, பெருங்குளம், திருப்புளியங்குடி, ஸ்ரீவைகுண்டம், நாங்குனேரி ஆகிய கோயில்களில் தெற்கு, மேற்கு, வடக்கு, கிழக்கு ஆகிய கோட்டங்களில் முறையே தட்சிணாமூர்த்தி, திருமால், பிரம்மன், இந்திரன் என்ற அமைப்பு இடம்பெறுகிறது.

இவற்றில், வரகுணமங்கை கோயிலின் வடக்குக் கிரீவகோட்டத்தில் உள்ள சிற்பம் சிதைந்துள்ளது. எனினும், பிற பக்கங்களில் மேற்கண்ட அமைப்புக் காணப்படுவதால் சிதைந்த சிற்பம் பிரம்மனே என முடிவு செய்யலாம். திருக்குறுங்குடி கோயிலின் கிழக்குக் கிரீவ கோட்டத்தில் சிற்பம் அர்த்தமண்டபக் கூரையினால் மறைக்கப்பட்டுள்ளது. என்றாலும், பிற பக்கங்களில் மேற்கண்ட அமைப்புக் காணப்படுவதால், மறைந்துள்ள சிற்பம் இந்திரன் என்பதை அறியமுடிகிறது. மன்னார் கோயிலின் கிழக்குக் கிரீவ கோட்டத்தில் இருந்த சிற்பம் சிதைந்துவிட்டது. எனினும், அச்சிற்பத் தொகுதியில் யானை மட்டும் எஞ்சியிருப்பதால் உடைந்திருப்பது இந்திரன் சிற்பம் தான் என்பதை அறியலாம். சில பிற்காலப் பாண்டியரது சிவன்கோயில்களில் கிழக்கில் யானைமீதமர்ந்த சுப்பிரமணியர் சிற்பம் இடம்பெறுவதுண்டு. ஆனால்,

விசயநகர-நாயக்கர் கோயில்களில் அவ்வாறு அமைக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

மேற்கண்ட கோயில்களின், மேற்குக் கிரீவ கோட்டங்களில் திருமால் ஒரே வடிவத்தில் இடம் பெறாது, பல்வேறு அவதார வடிவங்களில் இடம்பெற்றுள்ளனார்.

தொலைவில்லிமங்கலம் ஸ்ரீநிவாசன், மன்னார்கோயில், திருக்குறுங்குடி ஆகிய கோயில்களில் யோகநரசிம்மரும், வரகுணமங்கை கோயிலில் இலட்சுமி நரசிம்மரும், நாங்குனேரி ஸ்ரீவைகுண்டம் கோயில்களில் கருடநாராயணரும், திருப்புளியங்குடி, பெருங்குளம் கோயில்களில் திருமால் தேவியருடனும், தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் கோயிலில் திருமால் முனிவர்களுடனும் இடம்பெறுகின்றனர்.

## 2. இரண்டாம் வகை

இவ் அமைப்பில் நான்கு கிரீவகோட்டங்களிலும் திருமாலின் உருவமோ திருமாலின் அவதார உருவங்களோ இடம்பெறும்.

கூடலழகர்,தென்திருப்பேரை, திருக்கோட்டியூர், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் மற்றும் வடபத்ரசாயி கோயில், திருமோகூர், ஆழ்வார் திருநகரி, திருமெய்யம், தாடிக்கொம்பு, திருப்புல்லாணி ஆகிய பத்துக் கோயில்களில் கிரீவ கோட்டங்கள் மேற்கண்ட அமைப்பைப் பெற்றுவிளங்குகின்றன.

### அ. தெற்குக் கிரீவகோட்டம்

திருப்புல்லாணி கோயில் தெற்குக் கிரீவ கோட்டத்தில் நரசிம்மரும், கூடலழகர், திருக்கோட்டியூர், தென்திருப்பேரை, ஆண்டாள் ஆகிய கோயில்களில் இலட்சுமி நரசிம்மரும், திருமோகூரில் இரணியவதை நரசிம்மரும், வடபத்ரசாயி, ஆழ்வார்திருநகரி ஆகிய கோயில்களில் விஷ்ணு தேவியருடனும் தாடிக்கொம்பு, திருமெய்யம் கோயில்களில் தனித்த நிலையிலும் திருமால் இடம்பெறுகின்றார்.

### ஆ. மேற்குக் கிரீவகோட்டம்

மேற்கண்ட பத்துக் கோயில்களின் மேற்குக் கிரீவகோட்டங்களில் திருமால் தனியாகவோ தம் இருதேவியருடனோ, அமர்ந்த கோலத்தில் காணப்படுகிறார். எனினும், தாடிக்கொம்பில் யோகநரசிம்மரும், திருமெய்யத்தில் இலட்சுமி நரசிம்மரும் இடம் பெறுகின்றனர்.

### இ. வடக்குக் கிரீவ கோட்டம்

வடக்குக் கிரீவகோட்டத்தில் திருமால் தனியாகவோ தம் இரு தேவியருடனோ காணப்படுகிறார்.

தாடிக்கொம்பில் மட்டும் இராமர் சிற்பம் இடம்பெறுகிறது. திருப்புல்லாணியில் வராகர் தனியாக இடம் பெறுகிறார்.

## ஈ. கிழக்குக் கிரீவ கோட்டம்

திருமோகூர், திருக்கோட்டியூர், கூடலழகர், திருமெய்யம், தென்திருப்பேரை, திருப்புல்லாணி ஆகிய கோயில்களில் இலட்சுமி வராகர் இடம் பெறுகிறார்.

ஆண்டாள் கோயில், ஆழ்வார் திருநகரி ஆகிய கோயில்களில் திருமால் தம் தேவியருடனும், தாடிக்கொம்பு, வடபத்ரசாயி கோயில்களில் திருமால் தனியாகவும் இடம்பெற்றுள்ளார்.

## சிற்பங்களற்ற கிரீவகோட்டம

அழகர்கோயில், கிருஷ்ணாபுரம், திருத்தங்கல், திருக்கோளூர் ஆகிய கோயில்களின் நான்கு பக்க கிரீவ கோட்டங்களிலும் சிற்பங்கள் இடம் பெறவில்லை. அழகர்கோயிலில் கிரீவத்தில் இடம் பெற வேண்டிய கோட்டம், சிகரத்தில் இடம்பெற்றுள்ளது. திருக்கோளூர், திருத்தங்கல் ஆகிய கோயில்களின் கோட்டங்களில் இறையுருவிற்குப் பதிலாக தென்கலை நாமம் (திருமண்) இடம்பெற்றுள்ளது.

## வாகன அமைப்பு

கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் அந்தந்தக் கோயிலின் பிரதான இறையுருவின் வாகனம் இடம்பெறும். சைவ சமயக்கோயில் என்றால் நந்தியும்,- வைணவக் கோயில் என்றால் கருடன் மற்றும் சிம்மங்களும் இடம் பெறுவதுண்டு. கி.பி. பன்னிரெண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த பிற்காலப் பாண்டியரின் குருவித்துறை சித்திர இரத வல்லவபப் பெருமாள் கோயிலில் சிம்மம் வாகனமாக இடம்பெற்றுள்ளது.[51]

ஆய்வுக்குட்பட்ட கோயில்களில் பெரும்பாலானவற்றில் கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் கருடாழ்வார் அஞ்சலியிலும் அவருக்கு இருபுறமும் இரு சிம்மங்களும் இடம்பெறுகின்றன.

திருத்தங்கல், கிருஷ்ணாபுரம், அழகர்கோயில், திருக்கோளூர், திருப்புல்லாணி, திருமெய்யம் ஆகிய கோயில்களில் கருடனோ, சிம்மங்களோ இடம்பெறவில்லை. ஒருவேளை முன்னர் இருந்து சிதைவுற்றிருக்கலாம்.

தூரத்திலிருந்தே எந்தக் கடவுளுக்காக அக்கோயில் கட்டப் பட்டுள்ளது என்பதை அறிந்து கொள்ள அந்தந்தக் கடவுளது வாகனங்கள் கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் அமைக்கப்படுகின்றன. சிம்மம் திருமாலின் வாகனம் இல்லை என்றாலும் வீரமும், கம்பீரமும் கொண்டு விலங்குகளுக்கெல்லாம் அரசனாகத் திகழ்வதுபோல திருமால் தெய்வங்களுக்கெல்லாம் தலைவன் என்ற கருத்தில் திருமாலது

கோயில்களில் சிம்மம் இடம் பெற்றிருக்கலாம். மேலும், திருமால் நரசிம்ம அவதாரம் எடுத்ததாகக் கூறப்படும் கருத்தை ஒட்டியும், சிம்மத்தை திருமாலோடு தொடர்புபடுத்திக் கூறப்படும் கருத்தை ஒட்டியும் சிம்மத்தை வைத்திருக்கலாம். விசயநகர-நாயக்கரது காலத்தில் நரசிம்மஅவதாரம் ஓர் எழுச்சியுற்ற வழிபாடாக இருந்ததனாலும் அவர்களது காலத்தில் கட்டப்பட்ட திருமால் கோயில்களின் கிரீவத்தில் சிம்மம் இடம் பெற்றதாகக் கருதலாம்.

## சிகரம்

விமானத்தின் ஆறு அங்கங்களின் சிகரம் ஐந்தாவது அங்கமாகும். விமானம் சிகரத்தின் அமைப்பை வைத்து நாகரம், வேசரம், திராவிடம் என்று பெயர் பெறும்.[52] இதில், சிகரம் வட்டமாக இருந்தால் "வேசர விமானம்" என்றும், சதுரமாக இருந்தால் "நாகர விமானம்" என்றும் எண்பட்டை அமைப்பிலிருந்தால் "திராவிட விமானம்" என்றும் அழைக்கப்படும். [53]. இந்தியக் கோயில்களில் இம்மூன்று விதமான சிகர அமைப்புக்களும் இடம்பெற்றுள்ளன. இவற்றில் இமாலயத்திலிருந்து விந்தியமலை வரை நாகரபாணியும், விந்திய மலையிலிருந்து கிருஷ்ணா நதிவரை வேசரபாணியும், கிருஷ்ணா நதியிலிருந்து குமரி வரை திராவிடப்பாணியும் பெரிதும் இடம்பெறுகின்றன. [54] எனினும், அவ்வப்பகுதியில் பிற பாணிக் கோயில்களும் இடம்பெறுவதுண்டு. விமானத்தின் தரைஅமைப்பைப் பொறுத்து சிகரத்தின் அமைப்பு அமைகிறது. விமானத்தின் தரைஅமைப்பு சதுரமாக இருப்பின் சிகரம் சதுரம் அல்லது எண்பட்டை அல்லது வட்டம் என அமையும். தரையமைப்பு வட்டமாக இருந்தால் சிகரம் வட்டமாக அமையும். தரையமைப்பு நீள் செவ்வகமாக இருந்தால் வண்டிக் கூடு அமைப்பு (சாலை) இடம் பெறும். இந்நூலில் இடம் பெறுகின்ற கோயில்களில் சிகரமானது வட்டம், சதுரம், எண்பட்டை, வண்டிக்கூடு ஆகிய நான்கு அமைப்புகளிலும் இடம் பெறுகிறது.

### 1. வட்டவடிவச் சிகரம்

தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில், கிருஷ்ணாபுரம், ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி, திருமோகூர், கூடலழகர், அழகர்கோயில் ஆகிய கோயில்களின் விமானத்தில் அமைந்துள்ள சிகரங்கள் வட்டமான அமைப்பைப் பெற்று விளங்குகின்றன. எனவே, இக்கோயில்கள் அனைத்தும் வேசர பாணி விமானக் கோயில்கள் எனலாம்.

மேற்கண்ட கோயில்களில் அழகர்கோயிலைத் தவிர பிற கோயில்கள் அனைத்தும் சதுரமான தரை அமைப்பைக் கொண்டவை. அழகர்கோயில் விமானத்தின் தரை அமைப்பு வட்டமானது. இக்கோயில் விமானங்களின் சிகரமானது வட்டமாக் அமைகிறது.

எனவே, தரை அமைப்பு சதுரமாகவோ, வட்டமாகவோ அமையும் எனில் சிகரம் வட்டமாக அமையும் என்பதை இதன் மூலம் அறியலாம்.

## 2. சதுரவடிவச் சிகரம்

தென்திருப்பேரை, தாடிக்கொம்பு, திருப்புல்லாணி ஆகிய கோயில்களின் சிகரம் சதுரமாக அமைந்துள்ளது. இவற்றின் தரை அமைப்பும் சதுரமாக உள்ளது. ஆதலால் சதுரமான தரை அமைப்புடைய கோயில்களின் சிகரம் சதுரமாக அமைவதை அறியலாம். இக்கோயில் விமானங்கள் "நாகரபாணி விமானங்கள்" எனப்படும். மேலும் சிகரமானது சதுரமாகவோ, வட்டமாகவோ அமையுமானால் அவ்விமானம் "கூட விமானம்" எனப்படும்.[55] எனவே, மேற்கண்ட கோயில்களின் விமானங்கள் 'கூட விமான' அமைப்புடைய விமானங்கள் ஆகும்.

## 3. எண்பட்டை வடிவச் சிகரம்

திருக்கோட்டியூர், நான்குனேரி, திருக்குறுங்குடி, வரகுணமங்கை, பெருங்குளம், திருமெய்யம் ஆகிய கோயில் விமானங்களில் சிகரம் எண்பட்டை அமைப்பைப் பெற்று விளங்குகிறது. எனவே, இவ்விமானங்கள் "திராவிடப்பாணி விமானங்கள்" ஆகும். இத்தகு அமைப்புடைய கோயில்கள் தமிழகத்தில் ஏராளமாக உள்ளன. இக்கோயில்களின் தரை அமைப்பு சதுரமாக அமைந்துள்ளது.

## 4. வண்டிக்கூடுச் சிகரம்

சிகரம் வண்டிக்கூடு அமைப்பினைப் பெற்று விளங்கினால் அது "சால விமானம்" எனப்படும். திருமாலின் கிடந்த கோலம் இடம்பெறும் விமானத்தில் இத்தகு அமைப்பு பெரிதும் இடம் பெறும். மேலும், அம்மன் கோயில்களிலும் இத்தகு விமான அமைப்பு இடம் பெறுகிறது.[56]

திருக்கோளூர், வடபத்ரசாயி, திருப்புளியங்குடி, மன்னார்கோயில், திருத்தங்கல் ஆகிய கோயில்களின் விமானத்தில் சிகரம் வண்டிக்கூடு அமைப்பைப் பெற்று விளங்குகிறது. எனவே இக்கோயில்கள் சால விமானக் கோயில்கள் எனப்படும். இக்கோயில்களின் தரை அமைப்பு நீள் செவ்வக அமைப்புடன் திகழ்கின்றது. எனவே, செவ்வகத்தரை அமைப்புடைய கோயில்களில் சிகரம் சாலை அமைப்பை மட்டும் பெற்று விளங்கும் என்பதை இக்கோயில்களின் அமைப்பிலிருந்து அறிய முடிகின்றது.

## மகா நாசி அமைப்பு

சிகரத்தில் இடம் பெறும் முக்கிய உறுப்பு மகாநாசி ஆகும். நாசியின் எண்ணிக்கை விமானத்தின் அமைப்பைப் பொறுத்து மாறுபடும். பொதுவாக திராவிட விமான அமைப்பில் எட்டு நாசிகளும், கூடவிமான

அமைப்பில் இரண்டு நாசிகளும் அமையும். இந்நாசிகளின் விளிம்புகளில் அலங்கார வேலைப்பாடும், மேற்பகுதியில் சிம்மமுகமும் இடம் பெற்றிருக்கும். இந்நாசிக்குள் கந்தர்வப்பெண்கள் கும்பத்தைக் கவிழ்த்த நிலையில் காணப்படுவர். இது குடமுழுக்கின் போது விமானத்தின் கலசத்தில் புனித நீர் விடுவதைச் காட்டுவதோடு, தூய்மையான கும்ப நீரை விமானத்தில் தெளிக்கும் புனிதத்துவத்தைக் காட்டுவதாக அமைகின்றது. இந்த நாசி பொதுவாக மனித நாசியைப் போன்று காற்று செல்வதற்காக அமைக்கப்பட்டிருப்பதாகப் பலர் கருதினும், இஃது ஓர் அலங்கார அமைப்பாகவே இருக்கின்றது. ஏனெனில், விமானத்தின் கூரைப் பகுதி பெரும்பாலும் மூடப்பட்டிருப்பதால் மேற்சொன்ன காரணம் கற்பனையாகும்.

அழகர்கோயில், கூடலழகர், கிருஷ்ணாபுரம், தென்திருப்பேரை, ஸ்ரீவில்லிபுத்தூர், வடபத்ரசாயி, திருப்புல்லாணி ஆகிய ஆறு கோயில்களின் சிகரங்களின் நான்கு மகாநாசிகள் அமைப்பு இடம் பெறுகின்றது. இதில், அழகர்கோயிலின் கிரீவத்தில் இடம் பெற வேண்டிய சிற்பங்கள் அங்கு இடம்பெறாது, சிகரத்தில் உள்ள நான்கு மாக நாசிகளிலும் இடம்பெற்றுள்ளது. மேலும், நான்கு மகாநாசிகள் அமைப்பு சதுரம், வட்டம் ஆகிய அமைப்புக்களைக் கொண்டு சிகரங்கள் அமைந்த சாலை விமானங்களில் இடம்பெறுகின்றது.

## 1. எட்டு நாசிகள்

தொலைவில்லிமங்கலம், அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள், திருக்கோட்டியூர், ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை, பெருங்குளம், ஆழ்வார்திருநகரி, திருமோகூர், திருக்குறுங்குடி, நாங்குனேரி, திருமெய்யம், திருக்கோளூர் ஆகிய கோயில்களில் எட்டு நாசிகள் அமைப்பு இடம்பெறுகின்றது. இவ்வாறு அமையும் நாசிகளில் மகாநாசிகள் திசைக்கு ஒன்று என அமைகின்றன. அவைகளுக்கு நடுநடுவே சிறு நாசிகள் நான்கு இடம் பெறுகின்றன. இடவசதி கருதியே மகாநாசிகளுக்கு இடையில் சிறுநாசிகள் அமைக்கப்படுகின்றன.

திருக்குறுங்குடி, நான்குனேரி, திருமெய்யம் ஆகிய கோயில்களில் எட்டு நாசிகளும் சிறியவையாகவே அமைந்துள்ளன. திருக்கோளூரில் சாலவிமானம் இருப்பதால் சிகரத்தின் குறுகிய இரு பக்கங்களில் மகா நாசிகளும் அகன்ற பக்கங்களில் பக்கத்திற்கு மூன்று என சிறிய நாசிகளும் இடம்பெறுகின்றன.

## 2. இரண்டு நாசிகள்

மன்னார்கோயில், திருப்புளியங்குடி ஆகிய கோயில்களில் சாலா (சாலை) சிகரத்தின் பக்கவாட்டில் மட்டும் இரண்டு மகாநாசிகள் இடம் பெறுகின்றன.

## கலசம்

ஆறு அங்கங்களையுடைய ஷடங்க விமானத்தில் இறுதியாக இடம் பெறும் உறுப்பு "கலசம்" ஆகும். இக்கலசம் கல்லினாலோ, சுதையினாலோ, உலோகத்தாலோ செய்யப்பட்டிருக்கும். தமிழகக் கோயில்களில் மாமல்லபுரத்துப் பஞ்சபாண்டவ இரதங்களிலேயே கலசம் இடம்பெறுகின்றது. பிற்காலத்தில் கட்டுமானக் கோயில்களில் கலசம் மிக இன்றியமையாத உறுப்பாக விளங்கியது. கோயில் கட்டுமானம் முடிந்து குடமுழக்கம் செய்யும்போது புனித நீரை இந்தக் கலசத்தின் மீது ஊற்றுவர். எனவே, கலசமானது புனிதமாகக் கருதப்பட்டது. பௌத்த ஸ்தூபிகளில் முக்குடை அமைப்பானது இதற்கு முன்னோடியாக இருந்திருக்கக்கூடும்.

இந்நூலில் விளக்கப்பெறும் கோயில்களில் ஒரு சில கோயில்களைத் தவிர அனைத்துக் கோயில்களிலும் கலசம் இடம்பெற்றுள்ளது. இது தங்கமுலாம் பூசப்பட்டதாக உள்ளது. மன்னார்கோயில், வரகுணமங்கை, திருப்புளியங்குடி, பெருங்குளம், தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன் ஆகிய கோயில்கள் புதுப்பிக்கப் படாதிருப்பதனால் இவற்றில் கலசங்கள் பழுதடைந்துள்ளன.

கலசங்கள் இடிதாங்கியாகப் பயன்படுகின்றன என்பர் ஜெகதீச அய்யர்.[57] ஆனால், அதற்கான அறிவியல் பூர்வமான அமைப்புக்கள் எந்தக் கோயிலிலும் இடம்பெறவில்லை. விமானத்தின் மேல் கலசங்கள் ஒன்றோ, பலவோ அமைவதுண்டு. இங்கு சுட்டப்பெறும் கோயில்களின் விமானத்தில் எண்பட்டை, வட்டம், சதுரம் ஆகிய அமைப்புடைய சிகரங்களில் ஒரு கலசம்தான் காணப்படுகின்றது. சாலை வடிவ சிகரங்களில்தான் (மன்னார்கோயில் மூன்று கலசங்கள்) ஒன்றுக்கும் மேற்பட்ட கலசங்கள் காணப்படுகின்றன. ஒன்றுக்கு மேற்பட்ட கலசங்கள் விமானத்தில் அமையுமானால் அவற்றின் எண்ணிக்கை கருவறையில் அமைந்துள்ள தெய்வ உருவங்களின் எண்ணிக்கையை ஒத்துள்ளதாக சுரேஷ்பிள்ளை கூறுவர்.[58] ஆனால், இக்கருத்து பொருத்த முடையமாக இல்லை. உதாரணமாகத் தொலைவில்லிமங்கலம் ஸ்ரீநிவாசன் மற்றும் அரவிந்தலோசனன் கோயில்களில் திருமால் தேவியருடன் இடம்பெற்றுள்ளார். இக்கோயில்களின் விமானத்தில் ஒரு கலசமே காணப்படுகின்றது.

## அஷ்டாங்க விமானம்

இதுவரை கண்டவை விமானத்தின் ஆறு உறுப்புக்கள் (ஷடங்க விமானம்) பற்றியன. இவ்வகை விமானத்தில் மேலும் இரண்டு அங்கங்கள் இடம்பெற்றால் அவ்விமானம் "அஷ்டாங்க விமானம்" எனப்படும். அஷ்டாங்க விமானத்தில் வழக்கமான ஆறு உறுப்புக்கள் தவிர மற்ற இரண்டு உறுப்புக்கள் எவை என்பது பற்றிக் கலை வரலாற்றறிஞர் களிடையே பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

அஷ்டாங்க விமானம் பற்றிக் கூறுமிடத்து "விமானத்தில் கீழ்தளத்திற்கும், மேலே உள்ள கண்டம், சிகரம், கலசம் ஆகியவற்றிற்கும் இடையே கீழ்த்தளத்தைவிட அளவில் சிறியதாய் ஒரு தளமும், ஒரு பிரஸ்தரமும் இடம்பெறச் செய்வது" என கே.ஆர். ஸ்ரீநிவாசன் கூறுவர்.[59]

"கருவறைக்கு மேலே மேலும் இரண்டு கருவறைகளை ஒன்றன் மேல் ஒன்றாக அமைத்து அக்கருவறைகளில் திருமாலின் நின்ற, அமர்ந்த, கிடந்த கோலங்களை நிறுவுவது" என்கிறார் ஆர். வெங்கட்ராமன்[60].

"ஆறு அங்கங்களுடன் உபபீடம், உபகிரீவம் என்ற இரு அங்கங்களைக் சேர்த்து அஷ்டாங்க விமானம் எனலாம்" என்பர் நாகசாமி.[61]

"அஷ்டாங்க விமானம் என்பது ஓம்நமோநாராயணா என்ற அஷ்டாக்ஷர மந்திரத்தின் ஸ்தூல சரீரமாகக் கருதத்தக்கது" என்பர் அரங்கராசன்[62].

அஷ்டாங்க விமானத்தின் ஒவ்வொரு தளத்திலும் இரண்டு திருச்சுற்றுக்கள் இருக்கும். இவற்றோடு பெருமாள் கோயிலை மட்டும் (கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம்) சுற்றி அமைந்துள்ள திருச்சுற்று, பெருமாள் கோயிலுடன் தாயார் கோயிலையும் சேர்த்து அமைந்திருக்கும் திருச்சுற்று எனத் திருச்சுற்றுக்கள் எட்டு அமைந்திருப்பதால் இதனை அஷ்டாங்க விமானம் எனலாம் என்பர் சுந்தர சீனிவாசன்.[63].

மேற்கண்ட விளக்கங்களை நோக்கும் போது வெங்கட்ராமன் கருத்தே இன்றைய நடைமுறையில் உள்ள அஷ்டாங்க விமான்த்தின் கட்டடக் கலை அமைப்புடன் ஒத்துள்ளது. எனவே, அஷ்டாங்க விமானம் என்பது மூன்று கருவறைகளை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி அதில் திருமாலுக்கே பெரிதும் உரித்தான நின்ற, அமர்ந்த, கிடந்த ஆகிய மூன்று கோலங்களையும் அமைப்பது எனக் கொள்ளலாம் (பார்க்க நி.ப.எண். 7).

## அஷ்டாங்க விமானத்தின் தோற்றம்

ஒரு கருவறையின் மேல் மற்றொரு கருவறையை அமைக்கும் கட்டடக்கலை அமைப்பு இந்தியாவில் முதன்முதலாக மத்தியப் பிரதேசத்தில் உள்ள குப்தர்களது கோயிலான நாச்னாகுதாரோவில் காணப்படுகிறது. இதேபோன்ற அமைப்பு கர்நாடக மாநிலத்தில் உள்ள லாட்கன் கோயிலிலும்[64] காணப்படுகிறது.

தமிழகத்தில் அஷ்டாங்க விமானத்தின் துவக்கக் கூறுகளை முதன்முதலாக மகாபலிபுரத்திலுள்ள தர்மராச இரதத்தில் காணமுடிகிறது. தர்மராச இரதத்தில் ஒன்றன்மேல் ஒன்றாக மூன்று கருவறைகள் அமைந்துள்ளன. முதலிரண்டு கருவறைகள் உட்பக்கம் செதுக்கப்படவில்லை. இவற்றின் கோட்டங்களில் வைணவ சமய உருவங்களே அதிகம் காணப்படுகின்றன. இருப்பினும், செதுக்கப்பட்ட

மூன்றாவது கருவறையினுள் பின் சுவரில் இடம்பெற்றுள்ள சோமாசுகந்தரின் புடைப்புச்சிற்பம் இந்த இரதம் சிவனுக்காகச் செதுக்கப்பட்டதைக் காட்டுகின்றது. எனவே, ஒன்றன் மேல் ஒன்றாக மூன்று கருவறைகளை அமைக்கும் வழக்கம் தமிழகத்தில் நரசிம்மப் பல்லவரது காலத்தில் தொடங்குகிறது எனக் கொள்ளலாம்.[65] ஆனால், ஒன்றன் மேல் ஒன்றாக அமைக்கப்பட்ட மூன்று கருவறைகளை திருமாலின் கிடந்த, அமர்ந்த, நின்ற கோலங்களுக்கு அளித்ததை முதன் முதலாக இரண்டாம் நந்திவர்மனால் கட்டப்பட்ட காஞ்சிபுரத்து வைகுண்டப்பெருமாள் கோயிலில் (கி.பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி) தான் காணமுடிகிறது. இக்கோயிலில் ஒன்றன் மேல் ஒன்றாக நான்கு கருவறைகள் அமைந்துள்ளன. இவற்றில் முதல் மூன்று கருவறைகளில் மட்டுமே திருமாலின் உருவங்கள் இடம்பெற்றுள்ளன. நான்காவது கருவறை இறை உருவம் இன்றிக் காணப்படுகிறது. இதனை அடுத்து இவ்வகையான அஷ்டாங்க விமான அமைப்பினை உத்தரமேரூர் சுந்தரவரதப்பெருமாள் கோயிலில் (கி.பி. 805ல்) தண்டிவர்மப் பல்லவனால் கட்டப்பட்டது) காணலாம். இதனை அடுத்து இம்மரபைப் பின்பற்றிச் சோழபாண்டியரும், பாண்டியரும், விசய நகர-நாயக்கரும் அஷ்டாங்க விமானக் கோயில்களைக் கட்டினர் எனலாம்.

இங்கு விளக்கப் பெறுகின்ற கோயில்களில் திருக்கோட்டியூர், கூடலழகர், (பார்க்க : நி.ப. எண். 7) மன்னார்கோயில் ஆகிய கோயில்கள் அஷ்டாங்க விமான அமைப்பைக் கொண்ட கோயில்கள் ஆகும்[66]. இவற்றில் இராசகோபாலசுவாமி கோயில் இராசேந்திரசோழன் காலத்தில் சேர அரசன் இராசசிம்மனால் (கி.பி. 1036 ஆம் ஆண்டு) கட்டப்பட்டது ஆகும்.[67]

திருக்கோட்டியூரில் மூன்று தளங்களிலும் இரண்டிரண்டு திருச்சுற்றுக்கள் இடம்பெறுகின்றன. இவை அனைத்தும் மூடிய திருச்சுற்றுக்களாகும். கூடலழகர் கோயிலிலும் இதே அமைப்புக் காணப்படுகிறது. இராசகோபாலசுவாமி கோயிலில் மட்டும் இத்தகு அமைப்புக் காணப்படவில்லை. இங்கு கீழ்த்தளத்தில் ஒரு திருச்சுற்று[70] உள்ளது. இரண்டாம் தளம் மற்றும் மூன்றாம் தளத்தில் ஒரு திருச்சுற்று இடம்பெற்றுள்ளது. இவற்றில் இரண்டு, மூன்றாம் தளங்களில் திருச்சுற்று மேற்பகுதி மூடப்படாது திறந்தே அமைந்துள்ளது. மேலும், இரண்டாவது, மூன்றாவது தளங்களிலும் அர்த்தமண்டபம் இடம்பெற்றுள்ளது. கூடலழகர், திருக்கோட்டியூர் கோயில்களில் இத்தகு அமைப்பு இடம்பெறவில்லை.

எனவே, அஷ்டாங்க விமான அமைப்பில் திருச்சுற்றுக்களுக்காகவும் கட்டடத்தின் உறுதிக்காகவும் தேவையான இடத்தில் மேலும் சுவர் அமைக்கப்படுகிறது எனக் கொள்ளலாம்.

## இறைவனின் கோலங்கள்

கள ஆய்வின் அடிப்படையில் நோக்கும் போது திருமாலின் நின்ற, அமர்ந்த, கிடந்த கோலங்கள் முறையாக அஷ்டாங்க விமானத்தின் மூன்று தளங்களிலும் அமைக்கப்படவில்லை.

கூடலழகர்கோயிலில் கீழ்த்தளத்தில் அமர்ந்தகோலமும், இரண்டாம் தளத்தில் நின்றகோலமும், மூன்றாம் தளத்தில் கிடந்தகோலமும், திருக்கோட்டியூரில்[71] கீழ்த்தளத்தில் கிடந்தகோலமும், இரண்டாம் தளத்தில் நின்றகோலமும், மூன்றாம் தளத்தில் அமர்ந்தகோலமும், மன்னார்கோயிலில் கீழ்த்தளத்தில் நின்றகோலமும், இரண்டாம் தளத்தில் கிடந்தகோலமும், மூன்றாம் தளத்தில் அமர்ந்தகோலமும் இடம்பெறுகின்றன.

மேற்கண்ட அமைப்பை வைத்துப் பார்க்கின்றபோது திருமாலின் கோலங்கள் ஒவ்வொரு கோயிலிலும் வேறுபட்டே காணப்படுவதால் குறிப்பிட்ட ஒரு அமைப்பே இடம்பெறவேண்டும் எனும் நியதி எதுவும் பின்பற்றப்படவில்லை என்பதை அறியலாம். [72].

கீழ்க்காணும் அட்டவணை இங்கு ஆய்வுக்குட்பட்டுள்ள அஷ்டாங்க விமானக் கோயில்களில் இறையுருவங்கள் அமைந்துள்ள நிலையைக் காட்டுகின்றது.

| தளம் | மதுரை கூடலழகர் கோயில் | திருக் கோட்டியூர் உரகமெல் லணையான் கோயில் | மன்னார் கோயில் இராசகோபால சுவாமிகோயில் | காஞ்சிபுரம் வைகுண்டப் பெருமாள் கோயில் | உத்தர மேரூர் சுந்தரவரதர் கோயில் |
|---|---|---|---|---|---|
| 1ஆம் தளம் | அமர்ந்த | கிடந்த | நின்ற | அமர்ந்த | நின்ற |
| 2ஆம் தளம் | நின்ற | நின்ற | கிடந்த | கிடந்த | அமர்ந்த |
| 3ஆம் தளம் | கிடந்த | அமர்ந்த | அமர்ந்த | நின்ற | கிடந்த |

## அஷ்டாங்க விமானச் சிறப்புக் கூறுகள்

அஷ்டாங்க விமானக் கோயில்கள் அனைத்தும் சாந்தார வகைக் கோயில்களாகும். கோயில் விமானங்கள் மொத்தம் தொண்ணூற்றி ஆறு என்று ஆகம சாத்திரங்கள் கூறுகின்றன.[73] ஒவ்வொரு விமானத்திற்கும் தனித்தனிப் பெயர்கள் உண்டு. ஆனால், அஷ்டாங்க விமானம் என்பது ஆகம சாத்திரங்களில் இடம்பெறவில்லை. கட்டடக்கலையின் அடிப்படையில் வந்த பெயராகும்.

அஷ்டாங்க விமானத்தின் மூன்று தளங்களிலும் விமானத்தின் வெளிச்சுவர்ப் பகுதி மட்டும் அலங்கார அமைப்புக்களுடன்[74] காணப்படும். உட்சுவர்கள் அலங்காரமின்றிக் காணப்படும். ஆனால் திருக்கோட்டியூரில் மட்டும் உட்சுவரிலும் அலங்கார வேலைப்பாடு

இடம்பெற்றுள்ளது. அஷ்டாங்க விமானக் கருவறையின் வெளிச்சுவரில் சாளரங்கள் இடம்பெறும்.

## வடபத்ரசாயி கோயில்

அஷ்டாங்க விமானக் கோயில்கள் எட்டு அங்கங்களைக் கொண்டிருக்கும் என முன்னரே கண்டோம். ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி கோயில் 'ஷடங்க' விமானமாக இன்றி அஷ்டாங்க விமானத்தின் முயற்சி மேற்கொள்ளப்பட்டு நிறைவுறாது முடிக்கப்பட்ட கோயிலாகக் கொள்ளலாம். இக்கோயில் ஆரம்ப காலத்தில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகிய பகுதிகளுடன் விளங்கியுள்ளது. (இக்கருவறையில் தற்போது இலட்சுமிநரசிம்மர் இடம்பெற்றுள்ளார். இச்சிற்பம் பிற்காலத்தில் வைக்கப்பட்டதாகும்) விசயநகரரது ஆட்சிக் காலத்தில் இக்கோயில் கருவறை அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவற்றைச் சுற்றிச் செவ்வக வடிவில் சுவர் எழுப்பப்பட்டு முந்தைய சுவர்கள் மறைக்கப்பட்டுள்ளன. எனவே, தற்பொழுது கீழ்த்தளம் செவ்வக வடிவைப் பெறுகின்றது. இதன் மேற்பகுதியில் மற்றுமோர் தளம் இடம் பெற்றுள்ளது. இத்தளத்தின் கருவறையில்தான் இறைவன் பள்ளி கொண்ட பெருமாளாகக் காட்சிதருகின்றார்.

எனவே, சப்தங்கமாக இவ்விமானம் அமைகின்றது. இப்படி ஒரு அமைப்பு கட்டடக்கலை நூல்களில் கூறப்படவில்லை. எனவே, அஷ்டாங்க முயற்சியில் முடிக்கப்படாது விடுபட்ட ஒன்றாகவே இதனைக் கொள்ளலாம்.

அஷ்டாங்க விமானம் பற்றிய ஆய்வு கீழ்க்காணும் முடிவுகளைத் தருகின்றது. அஷ்டாங்க விமானம் என்பது ஒன்றன் மேல் ஒன்றாக மூன்று கருவறைகளைக் கொண்டிருக்கும். திருச்சுற்றுக்கள் ஒரே எண்ணிக்கையில் இடம்பெற வேண்டியதில்லை. மூன்று தளங்களிலும் திருமாலின் மூன்று கோலங்களும் ஒரே மாதிரிதான் அமைக்கப்பட வேண்டும் என்ற நியதி இல்லை. மாறி மாறியும் அமையலாம்.

## தொகுப்புரை

பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களில் கட்டடக்கலை பற்றி இதுவரை கண்டவற்றிலிருந்து கீழ்க்காணும் முடிவுகள் பெறப்படுகின்றன.

கருவறைகள் சதுரம் மற்றும் வட்டவடிவில் அமையுமானால் பெரும்பான்மையாக அவற்றில் இறைவனின் கோலம் அமர்ந்த மற்றும் நின்ற நிலையே இடம்பெற்றுள்ளன. அஷ்டாங்க விமானக் கோயில்களில் மட்டுமே சதுரவடிவக் கருவறைகளில் கிடந்த கோலமும் இடம்பெறுகின்றது.

செவ்வகக் கருவறைகளில் பொதுவாக திருமாலின் கிடந்த கோலமே காணப்படுகிறது; என்றாலும் மன்னார்கோயில் மற்றும் திருத்தங்கல் கோயில்களின் செவ்வகக் கருவறைகளில் நின்ற கோலம் இடம்பெற்றுள்ளது.

அஷ்டாங்க விமானங்களில் கருவறை அமைப்பு சதுரமாக அமைந்துள்ளன என்றாலும் மன்னார்கோயிலில் மட்டும் செவ்வகமாக அமைந்துள்ளது.

எடுத்துக்கொண்ட கோயில்களில் பெரும்பாலானவை நிரந்தர வகைக் கோயில்களாக விளங்குகின்றன. அஷ்டாங்க விமானக் கோயில்கள் அனைத்தும் சாந்தார வகைக் கோயில்களாக அமைகின்றன.

கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவற்றைச் சுற்றிப் பிரகாரம் அமைப்பது விசயநகர-நாயக்கர் கலைப்பாணியின் ஒரு முக்கியக் கூறாக விளங்குகின்றது.

விசயநகர-நாயக்கரது கோயில்களில் பெரும்பாலும் உபபீடம் காணப்படுகின்றது. ஆய்வுக்குட்பட்ட கோயில்களில் பாதபந்த அதிட்டானம், கபோதபந்த அதிட்டானம், பாதபந்தகபோதபந்த அதிட்டானம் எனும் வர்க்கபேத அதிட்டானம், பிரதிபந்த அதிட்டானம் என நான்கு அதிட்டான அமைப்புக்கள் இடம்பெறுகின்றன.

எடுத்துக்கொண்ட கோயில்களில் பிரநாளம் ஏழு கோயில்களில் மட்டுமே இடம்பெற்றுள்ளது. பெரும்பாலான கோயில்களில் இறையுரு சுதை பூசப்பட்டதாக இருப்பதுவே பிரநாளம் இடம்பெறாமைக்குக் காரணமாக அமைகின்றது.

பிற்காலப்பாண்டியரது கோயிற்கருவறைச் சுவர்களில் அரைத்தூண்கள் சதுர அமைப்பில் இடம்பெறுகின்றன. இவை சதுர கருவறை எனில் பக்கத்திற்கு நான்கு என்றும், செவ்வகக் கருவறை எனில் பின்பக்கம் மட்டும் ஆறு என்ற முறையிலும் அமைகின்றன.

விசயநகர -நாயக்கரது கோயில் கருவறைகளில் அரைத்தூண்கள் அரைவட்டம், சதுரம், எண்பட்டை என்ற அமைப்புக்களில் அமைந்துள்ளன. அரைத்தூண்களின் சதுரப்பகுதியின் மேல் நாகபந்தம் தவறாது இடம்பெற்றுள்ளது.

பிற்காலப்பாண்டியரது கோயில்களில் வெட்டுப்போதிகையும், ஆப்புமுனைப் போதிகையும் இடம்பெற்றுள்ளன. விசயநகர-நாயக்கரது கோயில்களில் மேற்கண்ட போதிகை அமைப்புக்கள் பின்பற்றப் பட்டுள்ளதோடு பெரும்பான்மையான கோயில்களில் மொட்டுப் போதிகையும், பூமுனைப்போதிகையும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பஞ்சரங்கள் சில கோயில்களில் மட்டுமே உள்ளன. அவ்வாறு இடம்பெறும் கோயில்கள் விசயநகர-நாயக்கரது கோயில்களாக உள்ளன. இப்பஞ்சரங்கள் பல்வேறு மடிப்புக்களுடன் வளர்ச்சியடைந்த நிலையில் இடம் பெற்றுள்ளன.

எடுத்துக்கொண்ட கோயில்களில் இடம்பெறும் கோட்ட பஞ்சரங்களில் பல்லவ, சோழர் கோயில்களில் இடம்பெறுவதுபோல் இறையுருவங்கள் இடம்பெறவில்லை. கோட்டபஞ்சரம் தேவகோட்டத்தின் அமைப்பைப் பெற்று விளங்குகிறது.

தேவகோட்டங்களில் பாண்டியரது தேவகோட்டங்கள் போலவே விசயநகர-நாயக்கரது கோயில் தேவகோட்டங்களிலும் இறையுருவம் இடம்பெறவில்லை; என்றாலும் சில கோயில்களில் இறையுரு வைப்பதற்கான பீடம் இடம்பெற்றுள்ளது. சில கோயில்களில் தேவகோட்டத்தில் உள்நோக்கிய பள்ளம் காணப்படுகிறது. ஆழ்வார் திருநகரி, வடபத்ரசாயி கோயில்களின் தேவகோட்டங்களில் மட்டும் புடைப்புருவம் போல் இறையுருவங்கள் சிறுவடிவில் செதுக்கப்பட்டுள்ளன. தேவகோட்டத் தோரணங்களில் மகரதோரணம், பத்ரதோரணம் மட்டும் காணப்படுகின்றன. சித்ரதோரணம் இடம்பெறவில்லை. தாடிக்கொம்பில் மட்டும் சிம்மமுகத்துடன் கூடிய தோரணம் அமைந்துள்ளது. தோரணங்களின் நடுவில் இடம்பெறும் சிறுசிற்பங்களில் தெற்கே தட்சிணாமூர்த்தி / வெண்ணெய்க்கு ஆடும் கண்ணன், மேற்கே நரசிம்மர், வடக்கே பிரம்மன் / இலட்சுமிவராகர் எனும் அமைப்புப் பின்பற்றப்பட்டுள்ளது. சாலை அமைப்புடைய தேவகோட்டத்தில் இடம்பெறும் கபோதத்தின் கீழ்த்தாழ்வார அமைப்பும், கபோதக் கூடுகளில் சிற்றுருவச் சிற்பங்களும் இடம்பெறுகின்றன.

சாளரங்கள் சாந்தாரவகைக் கோயில்களின் கருவறைகளில் இடம் பெறுகின்றன. இச்சாளரங்கள் வடிவவியல் உருவ அமைப்புக்களில் இடம்பெறுவதோடு அவற்றில் சிற்றுருவச் சிற்பங்களும் இடம் பெறுகின்றன.

பிற்காலப் பாண்டியரது கோயில்களின் எழுதகத்தில் பத்மவரிசை, அன்னவரிசை, பூதவரிசை ஆகிய அமைப்புக்கள் இடம்பெறுகின்றன. விசயநகர-நாயக்கரது கோயில்களில் மேற்கண்ட அமைப்பு சில கோயில்களில் பின்பற்றப்பட்டுள்ளது. எனினும், பெரும்பாலான கோயில்களில் வளைந்த கட்டை வரிசை காணப்படுகின்றது.

விசயநகர-நாயக்கரது கோயில் கபோதங்கள்தான் கொடுங்கை அமைப்பைப் பெறுகின்றது. மேலும், கபோதத்தின் கீழ்த்தாழ்வாரக் கட்டை அமைப்பும் இடம்பெறுகின்றது. இவர்களது சில கோயில்களில் கபோதம் சாதாரண அமைப்பிலும் அமைந்துள்ளது.

கபோதக் கூடுகளில் அழகர்கோயில் கூடுகள் மிகப்பெரியன. கூடலழகர் கோயிற் கூடுகளில் இடம்பெறும் சிற்பங்களில் சிம்மத்தின் மேலமர்ந்த திருமால் சிற்பம் அரிதான ஒன்றாக அமைந்துள்ளது.

எடுத்துக்கொண்ட கோயில்களில் யாளிவரிசையில் யாளிகள் முழு உருவத்திலும், பாதி உருவத்திலும் காட்டப்பட்டுள்ளன. சில கோயில்களில் யாளிகளுக்குப் பதிலாக செவ்வகக்கட்டை வரிசை அமைப்பு இடம்பெற்றுள்ளது.

விமான தேவதைகள் மற்றும் கிரீவ கோட்டத்தில் இடம்பெறும் தேவதைகள் ஆகியவற்றின் அமைப்பில் இரண்டுவித அமைப்புக்கள்

பின்பற்றப்பட்டுள்ளன. சில கோயில்களில் தெற்கே-தட்சிணமூர்த்தி, மேற்கே-யோகநரசிம்மர், வடக்கே-பிரம்மன், கிழக்கே-இந்திரன் என்ற அமைப்பும்; சில கோயில்களில் நான்கு திசைகளிலும் திருமால் மற்றும் அவரது அவதார உருவங்கள் எனும் அமைப்பும் இடம் பெற்றுள்ளன. இவற்றில் இரண்டாம் அமைப்பு விசயநகர-நாயக்கரது கோயில்களில் பெரும்பாலும் இடம்பெற்றிருப்பதால் இவ்வமைப்பு பிற்காலத்தில் தோன்றியதாகக் கருதலாம்.

கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் கருடனும், சிம்மங்களும் தவறாது அமைக்கப்பட்டுள்ளன.

சிகரமானது வட்டம், சதுரம், எண்பட்டை என அமையுமானால் மகாநாசிகள் நான்கும், சிறுநாசிகள் நான்கும் அமைந்துள்ளன. பெரும்பான்மையாக சிகரமானது சதுரம், வட்டம் எனில் நான்கு மகாநாசிகளும், சாலை வடிவ சிகரம் எனில் இரண்டு மகாநாசிகளும் இடம்பெறுகின்றன.

பெரும்பாலான கோயில்களில் தங்கமுலாம் பூசப்பட்ட கலசங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

எடுத்துக் கொண்ட கோயில்களில் மூன்று கோயில்களில் மட்டும் அஷ்டாங்க விமானம் இடம் பெற்றுள்ளது. அஷ்டாங்க விமானம் என்பது ஒன்றன் மேல் ஒன்றாக மூன்று கருவறைகளை அமைப்பது என வரையறை செய்யலாம். மேலும், இக்கருவறைகளைச் சுற்றி கீழ்த்தளத்தில் மூடிய திருச்சுற்றுக்களும், மேல்தளங்களில் மூடிய அல்லது திறந்தவெளித் திருச்சுற்றுக்களும் அமைகின்றன. இக்கருவறைகளில் திருமாலின் கிடந்த, இருந்த, நின்ற கோலங்கள் மாறிமாறி இடம்பெறுகின்றன.

## அடிக்குறிப்புக்கள்

1. தரை அமைப்பைப் பொருத்தவரை சதுரம், நீள்சதுரம், வட்டம் என்ற மூன்று அமைப்புகளைத் தவிர அரைவட்டத்தரை அமைப்பும் உண்டு. இதனை கஜபிருஷ்ட அமைப்பு என்பர். இத்தகு அமைப்பு பாண்டிய நாட்டுக் கோயில் கட்டடக்கலையில் பயன்படுத்தப்படவில்லை. இது பல்லவரதங்களில் ஒன்றான நகுலசகாதேவ இரத அமைப்பை யொத்ததாகும்.
2. திருக்கோட்டியூர் உரகமெல்லணையான் கோயில் அஷ்டாங்க விமானக் கோயில் என்பதால் கூத்தாடிய, கிடந்த, நின்ற, இருந்த என்ற நான்கு கோலங்கள் இடம்பெறுகின்றன. இருப்பினும் இங்கு முதலாவது கருவறைப் பகுதியைக் கருவறையாகக் கொள்ளாது, இரண்டாம் கருவறையே எடுத்துக் கொள்ளப்படுகிறது. இதற்கான விளக்கத்தை அஷ்டாங்க விமானப் பகுதியில் மேலும் விரிவாகக் காணலாம்.
3. கூடலழகர் கோயில் அஷ்டாங்க விமானம் என்பதால் இருந்த, நின்ற, கிடந்த கோலங்கள் மூன்று கருவறைகளில் இடம் பெறுகின்றன. இருப்பினும் இங்கு ஒப்பிட்டு ஆய்விற்காக கீழே உள்ள கருவறை மட்டும் எடுத்துக் கொள்ளப்படுகிறது.

4. வடபத்ரசாயி கோயில் முதலில் சதுரமாக இருந்து பின்னர் செவ்வகமாக மாற்றப்பட்டுள்ளது. முதலில் உள்ள சதுரக்கருவறையில் இலட்சுமி நரசிம்மன் இடம்பெற்றுள்ளார். பின்னர், இக்கருவறையைச் சுற்றி விரிவுபடுத்தி செவ்வகமாக்கி இரண்டாம் தளம் அமைக்கப்பட்டு அதில் சயனக்கோல திருமால் இடம்பெற்றுள்ளார். இங்கு இரண்டாம் தளம் மட்டும் எடுத்துக் கொள்ளப்படுகிறது.

5. மன்னார் கோயில் அஷ்டாங்க விமானமாதலின் இங்கு இறையுறு நின்ற, அமர்ந்த, கிடந்த என்ற மூன்று வடிவங்களில் இடம் பெற்றுள்ளது. எனினும், இங்கு முதல் தளத்தில் உள்ள நின்ற கோலம் மட்டும் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

6. பள்ளிப்படைக் கோயில் என்பது மறைந்து போன அரசனின் நினைவிடத்தின் மீது கட்டப்படுவதாகும்.
உதாரணம் : 1) மேல்பாடியிலுள்ள அரிஞ்சிகை ஈசுவரர் கோயில்
2) பள்ளிமடம் - சுந்தரபாண்டிய ஈசுவரமுடையார் கோயில்.

7. K.R.Srinivasan, **Temples of South India**, p.89.

8. W. Micheal Meister, ed., **Encyclopaedia of Indian Temple Architecture, South India, Lower Dravidadesa**, p.61.

9. Ibid., p. 232.

10. Ibid., p.418.

11. Ibid., p.113, fig. 55.

12. Ibid., p.164, fig. 81.

13. Ibid., p.307, fig 1/4.

14. 1. அதிட்டானம் - பாதம்
2. பித்தி - கால்
3. பிரஸ்தரம் - தோள்
4. கிரீவம் - கழுத்து
5. சிகரம் - தலை
6. கலசம் - முடி

15. ஆர்.வெங்கட்ராமன், இந்தியக் கோயில் கட்டடக்கலை வரலாறு, ப.107.

16. P.K. Archarya, **"A Dictionary of Hindu Architecture"**, Manasara Series, Vol. I, p.20

17. 1. பாதபந்த அதிட்டானம் 2. உரகபந்த அதிட்டானம்
3. பிரதி பந்த அதிட்டானம் 4. குமுதபந்த அதிட்டானம்
5. பத்ம சேகர அதிட்டானம் 6. புஷ்பபுஷ்கல அதிட்டானம்
7. ஸ்ரீபந்த அதிட்டானம் 8. மச்சபந்த அதிட்டானம்
9. ஸ்ரெணிபந்த அதிட்டானம் 10. பத்மபந்த அதிட்டானம்
11. கும்பபந்த அதிட்டானம் 12. வப்ரபந்த அதிட்டானம்
13. வஜ்ரபந்த அதிட்டானம் 14. ஸ்ரீபோக அதிட்டானம்
15. ரத்னபந்த அதிட்டானம் 16. பட்டபந்த அதிட்டானம்
17. காக்ஸபந்த அதிட்டானம் 18. கம்பபந்த அதிட்டானம்

18. W. Micheal Meister ed., **"Encyclopaedia of Indian Temple Architecture"**, **South India, Lower Dravidadesa** – true.
19. Ibid., p.150.
20. Ibid., p.158.
21. Ibid., p.310.
22. Ibid., p.262.
23. பிரநாளமானது நாளம், கோமுகை, சோமசூத்திரம் என்று பல பெயர்பெறும்.
24. Bettina Beumer Ed., **"Rupa Prathi Rupa"** Alice Boner Commemoration Vol., 1982, p.146.
25. மேலது, ப.121.
26. உதாரணம் திருப்பரங்குன்றம் குடைவரைக்கோயில் (கி.பி. 778). பல்லவர் குடைவரைகளில் பிரநாளம் இடம் பெறவில்லை. காரணம் அவர்கள் இறையுருவைக்கல்லில் செய்யாது மரத்தினாலோ சுதையினாலோ செய்ததனால் அங்குத் திருமஞ்சனம் நடைபெறவில்லை. எனவே, பிரநாளம் இடம் பெறவில்லை.
27. K.R.Srinivasan, p.121.
28. கள ஆய்வு, இப்பிரநாளம் வைக்கப்பட்ட போது இந்நூலின் ஆசிரியர் உடனிருந்தார். மேலும், சுதை நீக்கப்பட்ட இறை யுருவத்தை அஷ்ட பந்தன அபிஷேகத்திற்கு முன் ஆசிரியர் நேரில் கண்டார்.
29. S.K.Maity, **"Master Pieces of Pallava Art.,"** pl.8.
30. உதாரணமாகத் தொண்டை மண்டலத்தில் பிரம்மதேசம் கோயிலையும் (9 ஆம் நூற்றாண்டு) சோழ நாட்டில் புள்ளமங்கைக் கோயிலையும் (10 ஆம் நூற்றாண்டு) நாகப்பட்டினம் காய ரோகணம் கோயிலையும் (11 ஆம் நூற்றாண்டு) கூறலாம்.
31. Joveau Dubreuil, **"Dravidian Architecutre"**, Reprint, New Delhi, 1987.
32. Suresh B. Pillai, **"Introduction to the Study of Temple Art"**, p.38.
33. கே.எஸ்.சுப்ரமணிய சாஸ்திரி (மொ.ஆ) "மயமதம்" ப.70.
34. ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி கோயிலின் கருவறை செவ்வக அமைப்பில் உள்ளதால் மேற்குச் சுவரில் இரண்டு தேவ கோட்டங்கள் இடம்பெற்றுள்ளன. மேலும், இங்கு இடம் பெற்றுள்ள தேவகோட்டச் சிற்பங்கள் சோழர்காலத்துச் சிற்பங்கள் போல அல்லாது சிறு சிற்பங்களாக இடம்பெற்றுள்ளன.
35. பத்ர தோரணம் இலை வடிவிலானது.
    சித்ர தோரணம் பறவை வடிவிலானது
    மகர தோரணம் மீன்களுடன் கூடியது.
36. தாடிக்கொம்பு கோயிலில் தேவகோட்டத்தின் மேல் தோரணமானது மேற்கண்ட மூன்று அமைப்புக்களில் அமையாது கூடு (Kudu) தோரண அமைப்பில் இடம் பெற்றுள்ளது.
37. N.Nagaraju, **"Buddhist Architecture of Western India"**, p.84.
    (Bhaja cave No.13, Kondane 9, Nasik, 19, Pitalkhora, 4, 1st cent. B.C.)

38. J.C. Harle, "The Art and Architecture of Indian Sub-continent", (Rep.1990) p.111
39. C.Sivaramamurti, "Art of India," p.52
40. உதாரணமாக மகாபலிபுரத்தில் உள்ள வராக மண்டபத்தைக் கூறலாம்.
41. உதாரணமாக திருச்சி கீழ்க்குடைவரைக் கோயிலைக் கூறலாம்.
42. ஆனால் இவற்றிற்கான துவக்கத்தை கி.பி. 5-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அஜந்தா 19 வது குகையின் முகப்பில் (Facade) காணலாம்.
43. Micheal W. Meister, ed., p.396.
44. K.R.Srinivasan, pl.2.
45. Micheal W.Meister, ed., p.218.
46. Ibid., p.239.
47. Ibid., p.202.
48. கூடலழகர் கோயிலில் அரைத்தூண்களுடைய கால்பகுதி மற்றும் தேவகோட்ட, கோட்டபஞ்சர அரைத்தூண்களின் கால்பகுதி ஆகிய இடங்களில் சிம்மங்கள் இடம்பெற்றுள்ளன. யாளிவரிசையின் மூலைகளிலும் மகரங்களுக்குப் பதிலாக சிம்மங்கள் இடம்பெற்றுள்ளன. மேலும், கூடுகளில் இடம்பெறும் சிற்பங்களில் திருமால் சிங்கத்தில் அமர்ந்த நிலையில் காட்டப்பட்டுள்ளார். எனவே, கூடலழகர் கோயில் அதிக அளவில் சிம்மத்துடன் தொடர்பு படுத்தப்பட்டதை அறியமுடிகிறது. சிம்மம் திருமாலோடு தொடர்புபடுத்தப்படுவதற்கான காரணங்கள் ஆய்வுக்குரியனவாகும்".
49. உதாரணமாகப் பல்லவரது காஞ்சி வைகுண்டப்பெருமாள் கோயிலைக் கூறலாம். இது அஷ்டாங்க விமானக் கோயிலாகும்.
50. எழுதகம், கபோதம், யாளிவரி ஆகிய மூன்றும் சேர்ந்த பகுதியே பிரஸ்தரமாகும். இது தோள் எனப்படும்.
51. Micheal W.Meister ed, p.405.
52. ஆர். வெங்கட்ராமன், ப.109.
53. மேலது. ப.150.
54. P.R.Srinivasan, **'Temple Art and Architecture in India"** (Tamil), p.36.
55. K.R.Srinivasan, **Temples of south India,** p.87.
56. ஆர்.வெங்கட்ராமன் ப.148.
57. P.V.Jagadisa Iyyar, **'South Indian Shrinives'**, p.14.
58. Suresh B.Pillai, p.46.
59. K.R.Srinivasan, p.86.
60. ஆர். வெங்கட்ராமன், ப. 109.
61. இரா. நாகசாமி, கல்லும் சொல்லும், ப.161.
62. அரங்கராசன், கும்பாபிஷேகமலர். அருள்மிகு கூடலழகர் கோயில், மதுரை, ப.25.
63. பேட்டி : சுந்தரசீனிவாசன், கூடலழகர் கோயில் அர்ச்சகர், நாள் : 10.10.94.
64. P.R.Srinivasan, p.65

65. தருமராச இரதத்தின் இரண்டாம் கருவறையின் கிழக்குப்பக்கம் உள்ள கல்வெட்டுக்களை வைத்து இந்த இரதம் நரசிம்மப் பல்லவனால் வெட்டப்பட்டது என்பதும், மூன்றாவது தளத்தில் உள்ள கல்வெட்டினை வைத்துப் பார்க்கின்ற போது மூன்றாவது தளத்தைச் செதுக்கி உள்ளே சோமாசுகந்தரது புடைப்புச் சிற்பத்தை இடம்பெறச்செய்தது. பரமேசுவரவர்மன் எனக் கருதலாம் என்பர் கே.ஆர்.சீனிவாசன் (ப.102) இங்கு தர்மராச இரதத்தை நிரசிம்மப் பல்லவன் வெட்டுவித்ததால் அவனது காலமாகக் கொள்ளப்படுகிறது.

66. பாண்டிய நாட்டில் சேரன்மாதேவியில் உள்ள இராமசாமி கோயில் அஷ்டாங்க விமானக் கோயிலே ஆகும். ஆனால், இக்கோயில் இவ்வாய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை.

67. A.R.E. No.112 of 1905.

68. A.R.E. No.556, 557 of 1911.

69. K.R.Srinivasan, p.118.

70. கீழ்த்தளத்தில் ஒரு திருச்சுற்று மட்டுமே காணப்படுவதால் இக்கோயில் கட்டப்பட்ட காலத்தில் அஷ்டாங்க விமானக் கோயிலாக இல்லாதிருந்து பின்னர், விசயநகரநாயக்கர் காலத்தில் அஷ்டாங்க விமானமாக மாற்றப்பட்டிருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது.

71. திருக்கோட்டியூரில் பிற அஷ்டாங்க விமானக் கோயில்களைப் போலன்றி கீழே ஒரு சதுரமான தளம் இடம்பெறுகிறது. இதில் கருவறை இடம்பெறவில்லை. இக்கீழ்த்தளத்தின் மூன்று பக்கங்களிலும் மூன்று தேவகோட்டங்கள் இடம்பெறுகின்றன. மேற்குப்பக்கம் தேவகோட்டம் இல்லை) அவற்றில் முறையே தெற்கே நரசிங்கப்பெருமாளும் , வடக்கே இராமர், இலக்குவன், சிதை அனுமன் ஆகியோரும், கிழக்கே வெண்ணெய்க்கு ஆடும், கண்ணனும் இடம்பெறுகின்றனர். இத்தேவகோட்டங்கள் பிற தேவகோட்டங்கள் போலல்லாது கருவறை அமைப்பில் காணப்படுகின்றன. கிழக்குப்பக்க தேவகோட்டங்களில் உள்ள கூத்தாடும் கண்ணனைச் சேர்ந்து இங்கு திருமாலின் நான்கு கோலங்களை ஒன்றின் மேல் ஒன்றாக அமைந்துள்ள கருவறைகளில் அமைத்துள்ளனர். இக்கருத்துப் பொருத்தமுடையதாக இல்லை. இக்கோயிலின் கீழ்த்தளமும் அதில் உள்ள கூத்தாடும் கண்ணனின் கோலமும் இங்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை.

72. காஞ்சி வைகுந்தப்பெருமாள் கோயிலில் கீழ்த்தளத்தில் அமர்ந்த கோலம், இரண்டாம் தளத்தில் கிடந்த கோலம் மூன்றம் தளத்தில் நின்ற கோலம் என இடம்பெறுகிறது. மேலும், உத்தரமேரூர் சுந்தரவரதர் கோயிலில் கீழ்தளத்தில் நின்ற கோலமும், இடம் பெறுகின்றன. எனவே, தமிழகத்திலுள்ள மேற்கண்ட அஷ்டாங்க விமானம் கோயில்களில் திருமாலின் மூன்று கோலங்களும் மாறி மாறியே இடம்பெறுகின்றன.

73. "கும்பாபிஷேக மலர்" அருள்மிகு கூடலழகர் கோயில், மதுரை, அ.ப.35.

74. முதல் தளத்தில் உறுப்புகள் அலங்கரிக்கப்பட்டும், இரண்டு மற்றும் மூன்றாம் தளங்களில் சுதையினாலான அலங்கரத்துடனும் காணப்படும்.

4

# சிற்பக்கலை

மனிதனின் சமயம் சார்ந்த எண்ணங்களின் கற்பனைப் படைப்பே இன்றைய கடவுள் உருவங்கள். மனிதன் தனது சமயம் சார்ந்த எண்ணங்களுக்கு ஒரு வடிவம் காண நினைத்தான். அதன் விளைவாக இறையுருவங்கள் உருவாயின. இந்தியாவில் சிந்து சமவெளி நாகரிக காலத்திலேயே இறையுருவங்கள் இருந்துள்ளன. ஆனால், அவற்றில் சமயச்சார்பு தெரியவில்லை. புராண காலத்தில்தான் இறைவனது வீரதீரச் சாகசங்கள் பற்றிய கதைகள் அதிகமாகத் தோன்றிருக்க வேண்டும். எனவே, புராண காலத்திற்குப்பின் படைக்கப்பட்ட சிற்பங்களும் புராண காலத்தில் கூறப்பட்ட இறைவனின் வீரதீரச் சாகசங்களைப் பிரதிபலிப்பதாக அமைந்தன. எனவே, புராண இதிகாசச் சிற்பங்கள் தோன்றின.

இறையுருவங்கள் பொதுவாக ஏதேனும் ஒரு சமயக்கருத்தை மையமாக வைத்து அமைக்கப்பெறும். பெரும்பாலான சிற்ப அமைதிகளில் குறியீட்டு நிலையில் மற்றுமோர் உட்கருத்து அமைந்திருக்கும் அல்லது அச்சிற்ப அமைதி புதியதொரு கருத்துருவாக்கத்திற்கு இடமளிப்பதாக இருக்கும்.

சிற்பங்கள் ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒவ்வொரு விதமான அலங்காரங்களையும் வளர்ச்சியையும் கொண்டு விளங்கிவந்துள்ளன. தமிழகத்தைப் பொருத்த அளவில் சிற்ப அமைதியை அதன் அமைப்பை வைத்துப் பல்லவர்காலச் சிற்பவமைதி, சோழர்காலச் சிற்பவமைதி, முற்காலப் பாண்டியர்காலச் சிற்பவமைதி. சோழ-பாண்டியர் காலச் சிற்பவமைதி, பிற்காலப்பாண்டியர் காலச் சிற்பவமைதி, விசயநகர-நாயக்கர்காலச் சிற்பவமைதி எனப் பாகுபடுத்தலாம். ஆயினும், இவற்றின் அடிப்படை அமைப்புகளில் எந்த மாற்றமும் இல்லை. அலங்காரங்களிலும் உருவ அமைப்புகளிலுமே தொடர்ந்து மாற்றங்கள் செய்யப்பட்டு வந்துள்ளன. அக்காலச் சமுதாயத்தையும், பண்பாட்டுக் கூறுகளையும் கருத்தில் கொண்டே இம்மாற்றங்கள் செய்யப்பட்டிருக்க வேண்டும்.

இந்நூலில் இடம்பெறும் கோயில்களின் சிற்பங்களில் பெரும்பான்மையானவை விசயநகர-நாயக்கர் காலத்தைச் சேர்ந்தவை சில கோயில்கள் சோழபாண்டியர் [2] காலத்தில் கட்டப்பட்டிருந்தாலும் அவை பின்னாளில் விசயநகர-நாயக்கரால் விரிவுப்படுத்தப்பட்டன

இங்கு விசயநகர-நாயக்கர் காலத்தில் ஏற்பட்ட அமைப்புக்களே எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. எனவே, விசயநகர- நாயக்கரது கலைப்பாணி மட்டும் இவ்வியலில் விவரிக்கப்படுகிறது.

மேலும், இவ்வியலில் நான்கு வகைகளில் சிற்பங்கள் பாகுபடுத்தப்பட்டு அவை ஒப்பீட்டு ஆராயப்படுகின்றன. அவை

I. கருவறை மூலவர் சிற்பங்கள்.

II. மண்டபத்தூண் சிற்பங்கள்.

III. விமானச் சிற்பங்கள்.

IV. கோபுரச் சிற்பங்கள் என்பன

## I. கருவறை மூலவர் சிற்பங்கள்

குடைவரைக் கோயிற் கருவறையில் இடம்பெறும் மூலவர் சிற்பங்கள் பற்றி 'குடைவரைக் கோயில்கள்' எனும் இயலில் விளக்கப்பட்டுள்ளது. கட்டுமானக் கோயில்களின் கருவறையில் இடம்பெறும் மூலவர் சிற்பவமைதி பற்றி மட்டும் இங்கு விளக்கப்படுகிறது.

இங்கு விளக்கப்பெறும் கோயில்கள் வைணவக் கோயில்கள் என்பதால் இக்கோயில்களின் கருவறைகளில் திருமாலின் நின்ற, இருந்த, கிடந்த கோலங்கள் இடம்பெற்றுள்ளன. எந்தெந்தக் கோயில்களில் முறையே நின்ற, இருந்த, கிடந்த கோலங்கள் அமைந்துள்ளன என்பது பற்றிய செய்திகளும், அஷ்டாங்க விமானக் கோயில்களின் மூன்று தளங்களிலும் திருமாலின் கோலங்கள் இடம் பெற்றுள்ள விதமும் 'கட்டடக்கலை' இயலில் விளக்கப்பட்டுள்ளன. எனவே, இங்கு மூலவர் சிற்பமானது தேவியருடனோ, தனித்தோ இடம்பெறும் விதம் மற்றும் மூலவர் சிற்பத்தில் இடம் பெறும் ஆயுதங்கள் பற்றி மட்டும் விளக்கப்படுகிறது.

மேற்காணும் கோயில்களில் திருக்குறுங்குடி, ஸ்ரீவைகுண்டம், தென்திருப்பேரை, ஆழ்வார்திருநகரி, அழகர்கோயில், திருமோகூர், திருமெய்யம் ஆகிய கோயில்களில் திருமால் தனியாக இடம் பெற்றுள்ளார். நாங்குனேரி, வரகுணமங்கை, திருப்புளியங்குடி, தொலைவில்லிமங்கலம் - ஸ்ரீநிவாசன், பெருங்குளம், திருக்கோளூர், கூடலழகர், திருப்புல்லாணி, திருக்கோட்டியூர், தாடிக்கொம்பு, கிருஷ்ணாபுரம் ஆகிய கோயில்களில் ஸ்ரீதேவி, பூதேவியுடன் காணப்படுகிறார். தொலைவில்லிமங்கலம்-அரவிந்தலோசனன் கோயிலில் கருந்தடங்கண்ணி என்ற தேவியுடனும், ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி கோயிலில் ஆண்டாளுடனும் காட்சியளிக்கிறார். திருத்தங்கலில் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி, ஜாம்பவதி என நான்கு தேவியருடன் காட்சிதருகிறார்.

கருவறையில் இடம்பெறும் திருமாலின் மூலவர் சிற்பம் நான்கு கரங்களுடன் காட்டப்படுகிறது. இதில் மேலிருகரங்கள் சங்கு, சக்கரம்

ஏந்தியும் கீழிருகரங்கள் அபய, வரத முத்திரையும் கொண்டு விளங்குகின்றன. திருமோகூரில் கீழிருகரங்களில் வலதுகை வரத முத்திரையுடனும், இடது கை கதையுடனும் காணப்படுகிறது. அழகர் கோயிலில் பஞ்ச ஆயுதங்களும் இடம்பெற்றுள்ளன. ஆண்டாள் கோயிலில் இடது கையில் வில்லும், வலது கையில் அம்பும் கொண்டு விளங்குகிறார்.

கருவறை மூலவர் பற்றிய புகைப்படம் எடுக்கவோ, மூலவர் மேல் சாத்தப்பட்டிருக்கும் துணி முதலான பொருட்களை விலக்கி மூலவர் உருவத்தைப் பார்க்கவோ, கருவறைக்குள் செல்லவோ இந்து சமய அறநிலையத்துறை அனுமதித்திருந்தால் மூலவர் சிற்பவமைதி பற்றி இன்னும் முழுமையாக விளக்கலாம்.

## II. மண்டபத்தூண் சிற்பங்கள்

விசயநகர-நாயக்கர் காலமானது இந்து சமயத்தின் எழுச்சிக் காலமாகும். எனவே, இவர்களது காலத்தில் அதிக அளவில் இந்து சமய விழாக்கள் தொடங்கப்பட்டு வெகுவிமரிசையாக மன்னர்களாலும் மக்களாலும் கொண்டாடப்பட்டுள்ளன. இவ்விழாக்களில் முக்கிய மானவை கிருஷ்ண ஜெயந்தி, ராமநவமி, சிவராத்திரி, தீபாவளி நவராத்திரி, ஹோலிப் பண்டிகை, தைப்பூசம், சித்திரைத் திருவிழா வசந்தோற்சவம், தெப்பத்திருவிழா, தேர்த்திருவிழா, திருமண விழா என்பன. இவற்றில் சில விழாக்கள் முன்னமே நடைபெற்று கொண்டிருந்திருக்கலாம். ஆனால், அவை பிரசித்தி பெற்றது இக்காலத்தில்தான் எனத் தெரிகின்றது.

இவற்றில் பெரும்பான்மையான விழாக்கள் கோயில்களோடு தொடர்புடையதாக இருந்தமையால் விழாக்கள் கோயில்களில் கொண்டாடப்பட்டன. விழாக்களின் வருகையினால் கோயில்கள் புதிய கட்டடப்பகுதிகளைக் கொண்டு விரிவாக்கப்பட்டிருக்க வேண்டும் இதன் காரணமாகவே மண்டபங்கள் தோன்றியிருக்க வேண்டும் விழாக்களுக்கான மண்டபங்கள் தவிர இதிகாச, புரணாக் கதைகளை கூறுவதற்கும் தனிமண்டபங்கள் நிர்மாணிக்கப் பட்டிருப்பதை இன்று காணலாம். அவை நாடகமேடைகள் போன்று அக்காலத்தில் இயங்கியிருக்க வேண்டும்.

விழாக்கள் நடத்தும் போது மக்கள் கூடும்பொருட்டு மண்டபங்களின் தேவை ஏற்பட்டதால் ஆயிரங்கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம் கல்யாண மண்டபம், வசந்த மண்டபம், ஊஞ்சல் மண்டபம், கிளி மண்டபம், நீராளி மண்டபம், இராப்பத்து மண்டபம், பகற்பத்து மண்டபம், முதலியவை எழுந்தன எனக் கருத வாய்ப்புள்ளது.

கோயில்களில் இவ்வகையான மண்டபங்கள் திருவிழா பயன்பாட்டிற்காகக் கட்டப்பட்டாலும் அவை எளிமையாக இன்றி

தூண்களோடு கூடிய பெரிய சிற்பங்களால் அலங்கரிக்கப்பட்டன. மண்டபச் சிற்பங்களில் பெரும்பாலும் இதிகாச, புராணக் காட்சிகள் இறைவன், இறைவியரின் சாகசக் காட்சிகள் மற்றும் யாளிகள், மண்டபங்களை உருவாக்கிய புரவலர்களின் உருவங்கள் ஆகியவை இடம்பெற்றுள்ளன.

## மண்டபங்களின் அமைப்பு

இம்மண்டபங்கள் பெரும்பாலும் செவ்வகவடிவத் தரை அமைப்பைக் கொண்டிருக்கும். மேலும், மண்டபத்தின் இறுதியில் இறையுரு வைப்பதற்கான குறடு இடம்பெற்றிருக்கும். இக்குறட்டினுடைய விதானம் தட்டையாக இருந்தாலும் சில மண்டபங்களில் இக்குறட்டியின் மேல் மரத்தினாலான சிகர அமைப்பு இடம் பெற்றிருக்கும். இவ்வமைப்பினால் குறடு ஒரு சிறு கோயில்போல வடிவம் பெறுகின்றது. இக்குறட்டின் தெளிவான அமைப்பினை அழகர்கோயிலில் உள்ள கல்யாண மண்டபத்தில் காணலாம்.

கோயில் விழாக்கள்; இறைவன் இறைவியினுடைய திருமணம் முதலியவை இக்குறட்டில்தான் பெரும்பாலும் நடைபெறும்.

## கோயில்களும் மண்டபங்களின் பெயர்களும்

இங்கு ஆய்வுக்குட்பட்டிருக்கும் கோயில்களில் பதினொரு கோயில்களில் மண்டபச் சிற்பங்கள் இடம்பெறுகின்றன. அக்கோயில்களும் அவற்றில் இடம்பெறும் சிற்பங்களுடன் கூடிய மண்டபங்களின் பெயர்களும் இங்குத் தரப்படுகின்றன. அவை

1. அழகர்கோயில் – கல்யாண மண்டபம்
2. தாடிக்கொம்பு – இரங்க மண்டபம்
3. திருமோகூர் – கருட மண்டபம்
4. ஆண்டாள்கோயில் – கருட மண்டபம்
5. நாங்குனேரி – வீரப்பநாயக்கர் மண்டபம்
6. திருக்குறுங்குடி – வீரப்பநாயக்கர் மண்டபம், இரதி மண்டபம்
7. கிருஷ்ணாபுரம் – வீரப்பநாயக்கர் மண்டபம், யாளி மண்டபம்
8. ஸ்ரீவைகுண்டம் – திருவேங்கடநாதன் மண்டபம்
9. ஆழ்வார்திருநகரி – நம்மாழ்வார் கோயில் முகமண்டபம்
10. மன்னார்கோயில் – இராமானுசர் கோயில் மகா மண்டபம்
11. திருமெய்யம் – முகமண்டபம்

ஆகியனவாகும். மேற்கண்ட மண்டபங்களில் இடம்பெறும் சிற்பங்களை

1. இதிகாசச் சிற்பங்கள்
2. விஷ்ணு மற்றும் அவதாரச் சிற்பங்கள்
3. புராணச் சிற்பங்கள்
4. நாட்டார் வழக்காற்றியல் சிற்பங்கள்
5. பிற சிற்பங்கள்

என்ற ஐந்து தலைப்புகளின் கீழ்ப் பிரித்துப் பார்க்கலாம்.

இம்மண்டபங்களில் இடம்பெறும் சிற்பங்களின் அமைப்பு முறை, சிற்பங்களில் இடம்பெறும் ரசம் மற்றும் தொனி, சிற்பங்களின் ஆடை மற்றும் அணிகலன்கள் ஆகியவை பற்றியும் காணலாம்.

## 1. இதிகாசச் சிற்பங்கள்

இதிகாசங்களே காலத்தால் முற்பட்டது என்பதால் அவை தொடர்பான சிற்பங்கள் பற்றி முதலில் காணலாம். இதிகாசத்தில் ஒன்றான இராமாயணத்தின் நாயகனான இராமன் பின்னர் எழுந்த திருமாலின் பத்து அவதாரங்களில் ஒன்றாக இடம்பெற்றாலும் இராமனது சிற்பம் தொடர்பான செய்திகள் இதிகாசச் சிற்பங்கள் எனும் இப்பகுதியிலேயே விளக்கப்படுகிறது. இறைவனாயிருப்பினும் மனிதவுருவெடுத்து ஒரு மாமனிதன் எப்படியிருக்க வேண்டும் என்பதற்கு இராமன் ஓர் சிறந்த எடுத்துக்காட்டுப் பாத்திரமாக இருந்ததால் வைப்பு முறையில் முதலில் இராமாயணச் சிற்பங்களும். அதனை அடுத்து மகாபாரதச் சிற்பங்களும் இடம்பெறுகின்றன. .

இதிகாசங்கள் காலங்காலமாக மக்களின் மத்தியில் செல்வாக்குப் பெற்றுவந்தவை. எனவே, இவ்விதங்களில் வரும் திருமாலின் அவதாரங்களாகக் கொள்ளப்படும் இராமனும் கிருஷ்ணனும் வைணவ வழிபாட்டில் அதிகச் செல்வாக்கும் பெற்றனர். இவர்களுக்கென தனிக் கோயில்கள் தோன்றின. விசயநகர-நாயக்கர்கால மண்டபங்களின் தூண் சிற்பங்களிலும் இவர்களது சிற்பங்கள் இன்றியமையாத இடத்தைப்பெற்றன.

### அ. இராமாயணச் சிற்பங்கள்

விசயநகர-நாயக்கர் கால மண்டபங்களில் இராமாயணம் தொடர்பாக கீழ்க்காணும் முக்கியமான பாத்திரங்கள் சிற்பங்களாக இடம் பெறுகின்றன.

| | | |
|---|---|---|
| 1. இராமன் | 2. இலக்குவன் | 3. சீதை |
| 4. அனுமன் | 5. பரதன் | 6. வாலி |
| 7. சுக்ரீவன் | 8. குகன் | 9. சத்ருக்னன் |

## 1. இராமன்

விசயநகர-நாயக்கர் கால மண்டபங்களில் இடம்பெறும் இராமாயணச் சிற்பங்களில் அதிகமாக இடம்பெற்றிருக்கும் சிற்பம் இராமனது சிற்பம் ஆகும். இராமன் தனித்தும், இலக்குவன், சீதை, அனுமன் ஆகியோருடன் சேர்ந்தும் சிற்பங்களில் காட்டப்பட்டுள்ளான். ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில், நாங்குனேரி, ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி, தாடிக்கொம்பு, மன்னார்கோயில், திருமோகூர் ஆகிய கோயில் மண்டபங்களில் இராமனது சிற்பம் இடம்பெற்றுள்ளது. இதைத்தவிர திருமெய்யம் மற்றும் தென்திருப்பேரைக் கோயில்களின் தூண்களில் இராமனது சிற்பம் இடம்பெற்றிருப்பினும் அது மண்டபச்சிற்பங்கள் எனும் அமைப்பில் இடம்பெறவில்லையாதலால் இங்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை.

மேற்கண்ட கோயில்களில் ஸ்ரீவில்லிபுத்தூரில் மட்டும் இராமன் தனித்துக் காட்டப்பட்டுள்ளான். இராமனது கைகளில் வில், அம்பு இடம் பெறுவதோடு முறுக்கிய மீசையுடன் காட்டப்பட்டுள்ளான். பொதுவாக இராமனது சிற்பம் மீசை இன்றிக் காட்டப்படும். இங்கு இராமனது கைகளில் வில், அம்புடன் காட்டப்பட்டுள்ளதும், முறுக்கிய மீசை இடம் பெற்றிருப்பதும் சத்திரிய வம்சத்தைச் சேர்ந்த இராமன் அசுரவதைக்காகப் போர்க்கோலம் பூண்டதைக் காட்டுகிறது.

தாடிக்கொம்பில் அனுமனது தோள் மீது இராமன் அமர்ந்து போருக்குக் கிளம்புவது போல அமைக்கப்பட்டுள்ளது. (பார்க்க நி.ப.எண் : 9) இதில் இராமனது திருவடி இரண்டையும் அனுமன் கையில் ஏந்தியபடி, கால்களை முன்னும், பின்னுமாக வைத்திருக்கும் அனுமனது நிலை பறப்பதுபோல் உள்ளது. இராமனது இடக்கரத்தில் வில் இடம்பெறுகிறது. வலக்கரத்தின் அமைப்பானது தனக்குப் பின்பக்கம் இருக்கும் அம்பராவிலிருந்து அம்பை எடுக்க முற்பட்டது போல் காட்டப்பட்டுள்ளது. இராமன் சிரித்த முகத்துடன் காட்டப்பட்டிருப்பது அழகான காட்சியாகும். இதனை வீரரசத்தில் இடம்பெறும் நகை எனும் மெய்ப்பாடாகக் கொள்ளலாம். இதே அமைப்பில் இம்மண்டபத்தில் வைகுண்டநாதன் சிற்பம் இடம்பெற்றுள்ள தூணின் பக்கவாட்டில் ஒரு சிற்பம் இடம்பெற்றுள்ளது. ஆனால் முன்னதைப் போல இது அழகுறச் செதுக்கப்படவில்லை.

திருமோகூரில் இராமன் சீதையுடன் இடம்பெறுகிறான். நின்ற கோலத்தில் இடம்பெறும் இவர்களில் இராமனது இடக்கரத்தில் வில் இடம்பெறுகிறது. வலக்கரத்தால் அருகில் உள்ள சீதையைத் தழுவிய நிலையில் காட்டப்பட்டுள்ளான். இராமனுக்குப் பின்புறம் அம்பரா இடம்பெறவில்லை. இங்கு தழுவிய கோலம் காட்டப்பட்டிருப்பதால் அம்பரா இடம்பெறவில்லை எனக்கருதலாம். இராமன் வில்லுடன் காட்டப்படுவது மரபாகும். எனவே, இங்கு இராமன் என்பதை அடையாளம் காண்பதற்காகவும், தழுவிய நிலை என்பதற்காகவும்

இராமன் அம்பரா, அம்பு இன்றி வில்லுடன் மட்டும் காட்டப் பட்டுள்ளான். இதில் இடம்பெறும் சீதையின் ஆடை அலங்காரமானது வட இந்தியப் பிராமணப் பெண்டிர் திருமணத்தின் போது கட்டிக் கொள்ளும் பாணியில் அமைந்திருப்பது இராமன்சீதையைத் திருமணம் முடித்து மகிழ்ச்சியோடு கூடுவதற்கு அழைத்துச் செல்வதாகக் கருதலாம்[3]. இராமனது சிற்பத்திற்கு முன் இருபுறமும் உள்ள தூண்களில் மன்மதனும், இரதியும் மலரம்பினைத் தொடுப்பது போல் அமைக்கப்பட்டுள்ளது மேற்கண்ட கருத்திற்கு அணி சேர்ப்பதாக அமைகிறது.

ஸ்ரீவைகுண்டம் கோயிலில் இராமனது சிற்பம் சீதை மற்றும் அனுமனுடன் அமைக்கப் பெற்றுள்ளது. இதில் இராமனது இடது கையில் கோதண்டம், இடம்பெற்றுள்ளது. இராமன் தனது வலக்கையினால் அனுமனைத் தழுவியபடி காட்டப்பட்டுள்ளது. தன் தலைவனின் கை தன் மேல் பட்டதால் பரவசப்பட்டு வணங்கிய நிலையில் மெய்சிலிர்ப்புடன் அனுமன் காட்டப்பட்டுள்ளான். பொதுவாக அனுமன் இராமனது காலுக்கருகிலோ அல்லது இராமனைத் தோளில் சுமந்தபடியோ காட்டப்படுவது மரபு. இங்கு, இராமனுக்கருகில் நின்று இராமனே அனுமனின் தோளில் கைவைத்தபடி காட்டப்பட்டிருப்பது அரிதான காட்சியாகும். (பார்க்க நி.ப.எண் : 11) சேரன்மாதேவி இராமன் கோயிலில் இடம்பெறும் இராமஅனுமன் சிற்பத்தோடு மேற்கண்ட சிற்பம் ஒப்புநோக்கத்தக்கதாகும். சேரன்மாதேவியில் இராமன் அனுமனைத் தழுவியிருக்கும் காட்சி முன்னதிலும் அழகாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீவைகுண்டத்தில் இடம்பெறும் இராமனது உருவம் பெரியதாகவும், (சுமார் ஆறு அடி) அனுமனது உருவம் இராமனைவிடச் சற்று சிறியதாகவும் சீதையின் உருவம் அனுமனைவிடச் சற்று சிறியதாகவும் காட்டப்பட்டுள்ளது. ஒரு சிற்ப அமைதியில் முதன்மையான உருவத்தை மற்றவற்றைவிடச் சற்று உயரமாகக் காட்டுவது மரபாகும். இத்தகு அமைப்பிலிருந்து இங்கு யாருக்கு அதிகமுக்கியத்துவம் அளிக்கப் பட்டிருக்கிறது என்பதை ஊகிக்கலாம். இச்சிற்பவமைதியில் இராமன் வெற்றிப்பெருமிதத்தில் திளைப்பது போல் காட்டப்பட்டுள்ளான். எனவே, இச்சிற்பவமைதி இராவண வதத்திற்கு அடுத்த நிலையினை நினைவூட்டுவதாகத் தெரிகின்றது. மேலும், இராமன் அனுமனின் தோளில் கை வைத்துப் போரில் பெரும் பங்கு கொண்டதைப் பாராட்டுவதாகக் கொள்ளலாம். சீதையின் உருவம் பக்கவாட்டில் சிறிய அளவில் இடம்பெற்றிருக்கும் இக்காட்சி போருக்குப்பின் நடக்கும் நிகழ்ச்சி என்பதைக் குறிப்பாக உணர்த்துவதாகத் தோன்றுகிறது. சீதைக்கு அருகில் ஒருவர் கையில் கதையுடன் சீதைக்குச் சாமரம் வீசுவதுபோல் காட்டப்பட்டுள்ளார். இவரை விபீடணன் என அடையாளம் காணமுடிகிறது. மேலும், இச்சிற்பத் தொகுதியின் கீழ் வானரங்கள் வணங்கிய நிலையில் காட்டப்பட்டுள்ளமை மேற்கண்ட கருத்திற்கு அணிசேர்ப்பதாய் அமைகிறது.

நாங்குனேரியிலும் இராமன் அனுமனின் தோளில் கைவைத்தபடி ஸ்ரீவைகுண்டம் இராமன் போலவே காட்டப்பட்டுள்ளான். இங்கு இராமனின் பக்கவாட்டில் இலக்குவன் நின்ற நிலையில் உள்ளான். இந்த இரு கோயில்களிலும் உள்ள சிற்பங்கள் ஒரே காலத்தில் அல்லது ஒரே கலைவல்லுனர்களால் அமைக்கப்பட்டிருக்கக்கூடும்.

மன்னார்கோயிலிலும், ஆழ்வார்திருநகரியிலும் இராமன், இலக்குவன் மற்றும் சீதையோடு நின்ற கோலத்தில் இருப்பதைக் காணலாம். இச்சிற்பத்தில் இராமன் இடக்கையில் அம்பும், வலக்கையில் வில்லும் கொண்டு இயக்கநிலையின்றிக் காட்டப்பட்டுள்ளார். ஆழ்வார்திருநகரியில் சிற்பங்கள் சராசரி அளவைவிடக் குறைவான உயரத்துடன் அமைக்கப்பட்டிருப்பதால் கலைப்படைப்பில் இவற்றை அழகு குன்றிய சிற்பங்களாகக் கொள்ளலாம்.

## 2. இலக்குவன்

இலக்குவனது சிற்பம் தனித்தும், இராமனுடனும் அமைந்துள்ளது. ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில், ஸ்ரீவைகுண்டம், திருமோகூர், ஆழ்வார்திருநகரி, நாங்குனேரி, மன்னார்கோயில் ஆகிய கோயில்களில் இலக்குவனது சிற்பம் இடம்பெற்றுள்ளது.

ஸ்ரீவில்லிபுத்தூரில் கொடிமண்டபத்தில் இலக்குவன் சூர்ப்பநகையை இடது காலால் மிதித்துக்கொண்டும் தன் இடது கையால் அவளது கூந்தலைப் பிடித்துக்கொண்டும் வலதுகையில் உள்ள நீண்ட வாளால் சூர்ப்பநகையின் மூக்கையும், மார்பகங்களையும் அறுப்பதுபோல் காட்டப்பட்டுள்ளது. இரெங்கம்மாள் தமது "ஸ்ரீவில்லிபுத்தூர் வடபெருங்கோயிலும் ஆண்டாள் கோயிலும்–ஓர் ஆய்வு" எனும் ஆய்வேட்டில் சூர்ப்பநகையின் மார்புகளை இலக்குவன் அறுத்ததாகத் தெரியவில்லை என்றும் இச்சிற்பம் அயோமுகி என ஊரார் கருதுகின்றனர் என்றும் சூர்ப்பநகையின் மூக்கை அறுத்த அதேவேகத்தில் மார்பகத்திலும் கத்தி விழுந்து அதையும் வெட்டுகிறது என ஊரார் சொல்வதாகக் கூறி, தனது கருத்து இது எனத் தெளிவாகக் கூறாது செல்கிறார்.[4] கம்பராமாயணத்தில் இலக்குவன் அயோமுகியின் மூக்கை மட்டுமே அறுப்பதாகவும்[5] சூர்ப்பநகையின் மூக்கு மற்றும் மார்பகங்களை அறுப்பதாகவும்[6] கூறப்பெற்றுள்ளது. எனவே, இதன் அடிப்படையில் இச்சிற்பம் சூர்ப்பநகையின் உறுப்புக்குறைத்தல் காட்சி எனக்கொள்ளலாம். காமராசர் மாவட்டம் சங்கரன் கோயிலில் இருக்கும் சங்கரநாராயணன் கோயில் அர்த்தமண்டபத்திலும் சூர்ப்பநகை உறுப்புக்குறைத்தல் காட்சி சிறு அளவில் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

ஸ்ரீவைகுண்டம் திருவேங்கடநாதன் மண்டபத்தில் இடம்பெறும் இலக்குவனது சிற்பம் ஒரு கையில் வில்லுடனும், அம்புடன் கூடிய மற்றொருகையை அங்கதனின் தோளில் வைத்து அரவணைத்தபடி நின்ற

கோலத்தில் அமைந்துள்ளது. தலையில் கிரீடமின்றி காணப்படும் அங்கதன்சிற்பம் தனது ஒரு கையினால் வாய் பொத்தி மறுகையை முன்னர்வைத்து லேசாகக் குனிந்து நெகிழ்ச்சியுடன் காட்டப்பட்டுள்ளது. இலக்குவனது மறுபக்கம் சுக்ரிவன் அஞ்சலியில் நிற்கிறான். சுக்ரீவனின் தலையில் கிரீடம் இடம்பெற்றுள்ளது.[7] சிற்பங்களை அடையாளம் காண்பதற்காகச் சிற்பி ஏதேனும் ஓர் உத்தியைக் கையாள்வதை இதன் மூலம் அறியமுடிகிறது.

இச்சிற்பத்தில் பின்பக்கம் ஆஞ்சனேயன், இதனையடுத்த தூணில் இடம்பெற்றுள்ள இராமன்-சீதையை நோக்கி வணங்கிய நிலையிலும், அருகே விபீடணனும் (கோரைப்பற்களுடன்) இடம்பெறுகின்றனர். இலக்குவனது சிற்பத்தொகுதியின் கீழ் வானரங்கள் கையில் கத்தி மற்றும் கேடயத்துடன் சிறு அளவில் இடம்பெறுகின்றன.

திருமோகூரில் உள்ள கருட மண்டபத்தில் இடம்பெறும் இராமன்-சீதை சிற்பத்திற்கு அடுத்த தூணில் இலக்குவனது சிற்பம் இடம்பெற்றுள்ளது. இதில் ஒருகையில் வில்லும் மறுகையில் அம்பும் கொண்டு மிக அழகுடன் செதுக்கப்பட்டுள்ளது.

ஆழ்வார்திருநகரியில் தனித்து இடம் பெற்றுள்ள இலக்குவனது சிற்பம் திருமோகூர் சிற்பம் போல் அல்லாது குட்டையாகவும் அழகு குன்றியும் அமைந்துள்ளது.

நான்குனேரி, மற்றும் மன்னார்கோயிலில் இலக்குவன் இராமனுடன் சேர்ந்து இடம்பெறுகிறான். இவற்றில் நாங்குனேரியில் ஒருகையில் வில்லும், மறுகையில் அம்பும் கொண்டு காட்டப்பட்டுள்ளான். மன்னார் கோயிலில் வில்லைத் தனது தோளில் மாட்டி இருகைகளையும் கூப்பி வணங்கிய நிலையில் இடம்பெறுகிறான்.

## 3. சீதை

இராமாயணச் சிற்பங்கள் இடம்பெறும் கோயில்களில் எந்தக் கோயிலிலும் சீதை தனியாகக் காட்டப்படவில்லை. பெரும்பாலும் இராமனுடன் காட்டப்படுகிறாள். இது ஒரு மரபாகவே இருந்து வந்துள்ளது. திருமோகூர், ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி, மன்னார்கோயில் ஆகிய கோயில்களில் சீதை இராமனுடன் இடம் பெறுகிறாள். இவற்றில் திருமோகூரில் மட்டுமே இராமனால் தழுவப்பட்ட நிலையில் காணப்படுகிறாள். பிற இடங்களில் இராமனுக்கு அருகில் தனித்தே காட்டப்பட்டுள்ளாள். சீதையைக் காட்டும்போது ஏனைய இடங்களில் இராமனது இடுப்பளவிற்கே சிறியதாகக் காட்டப்பட்டுள்ளது. திருமோகூரில் திருமணக் கோலம் என்பதால் பெரிய உருவமாகவும், மற்ற இடங்களில் இராமர் சிற்பம்தான் என்பதை உறுதிப்படுத்த இராமனுக்குப் பக்கத்தில் சீதையை வைத்திருக்கக் கூடும்.

## 4. அனுமன்

விசயநகர-நாயக்கரது கலைகளில் அனுமனுக்கு முக்கியமான இடம்உண்டு. இராமனிடம் அனுமன் எப்படிப்பணிவுடன் நடந்து கொள்கிறாரோ அதே போல் நாங்கள் வேற்று நாட்டிலிருந்து வந்த அரசர்கள் எனினும் எங்களிடம் அனுமனைப்போல் பணிவாக நடந்து கொள்பவர்களுக்கு நாங்களும் இராமனைப் போல் நடந்து கொள்வோம் எனும் கருத்தின் அடிப்படையில் விசயநகர-நாயக்கர் தங்களது கலைப்படைப்புக்களில் அனுமானுக்கு அதிகமாக முக்கியத்துவம் அளித்ததாகத் தோன்றுகின்றது. இதனால்தான் இவர்களது காலத்தில் அனுமனுக்கு அதிகமான கோயில்களும் எழுந்தன என்பர் வெங்கட்ராமன்[8]. விசயநகர-நாயக்க மன்னர்கள் இறைவனிடம் நாங்கள் கொண்டுள்ள பக்தி அனுமன் இராமபிரானிடம் கொண்டிருந்த பக்திக்கு ஈடாகயிருக்க வேண்டும் என்று விரும்பி அனுமனைப் போற்றியிருக்கலாம் என்று கூறவும் வாய்ப்புள்ளது.

ஸ்ரீவைகுண்டம், நாங்குனேரி, தாடிக்கொம்பு, அழகர்கோயில், ஆழ்வார்திருநகரி, மன்னார்கோயில் ஆகிய இடங்களில் அனுமனது சிற்பம் இடம்பெறுகின்றது. இவற்றில் அழகர்கோயில் மன்னார் கோயில், ஆழ்வார்திருநகரி ஆகிய இடங்களில் தனித்தும், பிறகோயில்களில் இராமனுடனும் காட்டப்பட்டுள்ளார்.

ஸ்ரீவைகுண்டம் மற்றும் நான்குனேரியில் இராமன் அனுமனது தோளில் கைவைத்தபடியும், அனுமன் அஞ்சலியிலும் உள்ளனர். இராமாவதாரத்தில் இராமன் தன்னை நாடிவந்தவர்களுக்கெல்லாம் உதவுகிறான். விசுவாமித்திரருக்காக தாடகையை அழித்தான். பரதனுக்குப் பதவிதந்து தான் காட்டிற்குச் சென்றான். குகனுக்குத் தன்தம்பி எனும் நிலை தந்தான். வாலியைக் கொன்று சுக்ரீவனுக்கு கிட்கிந்தையை அளித்தான். இராவணனை அழித்து விபீடணனுக்கு இலங்கையை அளித்தான். ஆனால், இறுதிவரை உடனிருந்து உதவிய உனக்கு என்ன கைமாறு செய்வது என்பது போல் இராமன் அனுமனை அரவணைக்கின்றான். தன் தலைவனது கை தன்மீது பட்டதைவிடவா தனக்கு மகிழ்ச்சி தரக்கூடிய விசயம் ஒன்று இருக்கப் போகிறது என்பதுபோல் மெய்சிலிர்த்து வணங்கிய நிலையில் அனுமன் காணப்படுகின்றான்.

அனுமன் பொதுவாக இராமனது கால்களுக்கருகே அமர்ந்து வணங்கும் நிலையில் காட்டப்படுவான். ஆனால், இங்கு அனுமனை இராமன் அரவணைக்கும் இத்தகு சிற்பம் அரிதான ஒன்றாகும்.

தாடிக்கொம்பில் அனுமன் இராமனைத் தூக்கிச் செல்வது போல் இடம் பெற்றுள்ளான். இக்காட்சி இராம-இராவண யுத்தத்தைக் காட்டு வதாக அமைந்துள்ளது. அனுமன் இராமனது இரு பாதங்களையும் தன் கையில் ஏந்தியபடி காணப்படுகின்றான்.

இதைத்தவிர வைகுண்டநாதன் சிற்பம் அமைந்துள்ள தூணின் பக்கவாட்டில் அதனை அடுத்து அமைந்துள்ள தூணில் மேற்கண்ட சிற்பத்தை நோக்கி செதுக்கப்பட்டுள்ள ஒரு காட்சியில் அனுமன் ஓர் அசுரனின் கையை வ்ளைத்துப் பிடித்தபடி காணப்படுகிறான். அவ்வசுரன் அனுமனைத் தன் இடது கரத்தால் சுற்றிப் பிடித்தபடி வலது கரத்தில் வேலினை எய்யும் நிலையில் காட்டப்பட்டுள்ளான். இக்காட்சி கம்பராமாயணத்தில் இடம்பெறுகிறது[9]. சூலப்படைக்குத் தலைவன் நிகும்பன் ஆவான். நிகும்பனும், அங்கதனும் மோதுகின்றனர். இச் சண்டையில் நிகும்பன் அங்கதனை நோக்கிச் சூலத்தை வீச முற்படுகிறான். அவனது கையிலிருந்து சூலம் செல்லுமானால் அங்கதன் நிச்சயமாகப் பிழைப்பது அரிது எனக்கருதிய அனுமன் சூலத்தை நிகும்பன் எறிய இயலாது அவனது கையைப்பிடித்துத் தடுக்கிறான். இக்காட்சி மிக அரிதான ஒன்றாகும்.

அழகர்கோயிலில் அனுமன் வணங்கிய நிலையில் முழுஉருவச் சிற்பமாக இடம்பெறுகின்றான். அனுமன் பொதுவாக இராமனையும், சீதையையும் வணங்குவது வழக்கம். ஆனால், இங்கு அனுமனுக்கு நேர் எதிரே உள்ள தூணில் பூவராகமூர்த்தி இடம்பெற்றுள்ளார். பூமகளே சீதை என்பதால்.இங்கு வராகரின் மடியில் இடம் பெற்றுள்ள பூமகளைச் சீதையாக எண்ணி வழிபடுகிறான் எனக் கருத இடமுள்ளது.[10]

ஆழ்வார்திருநகரியிலும் தனித்து அஞ்சலியில் இராமனுக்கு அடுத்த தூணில் காணப்படுகின்றார். மன்னார்கோயிலில் இராமனுடைய சிற்பத்தூணின் பக்கவாட்டில் இடம்பெறுகின்றார். இவை இரண்டு சிற்பங்களும் இயக்கநிலை இன்றி அமைந்துள்ளன. இங்கு இராமனை அடையாளப்படுத்துவதற்காகப் பக்கத்தில் அனுமன் சிறியதாக அமைக்கப்பட்டிருக்கலாம்.

## 5. வாலி–சுக்ரீவன்

வாலி-சுக்ரீவன் சிற்பங்கள் அதிக அளவில் தூண்களின் சதுரப்பகுதிகளில் சிறு வடிவில் இடம்பெறுவதைக் காணமுடிகிறது. மண்டபச் சிற்பங்களில் திருக்குறுங்குடியில் மட்டுமே வாலி–சுக்ரீவன் சிற்பம் இடம்பெற்றுள்ளது. வாலி–சுக்ரீவனை எதிர் எதிர்த்தூண்களில் காட்டுவது வழக்கம்.[11] இங்கு அடுத்தடுத்த தூண்களில் இடம் பெறுகின்றனர். எனினும், ஒருவரை ஒருவர் பார்த்தபடி ஒரு கையைத் தொடையிலும், மறுகையைத் தாடகஸ்தத்திலும் வைத்தபடி காட்டப்பட்டுள்ளனர். தலையில் கிரீடம், அணிகலன்கள் முதலியன கொண்டு பார்ப்பதற்கு இருவரும் ஒரே வடிவில் தோன்றினாலும் சுக்ரீவன் கழுத்தில் மாலை இடம்பெற்றுள்ளது. இராமன், வாலி–சுக்ரீவன் ஆகிய இருவரில் யார் சுக்ரீவன் என்பதைத் தெரிந்து கொள்ள சுக்ரீவனுக்கு மாலையிட்டு அனுப்பியதை நேர்த்தியுடன் படைத்த சிற்பியின் படைப்பாற்றல் போற்றத்தக்கதாகும்.

### 6. குகன்

ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயிலில் மட்டும் குகனது சிற்பம் இடம்பெறுகின்றது. ஒருகையினால் மீசையைத் திருகியபடியும் தோளில் கொம்புடனும் காணப்படும் இச்சிற்பத்தின் எதிரே இடம் பெறும் சிற்பம் கர்ணனின் தேரோட்டியான சாத்தகியாதலால் இச்சிற்பத்தைக் குகன் எனக்கொள்ளலாம். படகோட்டியும் தேரோட்டியும் எதிரெதிரே அமைக்கப்பட்டுள்ளனர் எனக்கூறும் இரெங்கம்மாளின் கருத்து இங்கு பொருத்தமாக அமைகின்றது.[12]

### 7. பரதன்

பரதனின் சிற்பம் ஆழ்வார்திருநகரியில் மட்டும் இடம்பெற்றுள்ளது. ஒரு கையில் வில்லும், மறு கையில் அம்பும் கொண்டு நின்ற நிலையில் இயக்கமின்றி அமைக்கப்பட்டுள்ளது.

### 8. சத்ருக்ணன்

சத்ருக்ணன் சிற்பம் ஆழ்வார்திருநகரியில் மட்டுமே இடம் பெற்றுள்ளது. சத்ருக்ணனும், பரதனைப் போலவே வில்லும், அம்பும் கொண்டு காணப்படுகின்றான். இச்சிற்பங்கள் அளவில் குட்டையான வைகளாகக் காட்சியளிக்கின்றன. பரதன், சத்ருக்ணன் சிற்பங்கள் அடுத்தடுத்து இடம்பெற்றுள்ளன. இவர்களுக்கு நேர் எதிரே இராம இலக்குவர் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. இங்கு சகோதரர்களில் இணைபிரியாத இருவர் ஒருபக்கமும் மற்றிருவர் எதிர்ப்பக்கமும் காட்டப்பட்டுள்ளனர்.

இதுவரை கண்ட இராமாயணச் சிற்பங்களிலிருந்து மண்டபங்களில் இடம்பெறும் சிற்பங்களில் பொதுவாக நல்ல பாத்திரங்களே காட்டப்படுகின்றன என்பதனை அறியமுடிகின்றது. இதில் இராமனுக்கே அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. சில சிற்பங்கள் காட்சிகளை விளக்குவதாகவும், சில சாதாரணமாக நின்ற கோலத்திலும் அமைகின்றன. மிக நுணுக்கமாகக் கதையினுள் இடம் பெறும் நிகும்பன் வதை முதலானவையும் கையாளப்பட்டுள்ளன.

## ஆ. மகாபாரதச் சிற்பங்கள்

மகாபாரதச் சிற்பங்களாக இடம்பெறுபவை அர்சசுனன், கர்ணன், வீமன், புருஸாமிருகம், திரௌபதி மற்றும் சாத்தகி ஆகிய சிற்பங்களாகும். இதில் மிகுதியாக இடம்பெறும் சிற்பங்கள், அர்ச்சுனன்-கர்ணன் சிற்பங்களே. மகாபாரதத்தில் பாண்டவர்களுக்குத் துணை செய்கின்ற கிருஷ்ணன், அக்காப்பியத்தின் ஒரு பாத்திரமாக இருப்பினும் அவனது சிற்பம் இப்பகுதியில் எடுத்துக்கொள்ளப்படவில்லை. ஏனெனில், இராமாயணத்தில் இராமன் கதைத்தலைவனாவான். ஆனால், மகாபாரதத்தில் கிருஷ்ணனை கதைத்தலைவன் என்று சொல்ல

முடியாது. கதையை நடத்துபவனாகவே கருதலாம். மேலும், கிருஷ்ணனது வாழ்க்கை தனித்த பாகவதபுராணத்தைச் சேர்ந்தது. எனவே, கிருஷ்ணன் வாழ்க்கை தொடர்பான சிற்பம் பற்றி இங்குக்கூறப்படாது திருமாலின் அவதாரச் சிற்பப்பகுதியில் கூறப்படுகின்றது.

## 1. அர்ச்சுனன்

அர்ச்சுனனது சிற்பம் கிருஷ்ணாபுரம், ஆண்டாள்கோயில், திருக்குறுங்குடி, ஆழ்வார்திருநகரி, மற்றும் தாடிக்கொம்பு ஆகிய கோயில்களில் காணப்படுகின்றது. திருக்குறுங்குடியிலும், கிருஷ்ணா புரத்திலும் அர்ச்சுனன் தேரின்மேல் நின்றபடி அமைக்கப்பட்டுள்ளான். முறுக்கிய மீசையும், தாடியும் கிரீடமும் கைகளில் வில், அம்புடனும் காட்டப்பட்டிருப்பது இவன் போருக்குச் .செல்வதைக் குறிப்பதாக அமைகிறது. அர்ச்சுனனுக்கு நேர் எதிர்த்தூணில் கர்ணன் காட்டப்பட்டுள்ளான். கிருஷ்ணாபுரத்தில் அர்ச்சுனனுக்கு அடுத்த பக்கவாட்டுத்தூணில் கர்ணன் காட்டப்பட்டுள்ளான். மண்டபச் சிற்பங்களில் ஒரு கதைத்தொடர்புடைய இருவரை இவ்வாறு நேருக்கு நேரோ அடுத்தடுத்தோ காட்டுவது வழக்கம். திருக்குறுங்குடியில் அர்ச்சுனனது தேரை ஓட்டுவதுபோல் தேரில் சிறுவடிவில் கிருஷ்ணன் இடம் பெறுகிறான்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் மேற்கண்ட அதே அமைப்பில் அர்ச்சுனன் இடம் பெறுகிறான். ஆனால், இங்குத் தேர் இல்லை. மேலும், அர்ச்சுனனது பக்கவாட்டில் இருபுறமும் வில்லேந்திய வீரர்கள் நிற்கின்றனர். பக்கவாட்டுச் சிற்பங்கள் இங்கு அர்ச்சுனன் போர்க் கோலம் பூண்டுள்ள கருத்திற்கு அணி சேர்ப்பதாய் அமைகின்றன.

ஆழ்வார்திருநகரியில் வில், அம்புடன் நின்ற கோலத்தில் இடம் பெற்றுள்ளான். அர்ச்சுனன் சிற்பத்தை இத்னை அடுத்து நாகக் கணையுடன் இடம்பெற்றுள்ள கர்ணனின் சிற்பத்தை வைத்துத்தான் அடையாளம் காண இயலுகின்றது. இச்சிற்பம் சுமார் நான்கடி உயரத்துடன் குட்டையான உருவமாக அமைக்கப்பட்டுள்ளது. மகாபாரதக் கதையில் ஒருமுறைக்கு மேல் நாகாஸ்திரத்தைப் பயன் படுத்த மாட்டேன் என கர்ணன் உத்திரவாதம் கொடுத்ததை நினைவு கூறும் வகையில்தான் அவன் நாகக்கணையுடன் காட்டப்பட்டுள்ளான் எனக் கொள்ளலாம்.

## 2. கர்ணன்

கிருஷ்ணாபுரம், திருக்குறுங்குடி, ஆழ்வார்திருநகரி, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய நான்கு கோயில்களில் கர்ணன் சிற்பம் இடம் பெறுகிறது. நான்கு கோயில்களிலும் நின்ற நிலையில் தலையில் கிரீடமும், முறுக்கிய மீசையும் கைகளில் வில்லும், நாகக்கணையும் கொண்டு

திகழ்கிறான். கிருஷ்ணாபுரத்தில் மட்டும் கர்ணன் தேர்மேல் நின்றபடிக் காட்டப்பட்டுள்ளான். ஸ்ரீவில்லிபுத்தூர், திருக்குறுங்குடியில் கர்ணனுக்கு எதிர்த்தூணில் அர்ச்சுனன், கர்ணனுக்கு இணையாகக் காட்டப்பட்டுள்ளான். கிருஷ்ணாபுரம், ஆழ்வார்திருநகரியில் பக்கவாட்டில் அடுத்தடுத்து இடம்பெறுகின்றனர்.

## 3. வீமன்

வீமனது சிற்பம் நாங்குனேரி, திருக்குறுங்குடி, கிருஷ்ணாபுரம், அழகர்கோயில் ஆகிய இடங்களில் இடம்பெற்றுள்ளது.

மண்டபச் சிற்பங்களில் வீமன் தனியாக இடம்பெறாது புருஷாமிருகம் எனும் சிற்பத்துடன் காட்டப்படுகின்றான். இவ்வாறு காட்டும் போது வீமனுக்கு நேர் எதிரே உள்ள தூணிலோ, அல்லது ஒரே தூணில் இருவருமோ காட்டப்படுவர். இச்சிற்பத்தை ஒட்டிக் கீழ்க்கண்ட கதை வழங்கப்படுகிறது.

மகாபாரதத்தில் தருமர் ராஜசூயயாகம் செய்வதற்குப் புருஷா மிருகத்தின் (பாதிமனித உடல், பாதி மிருக உடல்) பால் தேவைப்பட்டது. இந்த புருஷாமிருகம் வியாக்ரபாதர் எனவும் அழைக்கப்படுகிறது. புருஷாமிருகம் ஒரு சிவபக்தன் மட்டுமல்லாது விஷ்ணு மற்றும் விஷ்ணுபக்தர்களை வெறுப்பவரும் ஆவார். கிருஷ்ணருடைய ஆலோசனைப்படி இம்மிருகத்தின் பாலைக் கொண்டுவர தருமர் வீமனை அனுப்பினார். கிருஷ்ணர் இம்மிருகத்தின் பலத்தை வீமனிடம் கூறி தேவைப்படும் போது பயன்படுத்த ருத்ராட்சங்களையும் வழங்கினார். வீமன் சிவனுக்குரிய ருத்ராட்சங்களை விருப்பமின்றி வாங்கிக் கொண்டு காட்டுக்குள் செல்லும் போது கோவிந்தா, கோவிந்தா என்று கூறிச் செல்கிறார். மிருகம் பின் தொடர ஒரு ருத்ராட்சத்தை கீழே போடுகிறார். அது லிங்கமாகமாற உடனே பூசை செய்துவிட்டு மீண்டும் வீமனை விரட்டுகிறது. மேலும், வீமனைப் பிடித்து இவனை என்ன செய்ய என தருமனிடம் கேட்க உனது எல்லைக்குள் வந்ததனால் உரிய தண்டனையைத் தந்துவிடலாம் என்றார். புருஷாமிருகம் தருமரின் நீதிக்கு வணங்கி வீமனை விடுவித்துத் தேவையான பாலையும் தந்து உதவுவதோடு விஷ்ணு பக்தர்களிடமிருந்த வெறுப்பையும் விலக்கிக் கொண்டது[13].

திருக்குறுங்குடி, கிருஷ்ணாபுரம், நாங்குனேரி ஆகிய கோயில்களில் வீமன் புருஷாமிருகச் சண்டை இடம்பெற்றுள்ளது. மேலும், திருநெல்வேலி மாவட்டம் இடைகால் சிவன் கோயிலிலும் இத்தகு சிற்பம் காணப்படுகிறது.

மேற்கண்ட மூன்று கோயில்களிலும் வீமன் சிறுகிரீடம் அணிந்து முறுக்கிய மீசை, இடுப்பில் கத்தியுடன் வலது கரத்தில் கதையைத் தூக்கி ஓங்கிய வண்ணமும், இடது கரத்தைத் தன் தொடைமீது வைத்தபடியும்

காட்டப்பட்டுள்ளார். வீமனது உருவம் பருத்த உருவமாகக் காட்டப்பட்டுள்ளது. கிருஷ்ணாபுரம், நாங்குனேரியில் ஒரே தூணிலேயே புருஷாமிருகத்துடன் மோதுவது போல் காட்டப்பட்டுள்ளது. மேலும், கிருஷ்ணாபுரத்தில் இவர்கள் இருவரையும் சமாதனம் செய்வது போல் தருமரது சிற்பம் இடம்பெறுகிறது. திருக்குறுங்குடியில் பக்கவாட்டில் புருஷாமிருகம் இடம்பெறுகிறது.

அழகர்கோயிலில் வீமன் நின்ற கோலத்தில் பின்புறம் சாய்ந்தபடியும் வீமனுக்குப் பின்னால் உள்ள யாளி வீமனை விழுங்குவது போலும் அமைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்திற்கு எதிரே தொடர்புடைய சிற்பம் ஏதும் அமையவில்லை. வீமனை யாளி விழுங்கும் சிற்பமானது கீழ்க்காணும் கதையை ஒட்டி அமைகிறது.

மகாபாரதத்தில் வீமன் காட்டில அலைந்து திரிந்த போது தன் வீரத்தைத் தானே பெரிதும் போற்றிக் கொண்டிருந்தான். ஒருநாள் மிருகத்திடம் சிக்கிப் பின் கிருஷ்ணரின் கருணையால் விடுபட்டான். இதன் மூலம் மனிதனின் நிலையற்ற தன்மையுடைய வீரத்தையும், நிலையான இறையருளையும் உணர்ந்தான். இதே போன்ற சிற்பம் பிரான்ஸ் நாட்டில் இதே காலகட்டத்தில் அமைக்கப்பட்டுள்ளது. அதன் பெயர் குரோட்டானாவின் மைலோ என்பதாகும். அங்கு ஒரு வீரன் கொடியமிருகத்தால் பிடிக்கப்படுகிறான். மேற்கண்ட குரோட்டா னாவின் மைலோ எனும் கதை கிரேக்கத் தொன்மத்திலிருந்து எடுக்கப்பட்ட கதையாகும்[14].

## 4. புருஷாமிருகம்

புருஷாமிருகம் கதையை மேலே கண்டோம். இச்சிற்பம் நான்குனேரி, திருக்குறுங்குடி, கிருஷ்ணாபுரம், ஆகிய மூன்று கோயில்களில் இடம்பெற்றுள்ளது. வியாக்ரபாதர் சிற்பம் இடுப்புவரை புலியின் உடல் (வியாக்ரம்-புலி) அமைப்பும், இடுப்பிற்கு மேலே மனித உடலமைப்பும் கொண்டு இடம்பெறுகின்றது. தலையில் கிரீடத்துடனும் முகத்தில் தாடி, மீசை, கோரைப்பற்களுடனும் காணப்படும் இப்புருஷாமிருகம் வலது கையில் கதையை ஏந்தியபடியும், இடதுகையைத் தொங்க விட்டபடியும் வீமனுடன் மோதுவது போல் காட்டப்பட்டுள்ளது. நெற்றியில் விபூதியுடன் சிவபக்தர்போல் காட்டப்பட்டுள்ளது.

## 5. தருமன்

கிருஷ்ணாபுரத்தில் மட்டும் வீமன்-புருஷாமிருகச் சண்டையில் சமாதானப்படுத்துபவர் போல் மேலிருவர் இடம் பெறும் அதே தூணின் பக்கவாட்டில் தருமன் இடம்பெறுகிறான். தருமன் தலையில் கிரீடம் அணிந்து மீசையுடன் வலக்கை தர்சணி முத்திரையிலும், இடது கையில் பணமுடிப்புப்போல ஒன்றைப் பிடித்தபடியும் காட்டப்பட்டுள்ளான்.

## 6. திரௌபதி

திரௌபதியின் சிற்பம் திருக்குறுங்குடியில் மட்டும் இடம் பெறுகிறது. கையில் மாலையுடன் திரௌபதி காட்டப்பட்டுள்ளாள். அருகில் எதிரெதிர்த் தூண்களில் அர்ச்சுனனும் கர்ணனும் இடம் பெறுகின்றனர். எனவே, இது திரௌபதியின் சுயவரத்தைக் குறிக்கும் நாடக அமைப்பாகக் கொள்ளலாம். இச்சுயவரத்தில் போட்டியிட்டவர்கள் இவ்விருவரும்தான்.

## 7. சாத்தகி

சாத்தகி கர்ணனது தேரோட்டியாவான். இவனது சிற்பம் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயிலில் மட்டும் இடம்பெற்றுள்ளது. சாத்தகி நீண்டு தொங்கும் மீசையும் கைகளில் கத்தி மற்றும் வில்லுடனும் காட்டப்பட்டுள்ளான். தலையில் பக்கவாட்டுக் கொண்டை காணப்படுகிறது. சாத்தகியின் எதிர்த்தூணில் குகனது சிற்பம் இடம் பெற்றுள்ளது. தேரோட்டியான சாத்தகி கர்ணனுக்கு உதவினான். குகன் ஆற்றைக்கடக்க, இராமனுக்கு உதவினான். உதவிக்கரங்களையுடைய இருவர் எதிரெதிரே இங்கு இடம்பெற்றுள்ளனர் என்பது கருதத்தக்கதாகும்.

## 8. பிருகன்னலை

மேற்கண்ட சிற்பங்கள் தவிர கிருஷ்ணாபுரத்தில் தூணின் பின்பக்கத்தில் ஓர் அலியும் நாட்டிய ஆடை ஆபரணங்கள் அணிந்த பெண்ணும் இடம்பெற்றுள்ளனர். அர்ச்சுனன் தான் பெற்றிருந்த சாபத்தால் அஞ்ஞாத வாசத்தில் அச்சாபத்தைப் பயன்படுத்திப் பேடியுருவாகி விராடனின் மகள் உத்தரைக்கு நாட்டியம் முதலானவற்றைச் சொல்லித்தருவதாக வேலைக்குச் சேர்ந்தான் என மகாபாரதம் கூறும்.[15]

இங்குச் சிற்பத்தில் பேடியாக இடம் பெற்றிருப்பது பிருகன்னலை யாகும். அருகே இருப்பது விராடனின் மகள் உத்தரையாகும். இச்சிற்பம் மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளது. இதே போன்ற காட்சி மதுரை மீனாட்சிசுந்தரேசுவரர் கோயில் ஆயிரக்கால் மண்டபத்திலும் இடம்பெற்றுள்ளது. ஆனால், இங்கு ஒரே தூணில் இடம்பெறாது பிருகன்னலை ஒரு தூணிலும் உத்தரை மற்றொரு தூணிலும் இடம் பெற்றுள்ளனர்.

இதுவரை கண்ட மகாபாரதச் சிற்பங்களில் மிகுதியாக இடம் பெற்றிருப்பது அர்ச்சுனன்-கர்ணன் ஆகியோரது சிற்பங்களேயாகும். மகாபாரதக் கதையில் இவ்விரு பாத்திரங்களும் வீரத்திற்குரிய பாத்திரங்களாகும். எனவே, இவை அதிக முக்கியத்துவம் பெற்று பெருமளவில் இடம்பெற்றுள்ளன. அடுத்ததாக வீமன்புருஷாமிருகச் சிற்பம் குறிப்பாக திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள கோயில்களில்

அதிக அளவில் இடம்பெற்றுள்ளது. அப்பகுதிகளில் இக்கதை பெற்றுள்ள செல்வாக்கினால் இச்சிற்பங்கள் அதிக அளவில் இடம் பெற்றுள்ளதாகக் கருதலாம்.

## 2. விஷ்ணு மற்றும் அவதாரச் சிற்பங்கள்

நின்ற, அமர்ந்த, கிடந்த என்று மூன்று கோலங்களும் திருமாலுக்கே பெரிதும் உரித்தானவையாகும். வைணவக் கோயிலில் கருவறைத் தெய்வமாகத் திருமால் இம்மூன்று கோலங்களிலும் இடம்பெறுவார். ஆனால், மண்டபச் சிற்பங்களில் நின்ற கோலமும், அமர்ந்த கோலமுமே பெரும்பான்மையாக இடம்பெறுகின்றன. கிடந்த கோலத்தை மண்டபத்தூண் சிற்பத்தில் அமைக்க இயலாதென்பதால் அதனை அமைக்காது விட்டனர் போலும்.

திருமாலின் முக்கிய அவதாரங்கள் பல. குறிப்பிட்டத்தக்க அவதாரங்கள் இருபத்தி நான்கு. இவற்றில் சிறப்பாகக் கருதப்படுவை பத்து. அவை முறையே 1. மச்சம் 2. கூர்மம் 3. வராகம் 4. நரசிம்மம் 5. திரிவிக்ரமன் 6. பரசுராமன் 7. இராமன் 8. பலராமன் 9. கிருஷ்ணன் 10. கல்கி என்பன.

மேற்கண்ட பத்து அவதாரங்களில் நரசிம்ம அவதாரம் மற்றும் வராக அவதாரம் ஆகிய இரண்டு அவதாரங்களை அதிக அளவில் தாங்கள் கட்டிய கோயில்களில் விசயநகர-நாயக்கர் இடம்பெறச்செய்தனர். காரணம், விசயநகர-நாயக்கரது காலமானது இந்து சமய எழுச்சிக் காலமாகும். நரசிம்மர் எதிரியைச் சம்காரம் பண்ணியது போல தாங்களும் எதிரிகளைச். சம்காரம் செய்வோம் என்றும், பூவராகர் அசுரனிடமிருந்து உலகை எப்படிக் காத்தாரோ அதுபோல் நாங்களும் இவ்வுலகைக் காக்க வந்துள்ளோம் என்பதாக இவ்வவதாரங்களை அதிக அளவில் அமைத்தனர் எனலாம். மேலும், விசயநகரப்பேரரசர்களது அரசு சின்னத்திலும் வராகம் இடம் பெற்றுள்ளது. இதனால் கூட வராகத்தை அதிக அளவில் பயன்படுத்தியிருக்கலாம்.

இராமாவதாரமும், கிருஷ்ணாவதாரமும் இதிகாசங்களுடன் தொடர்புடையதாக அமைந்ததாலும் மக்கள் மத்தியில் அதிகம் செல்வாக்குப் பெற்றிருந்ததாலும் அவைகளை அதிக அளவில் பயன்படுத்தினர். இவைதவிர திரிவிக்ரமன் அவதாரமும் அதிக அளவில் பயன்படுத்தப்பட்டுள்ளது. திரிவிக்ரம அவதாரம் அகந்தையை அழிக்க ஏற்பட்டது. மன்னர் அகந்தை கொண்டிருக்கக் கூடாது என்பதை உணர்த்த வேண்டியும் இச்சிற்பம் அமைக்கப்பட்டிருக்கலாம்.

### 1. வைகுண்டநாதன்

வைகுண்டநாதன் ஆதிசேஷன் மீது சுகாசனத்தில் எட்டுக்கரங் களுடனோ, நான்கு கரங்களுடனோ அமர்ந்திருப்பார் என்ற கருத்து உள்ளது[16] திருமாலின் நின்ற, இருந்த, கிடந்த கோலங்களில்; இருந்த கோல விஷ்ணு எனக் கூறப்படுவது வைகுண்டநாதன் அமைப்பேயாகும்.

தாடிக்கொம்பில் மட்டும் வைகுண்டநாதன் சிற்பம் இடம் பெற்றுள்ளது. இச்சிற்பம் சுகாசனத்தில் நான்கு கரங்களுடன் ஆதிசேஷன்மேல் அமர்ந்த கோலத்தில் இடம்பெற்றுள்ளது. மேலிரண்டு கரங்களில் சங்குச்சக்கரமும், கீழிரண்டில் தாமரை மொட்டும், கதையும் கொண்டுள்ளார். தொங்கிய நிலையில் காணப்படும் கால்பாதம் தாமரை மலர்மேல் இடம்பெறுகின்றது. திருமாலின் காலுக்கருகில் கருடன் சிறுவடிவில் அஞ்சலியில் காணப்படுகிறான். இச்சிற்பத்திற்கு எதிரே கருடநாராயணன் சிற்பம் இடம்பெற்றுள்ளது. காத்தல் கடவுளான நாராயணன் வைகுண்ட நாதனாக வீற்றிருக்க பக்தர்களுக்கு துன்பம் நேரும் போது தன் வாகனமான கருடன் மேலேறி உடனே சென்று அவர்களுக்கு உதவுவார் என்ற கருத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டிருப்பதாக இவற்றைக் கருதலாம்.

## 2. கருடநாராயணன்

விஷ்ணு கருடன்மேல் அமர்ந்தபடி காட்சி தருவதால் இவ்வமைப்பு கருடநாராயணன் என்று பெயர்பெறுகிறது. கருடநாராயணனுக்கு வைகுண்டநாதர் போலவே நான்கு கரங்களோ எண்கரங்களோ அமையும்.

தாடிக்கொம்பு, அழகர்கோயில் ஆகிய இடங்களில் கருடநாராயணன் சிற்பம் இடம்பெறுகிறது. கருடன் மீது விஷ்ணு அமர்ந்திருக்க விஷ்ணுவின் பாதங்கள் இரண்டையும் தாங்கி கருடன் பறந்து வருவது போல் காட்டப்பட்டுள்ளது. அழகர்கோயிலில் இச்சிற்பம் வேணுகோபாலன் சிற்பத்திற்கு எதிரே இடம் பெற்றுள்ளது. நாடக அமைப்புப் போன்று சித்தரிக்கப்பட்டுள்ள இங்குள்ள சிற்பத் தொகுதிகளின் இறுதியமைப்பாக இதனைக் கொள்ளலாம். நாடகம் முடிந்து நாயகன் வாகனத்தின் மீதேறி இருப்பிடம் செல்வதாக இதனைக் கருதலாம்.

## 3. நரசிம்மர்

நரசிம்ம அவதாரம் விசயநகர–நாயக்கரால் அதிக அளவில் போற்றப்பட்ட அவதாரமாகும். அத்தகைய நரசிம்மர் சிற்பத்தைத் தமிழகத்தில் பல்லவர்காலம் முதலே காணமுடிகிறது. பல்லவர்கள் வைணவ சமயத்தில் ஈடுபாட்டுடன் விளங்கினர் என்பதைப் பல்லவ வம்சத்தைச் சேர்ந்த மன்னர்களில் சிலர் தங்களது பெயர்களைச் சிம்ம விஷ்ணு, நரசிம்மப்பல்லவன் என்று வைத்துக் கொண்டதினின்று அறியலாம். மேலும், பல்லவர் காலத்தில்தான் தமிழகத்தில் முதன்முதலாக நரசிம்மருக்கு சிங்கப்பெருமாள்கோயில் (செங்கல்பட்டு மாவட்டம்) என்னுமிடத்தில் தனிக்கோயில் அமைக்கப்பட்டுள்ளது[17].

பல்லவரது சம காலத்தவரான முற்காலப் பாண்டியர் காலத்தில் நரசிம்மருக்குத் தனிக்கோயில் எழுப்பப்பட்டது. யானைமலை

நரசிங்கப்பெருமாள் கோயில் முற்காலப்பாண்டியர் காலத்தில் கட்டப்பட்டதாகும். சோழர், அதியர், முத்தரையர் ஆகியோர் நரசிம்மருக்கெனத் தனிக்கோயில் எடுப்பித்தும் தாங்கள் அமைத்த பிற கோயில்களின் உள்ளே நரசிம்மருக்குத் தனிக்கோயில் அமைத்தும் உள்ளனர். (மேலும் காண்க : இயல் இரண்டு, வைணவக் குடவரைக் கோயில்கள், நரசிம்மர்).

இந்நூலில் இடம்பெறும் கோயில்களில் அழகர்கோயில், தாடிக்கொம்பு, திருக்குறுங்குடி ஆகிய இடங்களில் நரசிம்மர் சிற்பம் இடம்பெற்றுள்ளது. இவை அனைத்திலும் நரசிம்மர் எட்டு கரங்களுடன் காட்டப்பட்டுள்ளார். மேலும், ஒவ்வொரு கோயிலிலும் இரணிய நரசிம்மர் யுத்தம், இரணியவதை என்று இரண்டு அமைப்பில் நரசிம்மர் சிற்பம் இடம்பெறுகிறது. இவை இரண்டும் அழகர்கோயில் மற்றும் தாடிக்கொம்பில் எதிரெதிராகவும் திருக்குறுங்குடியில் பக்கவாட்டில் அடுத்தடுத்தும் இடம்பெறுகின்றன. இரணிய-நரசிம்மர் யுத்த சிற்பத்தில் இரணியன் நரசிம்மருக்கு இணையாகவும் இரணியவதை சிற்பத்தில் நரசிம்மரது மடியில் இரணியன் சிறிய உருவமாகவும் இடம் பெற்றிருப்பதும் ஏதோ ஒருகருத்தின் அடிப்படையில் தான் அமைக்கப்பட்டுள்ளது. இரணியன் நரசிம்மருடன் சண்டையிடும் போது, தான் எனும் அகம்பாவத்தால் இணையாகக் காட்டப்பட்டு, பின்னர் சிறு உருவமாக இரணியன் காட்டப்படுவது அவ் ஆணவம் அழிவதைத்தான் அவ்வாறு குறியீட்டு நிலையில் காட்டியுள்ளனர் எனலாம். இச்சிற்பத்தில் இயக்கநிலை நன்றாகக் காட்டடப்பட்டுள்ளது. மேலும், நரசிம்மர் கோபமுடன் காட்டப்பட்டுள்ளார். இரணியவதைச் சிற்பத்தில் வலது காலை ஊன்றி இடது காலைத்தூக்கி அதில் இரணியனைக் கிடத்தியுள்ளது சமநிலை நோக்கோடு சிற்பம் அமைக்கப்பட்டுள்ளதைக் காட்டுகிறது. கைகளால் இரணியனது கால், தலை மற்றும் கைகளைப் பற்றி அவன் விடுபட முடியாது அமைத்துள்ள இவ்வமைப்பு கலைஞன், மிகுந்த கற்பனைத் திறத்தோடு இச்சிற்பத்தை அமைத்துள்ளான் என்பதைக் காட்டுகிறது. (பார்க்க நி.ப.எண். 10)

திருக்கோட்டியூர் கோயிலின் முதல் திருச்சுற்றின் வெளியே பரமபதவாசலுக்கு இருபுறமும் இடம்பெற்றுள்ள பாண்டியர் காலத்தைச் சேர்ந்த நரசிம்ம-இரணிய யுத்தச் சிற்பமும், இரணியவதைச் சிற்பமும் மேற்கண்ட சிற்பங்களோடு ஒப்பு நோக்கத்தக்கதாகும். மேலும், இச்சிற்பத்தில் கருடன் நரசிம்மரது தூக்கிய காலைத் தாங்கிய படியும், இரணியனது மனைவியர் பயந்த நிலையிலும் காட்டப்பட்டுள்ளனர். இரணியன் தான் ஆயுதங்களால் சாகக்கூடாது என்று வரம் பெற்றிருந்ததாக புராணத்தில் கூறப்பட்டுள்ளதால் அக்கதையை ஒட்டி இங்கு நரசிம்மர் சங்கு, சக்கரம் போன்ற எந்தவிதமான ஆயுதமும் இன்றி அமைக்கப்பட்டிருப்பது கதையின் கருவுக்கு ஏற்றதாகும்.

## 4. வராகர்

வராகர் சிற்பம் விசயநகர-நாயக்கரது காலத்தில் சிறப்பிடம் பெற்றது என்பதை ஏற்கனவே கண்டோம். தமிழகத்தில் பல்லவர் காலத்திலேயே வராகருக்கென குடைவரைக்கோயில் அமைக்கப்பட்டது என்பதை மகாபலிபுரம் வராக மண்டபக் குடைவரை மூலம் அறிய முடிகின்றது. முற்காலப் பாண்டியரது குடைவரையான திருப்பரங்குன்றம் குடைவரையில் திருமாலது கருவறையின் வெளிச்சுவரில் வராகர் சிற்பம் இடம்பெற்றுள்ளது. இவ்வாறு தமிழகத்தில் குடைவரைக்காலம் முதலே சிறப்புற்றிருந்த வராகர் விசயநகர-நாயக்கரது காலத்தில் உன்னத நிலையை அடைந்தார்.

இங்கு இடம்பெறும் கோயில் மண்டபங்களில், வராகர் சிற்பம், அழகர்கோயிலில் மட்டும் இடம்பெறுகிறது. இவ்வராகம் பூமிதேவியைக் கடலில் இருந்து வெளிக் கொணர்வது போன்று செதுக்கப்பட்டுள்ளது. இங்கு பூவராகர் சிற்பம் பூமிதேவியைத் தனது மடியில் வைத்து அனைத்துச்சுமையையும் ஒரு காலில் தாங்குவதாக உள்ளது. பூவராகரின் காலுக்கடியில் நாகம் இடம்பெற்றுள்ளது. கலைகளில் நாகமானது தண்ணீரின் குறியீடாகவும் கருதப்படும். எனவே, இங்கு நாகம் கடலையோ பாதாள உலகத்தையோ உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

பூவராகருக்கு எதிரே அனுமன் இடம்பெற்றுள்ளான். பொதுவாக அனுமனை இராமனுக்கு எதிரே இடம்பெறச்செய்வது வழக்கம். இங்கு பூவராகருக்கு எதிரே இடம்பெறச் செய்தது ஏன் எனத் தெரியவில்லை. ஒருவேளை பூதேவியே சீதை என்பதால் பூதேவியைச் சீதையாக எண்ணி அனுமன் வழிபடுவதாகக் கருதலாம். அல்லது ஆஞ்சனேயருக்கு அடுத்ததாக கருடாழ்வார் இடம்பெறுவதால் இங்குப் பெரிய திருவடியையும், சிறிய திருவடியையும் அடுத்தடுத்து இடம்பெறச் செய்துள்ளனர் எனக் கருதலாம்.

## 5. திரிவிக்ரமன்

பிரகலாதனின் பேரனான பலி அசுரர்களில் தலைசிறந்தவனாக இருந்தான். தேவலோகத்திற்குத் தலைவனாதல் வேண்டி நூறு அஸ்வமேதயாகம் செய்தான். அதனால் தேவர்கள் பயந்தனர். எனவே, விஷ்ணு சிறு உருவமான வாமனனாக வந்து பலியிடம் மூன்று அடி இடம் கேட்க, வந்தவர் விஷ்ணு என்பதையும் விபரீதம் விளையும் என்பதையும் அறிந்த பலியின் குரு சுக்ராச்சாரியார் தானம் அளிப்பதைத் தடுத்தும் பலி மூன்றடி நிலம் தர ஒப்புக்கொண்டார். திருமால் திரிவிக்ரமனாக மாறி ஓரடியால் பூமியையும், மற்றொரு அடியால் விண்ணையும் அளந்து விட்டு மூன்றாவது அடி எங்கே வைக்க எனக் கேட்க வாக்குத்தவறாத பலி தன் தலையில் வைக்கும்படி கேட்டுக்கொள்ள விஷ்ணு பலியின் தலையில் கால் வைத்து அழுத்த அதிலிருந்து பலி பாதாள உலகத்திற்குத் தலைவனாக விளங்கினான் என்பது தொன்மக் கதை.

திரிவிக்ரம அவதாரச்சிற்பம் அழகர்கோயில், தாடிக்கொம்பு ஆகிய இடங்களில் அமைந்துள்ளது. அழகர்கோயிலில் எட்டுக்கைகளுடன் அமைந்துள்ள திரிவிக்ரமனது சிற்பம் ஒருகாலை ஊன்றி மறுகாலை மேல்நோக்கியபடி தூக்கிய நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. அச்சிற்பத்தில் ஓவியத்தில் அமைப்பது போன்று கணுக்கால் வரை உள்ள கீழாடை விசிறி மடிப்புக்களுடன் மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளது. தாடிக்கொம்பில் இவ்வாறின்றி கால் மட்டும் தூக்கிய நிலையில் விசிறி மடிப்புக்களுடன் கூடிய ஆடை இன்றிக் காட்டப்பட்டுள்ளது. திரிவிக்ரமச் சிற்பத்தின் பக்கவாட்டில் குட்டையான வாமனன், மகாபலி மற்றும் சுக்ராச்சாரியார் இடம் பெற்றுள்ளனர்.

## 6. பலராமன்

பலராமன் அவதாரம் திருமாலின் பத்து அவதாரங்களுள் எட்டாவது அவதாரமாக வைத்து எண்ணப்படும். ஒரே சமயத்தில் இரண்டு அவதாரங்களாகப் பலராம-கிருஷ்ணனாக விஷ்ணு அவதரித்தார்.[18] அக்னிபுராணம், ஹரிவம்சம், விஷ்ணுபுராணம், ஸ்ரீமத்பாகவதம், பிரம்மனவர்த்த புராணம் ஆகியவற்றிலும் பலராமன் பற்றிய கதை இடம் பெறுகிறது.[19]

பலராமன் இரண்டு கைகளுடன் அமைக்கப்படுவார். சில நேரங்களில் நான்கு கரங்களுடனும் அமைக்கப்படுவதுண்டு. இருகைகள் அமைந்தால் வலது கையில் சிறிய கதையும், இடது கையில் கலப்பையும் இடம்பெறும்.[20] மேலும், பிருகுத்சம்கிதாவில் பலராமன் ஒரு காதில் மட்டும் குண்டலம் அணிந்திருப்பார் என்று சொல்லப்பட்டுள்ளது.[21]

பலராமன் முதலில் விருஷ்ணி வம்ச இளவரசனாக இருந்து வாசுதேவனது வியூகங்களில் ஒருவராகிப் பின்னரே அவதாரமாகக் கொள்ளப்படுகிறார். பலராமனுக்கு பலதேவன், பாலபத்ரா, சம்கர்ஸனா எனப் பலபெயர்கள் உண்டு.

தமிழகத்தில் பலராமனது சிற்பம் மகாபலிபுரம் கிருஷ்ண மண்டபத்தில் கோவர்த்தனதாரி கிருஷ்ணனுடன் காணப்படுகிறது. பிற்காலத்தில் பலராமன் வழிபாடு வெகுவாகக் குறைந்துவிட்டாலும் சில இடங்களில் மட்டும் பலராமனது சிற்பம் இடம்பெறுகிறது.

இங்கு எடுத்துக்கொண்ட கோயில்களில் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயிலில் மட்டுமே பலராமன் சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பம் பலராமன் அல்ல, விஷ்வகர்மா என்பாரும் உண்டு. கோயிலில் பலராமன் சிற்பத்திற்கு அடியில் விஷ்வகர்மா என்று கோயில் நிர்வாகத்தால் தவறாக எழுதப்பட்டுள்ளது. ஆனால், பலராமன் சிற்பம் என்பதற்கு அச்சிற்பத்திலேயே அக ஆதாரங்கள் உள்ளன. இச்சிற்பம் நான்கு கரங்களுடன் திகழ்கிறது. மேலிருகரங்களில் சங்குசக்கரமும், கீழிரண்டில் கலப்பையும், சிறிய கதையும் இடம்பெற்றுள்ளன. இவை பலராமனுக்குரிய ஆயுதங்களே.

மேலும், இங்குள்ள சிற்ப அமைப்பில் இச்சிற்பம் இராமனுக்கு எதிரே இடம்பெற்றுள்ளது. இச்சிற்பத்தினை அடுத்ததாக இடம்பெறும் வேணுகோபாலன் சிற்பம் இலக்குவனுக்கு எதிரே அமைந்துள்ளதால் தம்பிக்கு எதிரே தம்பியையும், அண்ணனுக்கு எதிரே அண்ணனையும் அமைத்துள்ளனர் என்ற இரெங்கம்மாளின்[22] கருத்தும் இங்குப் பொருத்தமாக அமைகிறது.

## 7. வேணுகோபாலன்

கிருஷ்ணரின் மற்றொரு வடிவம் வேணுகோபாலன் ஆகும். கிருஷ்ணன் குழலுடன் காட்சிதருவதையே வேணுகோபாலன் என்கிறோம். வேணுகோபாலன் பாதஸ்வஸ்திகா நிலையில் இருகரங்கள் கொண்டு குழலூதிய நிலையில் இருப்பார். அருகில் பசுக்கள் நிற்கும் என வேணுகோபாலனது உருவ அமைப்புப் பற்றிக் கூறப்படுகிறது[23] தமிழகத்தில் கி.பி. ஆயிரம் வரை வேணுகோபாலன் அமைப்புக் காணப்படவில்லை[24]. சோழர் காலத்திலும் பாண்டியர் காலத்திலும் (கி.பி. 1000 ற்குப் பின்) வேணுகோபாலன் சிற்பங்கள் கோயில்களில் இடம்பெற்று விசயநகர-நாயக்கர் காலத்தில் பிரசித்தி பெற்றுவிட்ட நிலையைக் காணலாம்.

இங்கு விளக்கப் பெறுகின்ற கோயில்களில் தாடிக்கொம்பு, அழகர் கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில் ஆகிய இடங்களில் வேணு கோபாலன் சிற்பம் இடம்பெற்றுள்ளது.

ஸ்ரீவில்லிபுத்தூரில் நான்கு கரங்களுடன் இடம்பெறும் வேணுகோபாலன் சிற்பம் மேலிருகரங்களில் சங்கு, சக்கரமும், கீழிரு கரங்களில் குழலும் கொண்டு இடம்பெறுவதோடு குழலூதும் வேணுகோபாலனாகக் காணப்படுகிறார்.

அழகர்கோயிலிலும் தாடிக்கொம்பிலும் வேணுகோபாலன் சிற்பம் எட்டுக்கரங்களுடன் குழலூதியபடி ஆலிடா நிலையில் இடம் பெற்றுள்ளது. இவ்வாறு எட்டுக்கரங்களோ, பத்துக்கரங்களோ கொண்டு விளங்கினால் அச்சிற்பம் மதனகோபால் என்று அழைக்கப் படுகின்றது.[25] இது கி.பி. 1400-க்கு முன்னர் அதிகமாக இடம் பெறவில்லை.[26] விசயநகர-நாயக்கரது காலத்தில்தான் அதிக அளவில் இடம்பெறுகிறது. எனவே, மேற்கண்ட இரு கோயில்களிலும் மதன கோபாலன் சிற்பம் இடம்பெற்றுள்ள வேணுகோபாலன் சிற்பத்தை மதனகோபாலன் சிற்பம் எனலாம். அழகர்கோயிலில் மதனகோபாலன் சிற்பத்தின் எதிரே கருடநாராயணன் இடம்பெற்றுள்ளார். தாடிக்கொம்பில் மதனகோபாலனுக்கு எதிரே திரிவிக்ரமன் அவதாரம் காட்டப்பட்டுள்ளது. திரிவிக்ரமனாக மகாபலியின் ஆணவத்தை அழித்து விட்டு ஆனந்தமாக மதனகோபாலனாய்ப் புன்சிரிப்புடன் குழலூதுவதாக இதனைக் கருதலாம்.

இதுவரை கண்டவற்றிலிருந்து திருமாலின் சிற்பங்களில் வைகுண்டநாதன் சிற்பம், கருடநாராயணன் சிற்பம் ஆகியன மட்டும் இடம்பெறுகின்றன என்றும் திருமாலின் அவதாரங்களில் நரசிம்மம், வராகம், திரிவிக்ரமன், பலராமன், வேணுகோபாலன் ஆகிய சிற்பங்கள் இடம்பெறுகின்றன என்றும் அறியமுடிகிறது. இவற்றில் நரசிம்மன், வராகம், வேணுகோபாலன் ஆகியன அதிக அளவில் இடம் பெற்றுள்ளன. மேலும் நரசிம்மன், வராகம் , திரிவிக்ரமன் ஆகிய சிற்பங்கள் ஒருகாலை மட்டும் தரையில் ஊன்றி, ஒருகாலை மேலே தூக்கிய நிலையில் சமநிலைப்படுத்தப்பட்ட அமைப்பாக உள்ளதைக் காணலாம்.

## 3. புராணச் சிற்பங்கள்

விஷ்ணு கோயில்களில் இதிகாசச் சிற்பங்கள், விஷ்ணு மற்றும் விஷ்ணுவின் அவதாரச் சிற்பங்களை அடுத்து புராணச் சிற்பங்களுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. வைணவக் கோயில்களில் சைவப் புராணங்களின் அடிப்படையிலும் பல சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. எனவே சைவம், வைணவம் என்ற பாகுபாடு இன்றி அனைத்துச் சிற்பங்களும் ஒரே மண்டபத்தில் இடம்பெற்றுள்ளது விசய நகர-நாயக்கரின் சமயப் பொறைக்குச் சான்றாக அமைகிறது.

வடமொழியில் பிரதான புராணங்கள் பதினெட்டு என்று கூறப்பட்டுள்ளன. துணைப் புராணங்கள் பதினெட்டு என்றும் கருதப்படுகின்றன. தமிழில் சிவன் தொடர்பாக திருவிளையாடற் புராணங்கள் இரண்டு உள்ளன. ஒன்று கி.பி. 13, 14-ஆம் நூற்றாண்டுகளில் பெரும்பற்றப்புலியூர் நம்பியாலும், மற்றொன்று கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் பரஞ்சோதி முனிவராலும் எழுதப்பட்டவை. திருவிளையாடற்புராணத்தில் சிவனது சிறப்பான செயல்களைக் குறிப்பிடும் சிற்பங்கள் அதிகமாக மண்டபச் சிற்பங்களில் கையாளப்படுகின்றன.

இங்கு இடம்பெறும் சிற்பங்களை அவை எந்தப் புராணத்தை அடிப்படையாகக் கொண்டு நிறுவப்பட்டுள்ளன எனக் கூறாது புராணங்களில் உள்ள கருத்துக்கள் மட்டுமே எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

புராணச் சிற்பங்களில் வீரபத்ரன், ஊர்த்துவதாண்டவர், காளி, கண்ணப்பநாயனார், சலந்தரன், ரதி-மன்மதன், மோகினி, கருடன், தடாதகைப் பிராட்டி, தக்கன், கார்த்தவீரியார்ச்சுனன் ஆகியோர்து சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன.

### 1. வீரபத்ரன்

வீரபத்ரனது சிற்பம் ஸ்ரீவைகுண்டம், நாங்குனேரி, தாடிக்கொம்பு, கிருஷ்ணாபுரம், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய கோயில்களில் இடம் பெறுகிறது. வீரபத்ரனது சிற்பம் ஒவ்வொரு இடத்திலும் வெவ்வேறு பெயர்களைப் பெற்று விளங்குகிறது.

வீரபத்ரன் தக்கனை வதம் செய்தவற்காக உருவானவர். தக்கன் தான்செய்த பெரிய யாகத்திற்குத் தனது மருமகனான சிவபெருமானை அழைக்காது அவமதித்தார். இதனால் கோபமடைந்த சிவன் ஆணவத்துடன் கூடிய தக்கனை வீரபத்ரனாக மாறி அழிக்கிறார் என்பது வீரபத்ரன் தொடர்பான கதையாகும்.

வீரபத்ரன் சிற்பம் நான்கு கரங்கள் கொண்டு பின்னிருகரங்களில் திரிசூலமும், கதையும் முன்னிரு கரங்களில் அபய, வரத முத்திரையும் கொண்டு இடம்பெறும்.[27] சிற்பங்களின் அடிப்படையில் பார்க்கின்ற போது வீரபத்ரருக்கு இரண்டு முதல் பத்துக் கரங்கள் வரை அமைக்கப்படும் எனத் தெரிகிறது.

வீரபத்ரன் ஜடாமகுடத்துடனும் நான்கு கரங்களுடனும் கோபமான பார்வையுடனும் காணப்படுவார் என்றும் கரங்களில் அம்பு, வில் மற்றும் கத்தி, கேடயம் ஆகியன இடம்பெறும் என்றும் வீரபத்ரன், தக்கன் மீதோ அல்லது தாமரை மலர் மீதோ கால் ஊன்றிக் காணப்படுவார் என்றும் காரண ஆகமம் கூறுகின்றது.[28]

எனவே, தக்கனை அழிக்கவேண்டி கோபத்துடன் உள்ள வீரபத்ரனது கரங்கள் அபயம், வரதம் காட்டவேண்டியது இல்லை என்பதால் முன்னது பொருந்தவில்லை. பின்னதனை மட்டுமே பொருத்தமுடையதாகக் கொள்ளலாம்.

வீரபத்ரனது சிற்பம் தமிழகத்தில் முதன்முதலில் காஞ்சி கைலாசநாதர் கோயிலிலேயே இடம்பெற்றுள்ளது. விசயநகர-நாயக்கர்கால மண்டபங் களில் அதிக அளவில் இடம்பெறும் சிற்பங்களில் வீரபத்ரனும் ஒருவராவார். ஸ்ரீவைகுண்டம், ஸ்ரீவில்லிபுத்தூர், கிருஷ்ணாபுரம், நாங்கு னேரி, ஆகிய இடங்களில் வீரபத்ரன் இரண்டு கரங்களுடன் காணப்படுகிறார். ஒருகாலைத் தக்கன் மீது ஊன்றி மறுகாலைத் தூக்கியபடியும் வலது கையில் நீண்டவாளால் தக்கனைக் குத்தியபடியும் மறுகை கேடயத்துடன் மேலே தூக்கியபடியும், ஜுவாலகேசத்துடனும், மூன்று கண்களுடனும் காட்டப்பட்டுள்ளார். (பார்க்க நி.ப.எண். 13) கபால மாலை அணிந்துள்ளார். ஸ்ரீவில்லிபுத்தூரில் மட்டுமே ஊர்த்துவ முக வீரபத்ரன், நிருத்துவ வீரபத்ரன், அகோரவீரபத்ரன் என மூன்று வீரபத்ரர் சிற்பங்கள் இடம்பெறுகின்றன. இதில் நிருத்துவ வீரபத்ரன், அகோரவீரபத்ரன் ஆகிய இருவரின் காலடியில் தக்கன் உருவம் காணப்படவில்லை. அகோரவீரபத்ரன் ஒரு பெண்ணின் தலை மீது தூக்கிய காலை வைத்துள்ளார். அவரது வலது கரத்தில் உளள வாள் ஆடை நெகிழ்ந்த ஒரு பெண்ணின் தலை மீது உள்ளது. ஊர்த்துவமுக வீரபத்ரரது தூக்கிய காலின் பாதத்தில் ஒரு தலை காட்டப்பட்டுள்ளது. இதனைத் தக்கனது தலையாகக் கொள்ளலாம்.

தாடிக்கொம்பில் வீரபத்ரன் பத்துக் கைகளுடன் காட்டப் பட்டுள்ளார். அனைத்துக் கைகளிலும் ஆயுதங்கள் ஏந்தி தக்கனின் மேல்

நின்று வாளைப் பாய்ச்சுவதுபோல் காட்டப்பட்டுள்ளார். இதில் தக்கனது உருவம் நன்கு செதுக்கப்பட்டுள்ளது.

## 2. ஊர்த்துவ தாண்டவர்

ஊர்த்துவ தாண்டவர் எட்டு அல்லது பதினாறு கைகளுடன் முயலகன் மீது வலது காலைத்தூக்கி ஆடிய நிலையில் இருப்பார்.[29]

தாடிக்கொம்பு கோயிலில் மட்டும் ஊர்த்துவதாண்டவர் சிற்பம் இடம் பெறுகிறது. எட்டுக்கைகளுடன் வலது காலைத்தூக்கி ஆடுகிறார். கீழே முயலகன் கையில் பாம்புடன் படுத்துள்ளார். கீழே இடதுபுறம் காரைக்கால் அம்மையார் இடம்பெறுகிறார். வலதுபுறம் நந்தி மத்தளம் இசைக்கிறார். பேரூர், மதுரை மீனாட்சியம்மன் கோயில் ஆகிய இடங்களில் இடம்பெறும் ஊர்த்துவதாண்டவச் சிற்பங்கள் மிக அழகு வாய்ந்தவை. தாடிக்கொம்பில் ஊர்த்துவதாண்டவருக்கு எதிரே காளி இடம் பெற்றுள்ளது பொருத்தமாக அமைகிறது.

## 3. காளி

காளிக்கு இரண்டுகரங்களோ, எட்டுக்கரங்களோ இருக்கும். தலையில் ஜுவாலகேசம் இருக்கும். கோரைப்பற்கள் இடம்பெறும்.[30]

ஆண்டாள்கோயில், தாடிக்கொம்பு ஆகிய இருகோயில்களில் காளியின் சிற்பம் இடம்பெறுகிறது. தாடிக்கொம்பில் காளியின் தலையில் ஜுவாலகேசம், எண்கரங்கள், கோரைபற்களோடு அதிகமான நடனத் திற்குரிய ஆடை ஆபரணங்களுடன் இடம் பெறுகின்றது. ஏற்கனவே கண்டது போல் ஊர்த்துவதாண்டவருக்கு நேர்எதிரே இடம் பெற்றிருப்பது பொருத்தமாக அமைகிறது.

ஆண்டாள்கோயிலில் இருகரங்களுடன் காணப்படும் காளி சிற்பம் ஒருகை சின் முத்திரையுடனும், மறுகை சூலத்துடனும் இடம்பெறுகிறது. காளிக்கு நேரே திருமாலின் மோகினி அவதாரம் இடம்பெற்றுள்ளது. இங்குக் கோபத்துடன் காளியும், புன்னகையுடன் மோகினியும் என முறையே வெகுளி, நகை எனும் இருவேறு மெய்ப்பாடுகளை எதிர்எதிர் சிற்பங்களில் இடம்பெறச் செய்துள்ளதாகக் கருதலாம்.

## 4. கண்ணப்பநாயனார்

பெரியபுராணத்தில் இடம்பெறும் அறுபத்து மூன்று நாயன்மார்களில் கண்ணப்பநாயனாரும் ஒருவர். இறைவன் மீது முரட்டுத்தனமான, ஆழமான அன்பு கொண்ட கண்ணப்பநாயனாருக்கு திருமெய்யத்தில் சிற்பம் அமைத்துள்ளனர். இச்சிற்பம் இடது தோளில் வில்லும், இடது உள்ளங்கையில் கண்ணும், வலது கையில் உள்ள கத்தியால் தனது கண்ணைத் தோண்ட முயல்வது போலும் அமைந்துள்ளது. காலில் செருப்புடன் நின்ற கோலத்தில் காணப்படும் கண்ணப்பநாயனாரின் கால்களுக்கருகில் சிறிய லிங்கம் இடம்பெற்றுள்ளது. கண்ணப்ப-

நாயனார் சிற்பம் பல கோயில்களில் விசயநகர-நாயக்கர் காலத்தில் இடம்பெற்றது. மதுரை மீனாட்சியம்மன் கோயில் புதுமண்டபத்தில் இத்தகு சிற்பம் இடம்பெற்றுள்ளது.

## 5. சலந்தரன்

சலந்தரன் சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து கடலில் விழுந்த தீப்பிழம்பிலிருந்து உதித்தவன். அவன் அசுரர்களில் சிறந்த வீரனாய் விளங்கினான். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையே ஏற்பட்ட போரில் சிவபெருமானிடம் தோற்றுப்போன இவன் பார்வதியைக் கெடுக்க எண்ணினான். சிவபெருமானின் உருவமெடுத்து மாயச்சிவனாக பார்வதியை அணுகினான். பார்வதி மாயச்சிவனைச் சந்தேகித்தாள். போர் நடவடிக்கைகளை அவ்வப்போது தனது வாகனமான கருடன் மூலம் தெரிந்து கொண்ட மகாவிஷ்ணு சலந்தரனின் மாய வேடத்தையும் புரிந்துகொண்டார். எனவே, ஒரு சாது வேடம் கொண்டு சலந்தரனின் மனைவி பிருந்தாவை (விருந்தா) அணுகி அவள் முன் சலந்தரனாகத் தோன்றி அவளுடன் கூடினார். பின் உண்மை நிலை அறிந்த சலந்தரன் உடனே போர்க்களம் வந்து போரிட்டு மாண்டான்.[31]

சலந்தரனது சிற்பம் திருமெய்யம், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய இடங்களில் இடம்பெறுகிறது. சலந்தரன் இடது தோளில் சிறு வில்லுடன் தனது மீசையைத் தடவியவாறும், வலது கையில் உருவிய வாளுடனும் காணப்படுகிறான். இத்தகு சலந்தரனது சிற்பம் மதுரை மீனாட்சியம்மன் கோயிலில், கண்ணப்பநாயனார் சிற்பத்தின் எதிரே உள்ள தூணில் இடம் பெறுகிறது.

## 6. ரதி – மன்மதன்

இந்து சமயத்தில், ரதியும் மன்மதனும் படைப்பிற்கு ஓர் உந்து சக்தியாக விளங்குபவர்கள் ஆவர். மன்மதனுக்கு காமன் என்ற பெயரும் உண்டு. காமனுக்கெனத் தனியாகச் சமயப் பிரிவு இல்லை என்றாலும் முக்கியக் கடவுளாகக் கொள்ளலாம். காமன் என்ற பெயருக்கு இச்சை என்று பொருள். இவர்கள் பிறரின் மனதில் இச்சையைத் தூண்டி படைப்பிற்கு உதவுகின்றனர்.

ஹரிவம்சத்தில் இலக்குமியின் மகன் காமன் என்று கூறப்பட்டுள்ளது. காமசூத்திரத்தில் மன்மதன் மகிழ்ச்சி மற்றும் காமம் முதலியவற்றை ஊட்டக் கூடியவர் என்று கூறப்படுகிறது.[32]

சிவன் தவம் செய்து கொண்டிருக்கும் போது சிவனிடம் காம உணர்வுகளை ஊட்ட வேண்டி பிரம்மனால் அனுப்பப்பட்ட காமன் தன் மலர் அம்பினால் காம உணர்வினை ஊட்டத் தயாரானதை அறிந்து சிவபிரான் கோபமடைந்து காமனைத் தனது நெற்றிக் கண்ணால் எரித்து விடுகிறார். காமனின் மனைவி ரதி தன் கணவன் இறந்தபின் தான் உயிர்வாழ விரும்பவில்லை என காமனின் தம்பி வசந்தனிடம் கூறும்

போது அசரீரி ஒன்று "சிவனுக்கும் பார்வதிக்கும் எப்பொழுது திருமணம் நடக்கிறதோ அப்பொழுது உன் கணவன் உயிர்பெற்று வருவான். எனினும் பிறர் கண்களுக்குத் தெரியமாட்டான். உன் கண்களுக்கு மட்டும் தெரிவான். அதுவரை உன் கணவனின் சாம்பலைப் பாதுகாத்துவை" என்று கூறியது எனக் காமன் கதையைக் குமாரசம்பவம் கூறும்.[33]

காமனது வடிவத்தைப் பற்றிக் கூறும்போது இவருக்கு இரண்டு, நான்கு அல்லது எட்டுக்கரங்கள் இருக்கவேண்டும். கையில் கரும்புவில் இருக்கும். மேலும், காமனது அம்பானது ஐந்து பூக்களைக் குறிக்கும். மேலும், அது நீலத்தாமரை, மல்லிகை, மாம்பூ, செண்பகப்பூ, சிவிசா எனப் பெயர் பெறும். இவரது கொடி மகரக்கொடி, வாகனம் கிளி அல்லது தேர் என சிவராமமூர்த்தி கூறுகிறார். [34]

சில்பரத்தினம் என்னும் நூலில் காமனுக்கு கைகள் நான்கு எனக் கூறப்பட்டுள்ளது. அவற்றில் பாசம். அங்குசம், மலரம்பு, கரும்புவில் ஆகியன அமைந்திருக்கும் என்றும் தலையில் ரத்தினக் கிரீடத்துடன் தாமரை மேல் இருப்பான் எனவும் கூறுகிறது.[35]

விஷ்ணுதர்மோத்ர புராணம் காமனுக்கு எட்டுக் கரங்கள் என்றும் அவற்றில் சங்கு, சக்கரம், வில், அம்பு ஆகியன இருக்கும். மற்ற நான்கு கரங்கள் அவரது மனைவியரான ரதி, பிரிதி, சந்தி, மகாசக்தி ஆகியோருடைய மார்பகங்களில் இருக்கும் என்கிறது.[36]

தமிழகக் கோயில்களில் காமனது சிற்பம் பல்லவர், முற்காலப் பாண்டியர், சோழர் ஆகியோரது காலத்தில் இடம்பெறவில்லை[37]. விசயநகரர் ஆட்சிக் காலத்தில்தான் மண்டபங்களில் இச்சிற்பம் பெருமளவில் இடம்பெற்றுள்ளது.

இங்கு எடுத்துக்கொண்ட கோயில்களில் திருக்குறுங்குடி, கிருஷ்ணாபுரம், தாடிக்கொம்பு, ஆண்டாள்கோயில், திருமோகூர், அழகர்கோயில், திருமெய்யம் ஆகிய ஏழு கோயில்களில் ரதி-மன்மதன் சிற்பம் இடம்பெற்றுள்ளது. திருமெய்யத்தில் மட்டும் ரதி இன்றி மன்மதன் மட்டும் இடம்பெற்றுள்ளான். பிறகோயில்களில் ரதியும்-மன்மதனும் எதிரெதிரே இடம் பெறுகின்றனர். தாடிக்கொம்பு தவிர பிறகோயில்களில் மன்மதன் சிற்பம் இரண்டு கைகளும் அவற்றில் கரும்புவில், மற்றும் மலரம்பும் கொண்டு காணப்படுகிறது. தாடிக்கொம்பில் ஆறு கைகளுடன் திகழ்கிறான். இவற்றில் வலப்பக்கக் கரங்களில் இரண்டில் மலரம்பும் மற்றொன்றில் அங்குசமும் இடப்பக்கக்கரங்களில் மலர்ச்செண்டும் கரும்புவில்லும் பாசமும் கொண்டு காணப்படுகிறது.

ஸ்ரீவில்லிபுத்தூரிலும், திருக்குறுங்குடியிலும் மன்மதன் சிற்பம் தேர்மேல் நின்றபடி அமைக்கப்பட்டுள்ளது. இதில் ஸ்ரீவில்லிபுத்தூர் தேரோட்டத்திற்குப் பெயர்பெற்ற இடம் என்பதாலோ என்னவோ மன்மதனுடைய தேர் மிக அருமையாகச் செதுக்கப்பட்டுள்ளது.

மேற்கண்டவற்றில் மிக அழகான சிற்பம் திருமோகூர் மன்மதன் சிற்பமாகும். தாடிக்கொம்பு கோயிலில் மன்மதனும்-ரதியும் அக்கிராம மக்களால் மஞ்சள்பூசி வழிபடப்படுகின்றனர். மன்மதன்-ரதி ஆகியோரை வழிபடுவதால் திருமணம் தாமதப்பட்டவர்களுக்கு விரைவில் திருமணம் நடக்கும் என நம்புகின்றனர்.

ரதி சிற்பம் எல்லாக் கோயில்களிலும் அன்னத்தின் மீது ஒருகாலைக் குத்திட்டபடியும் மறுகாலைத் தொங்கவிட்டபடியும் அமர்ந்த நிலையில் விளங்குகிறது. எல்லாச் சிற்பங்களிலும் வலக்கையில் மலரம்புடன் காட்டப்படுகிறாள். இடக்கையைக் காட்டும் போது திருக்குறுங்குடியில் அன்னத்தின் கழுத்திலிருந்து வரும் கயிற்றை இடதுகையில் பற்றியபடியும் கிருஷ்ணாபுரம், ஆண்டாள் கோயில் ஆகிய இடங்களில் கையில் கண்ணாடி வைத்துக் கொண்டும், தாடிக்கொம்பில் கரும்பு வில்லுடனும் காட்டப்பட்டுள்ளாள்.

உத்தரமேரூர் சுந்தரவரதர் கோயிலில் ரதியைத் தழுவியபடி காமன் காட்டப்பட்டுள்ளான்.[38] இத்தகு சிற்பம் இப்பகுதியில் வேறு கோயில்களில் காணப்படவில்லை. இதுவரைகண்ட ரதி-மன்மதன் சிற்பங்களை வைத்துப் பார்க்கின்ற போது ரதி-மன்மதன் சிற்பங்கள் மண்டபச் சிற்பங்களில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளதைக் காண முடிகிறது. எனவே, விசயநகர-நாயக்கர் காலத்தில் ரதி-மன்மதனுக்கு அதிக அளவு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது தெரிய வருகிறது.

## 7. மோகினி

மோகினி என்பது திருமாலின் சிறு அவதாரங்களில் ஒன்றாகும். திருமால் மோகினி உருவம் எடுத்த கதை மச்சயபுராணத்திலும், பாகவதபுராணத்திலும் காணப்படுகிறது[39].

மந்தரமலையை மத்தாகவும், வாசுகி எனும் பாம்பை நாணாகவும் வைத்து அசுரர்கள் பாம்பின் தலைப்பகுதியிலும், தேவர்கள் வால்பகுதியிலும் இருந்து அமுதம் வேண்டிப் பாற்கடலைக் கடைந்தனர். விஷ்ணு அப்போது மோகினி வடிவத்தில் அமிர்த கலசத்துடன் தோன்றினார். தேவர்களையும், அசுரர்களையும் இரண்டு வரிசைகளாக நிற்கச் செய்து முதலில் தேவர்களுக்கு அமிர்தம் அளித்தார். இதன் நோக்கத்தை அறிந்த இராகு மட்டும் உருமாறி தேவர்கள் வரிசையில் நின்று அமிர்தம் வாங்கிப் பருகினார். ஆனால் இதை அறிந்த விஷ்ணு அமிர்தம் இராகுவின் உடலுக்குள் செல்வதற்கு முன்பே தன் சக்கராயுதத்தால் தலையைக் கொய்தார். அசுரர்களுக்கு அமுதம் வழங்காது தேவர்களுக்கு மட்டும் வழங்கினார்[40].

தமிழ் இலக்கியத்தில் ஆழ்வார்கள் மோகினி அவதாரம் பற்றிப் பாடியுள்ளனர். மோகினிச் சிற்பம் காஞ்சி கைலாசநாதர் கோயிலிலும், வைகுந்தப்பெருமாள் கோயிலிலும் காணப்படுகிறது.

இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட கோயில்களில் ஆண்டாள் கோயிலில் மட்டும் மோகினிச் சிற்பம் இடம்பெற்றுள்ளது. மோகினிச் சிற்பமானது நின்ற நிலையில் உள்ளது. மோகினியின் வலப்புறமும், இடப்புறமும் தாடி வளர்த்த இரு முனிவர்கள் மோகினியின் அழகில் மோகித்து நிற்க, கீழே ஒருவன் அமிர்தம் வேண்டி நிற்கிறான். இச்சிற்பத்தின் பக்கவாட்டில் சிவபெருமான் காட்டப்பட்டுள்ளார். சிவனது அழகில் மயங்கியபடி ரிசிபத்தினிகள் ஆடை நெகிழ நிற்கின்றனர். சைவத்திலும் வைணவத்திலும் இறைவனின் அழகையும், பெருமையினையும் கூறும் இக்கதைகள் இரண்டும் ஒரே இடத்தில் இடம்பெறச் செய்திருப்பது சிற்பியின் புராண ஈடுபாட்டையும், அழகுணர்ச்சியையும் வெளிப்படுத்துவதாக அமைகிறது.

## 8. கருடன்

இந்து சமயத்தில் இறைவனுக்கு வாகனங்களாகப் பறவைகளையும், விலங்குகளையும் இடம்பெறச்செய்வர். விஷ்ணுவுக்குக் கருடன், சிவனுக்கு ரிசபம், முருகனுக்கு மயில், வினாயகருக்கு மூசிகம், அக்கினிக்கு ஆடு, இந்திரனுக்கு யானை போன்றவற்றை உதாரணங்களாகக் கூறலாம். வைணவத்தில் கருடனுக்கு முக்கியமான இடம் அளித்திருக்கின்றனர். என்பதை அவர் "பெரியதிருவடி" என்று வைணவசம்பிரதாயத்தில் அழைக்கப்படுவதினின்றும் அறியலாம். எல்லா விஷ்ணு கோயில்களிலும் மகாமண்டபத்தில் அல்லது முன்மண்டபத்தில் விஷ்ணு கருவறையின் நேர் எதிரே இறைவனைப் பார்த்து கருடாழ்வார் சந்நிதி இடம் பெற்றிருக்கும்.

கருடன் காஸ்யபமுனிவருக்கும், வினதாவுக்கும் மகனாகப் பிறந்தவர். காஸ்யபர் காத்ரு எனும் பெண்ணை மணந்து கொண்டு இருவரும் சேர்ந்து வினதையைச் சிறைவைத்தனர். தன்தாயை மீட்கக் கருடன் அமிர்தம் கொண்டுவரச் சென்றான். அமிர்தம் கொண்டுவந்து தன்தாயை அடிமை நிலையிலிருந்து மீட்டான்[39].

ஸ்ரீதத்வநிதி எனும் நூலில் கருடனைப் பற்றிக் கூறும்போது கருடன் மனித உருவில் இருப்பார். ஆனால் மூக்கு மட்டும் கருடனது மூக்குபோல் கூர்மையாக இருக்கும். இரண்டுகைகளும் அஞ்சலியில் இருக்கும் எனக் கூறப்பட்டுள்ளது.[42]

சில்பரத்னம் என்னும் நூலில் கருடனுக்கு இரண்டு கரங்கள் எனவும், அவை அபயத்தில் இருக்கும் எனவும், சில நேரம் எட்டுக் கரங்களுடன் இருப்பார் எனவும் கூறப்பட்டுள்ளது. அவற்றில் அம்பரோசா எனும் அமிர்தமரம், கதை, சங்கு, சக்கரம், கேடயம், கத்தி ஆகியவற்றை ஏந்தியும் மற்ற இரண்டு கரங்கள் வணங்கிய நிலையில் அமைந்திருக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது.[43]

இப்பகுதியில் அழகர்கோயில், திருக்குறுங்குடி ஆகிய இடங்களில் கருடனது சிற்பம் இடம்பெறுகிறது. இவ்விரு இடங்களிலும் இறக்கைகளுடன் கைகள் அஞ்சலி முத்திரையிலும் இடம் பெற்றுள்ளன. அழகர்கோயிலில் கருடனுக்கு முன் திரிவிக்ரமனது சிற்பம் இடம்பெற்றுள்ளது என்பது முன்னரே குறிப்பிடப்பட்டது. திருக்குறுங்குடியில் மண்டபத்தின் வாயிலில் இருமருங்கிலும் கருடன், அனுமன் சிற்பங்கள் இடம் பெற்றிருக்கின்றன. இவை இரண்டும் முறையே பெரிய திருவடி, சிறிய திருவடிகளாகும்.

## 9. தடாதகைப்பிராட்டி

திருவிளையாடற் புராணத்தில் தடாதகைப்பிராட்டி கதை இடம் பெறுகிறது. மலையத்துவச பாண்டியனின் மகளாகப் பிறந்த தடாதகைப்பிராட்டி பிறக்கும் போது மூன்று மார்பகங்களுடன் பிறந்ததால் பாண்டியன் சோகத்தில் ஆழ்கிறான். அப்போது அசரீரி "எப்போது இவள் தன் கணவனைக் காண்கிறாளோ அப்பொழுது ஒரு மார்பகம் மறையும்" எனக் கூறியது. இதைக் கேட்ட மலையத்துவச பாண்டியன் மகிழ்ந்தான். பின்னர் சிவபெருமானைக் கண்ட போது தடாதகையின் ஒரு மார்பகம் மறைய சிவபெருமானை மணந்தாள் என திருவிளையாடற்புராணம் கூறும்[44].

தடாதகைப்பிராட்டியின் உருவம் திருக்குறுங்குடி, கிருஷ்ணாபுரம் ஆகிய இடங்களில் இடம்பெற்றுள்ளன. இவ்விரண்டு இடங்களிலும் ஒருகையில் அறுத்த மார்பகத்துடனும், மறுகையில் மலர் மொட்டுடனும் தலையில் கிரீடத்துடனும் காட்டப்பட்டுள்ளாள். மார்பில் மூன்று மார்பகங்கள் இல்லை என்பதால் இச்சிற்பத்தைத் தடாதகைப்பிராட்டி எனக் கூறமுடியவில்லை. இருப்பினும் கையில் ஒருமார்பகத்துடன் காட்டப்பட்டிருப்பதால் இது தடாதகைப்பிராட்டி என்று அப்பகுதியில் வழங்கப்படுகிறது.

கிருஷ்ணாபுரத்தில் இச்சிற்பம் மண்டபத்தின் முனையில் அமைந்துள்ளது. இதனுடன் தொடர்புடைய சிற்பம் அடுத்த முனையில் அமைந்துள்ளது. இரண்டும் ஒரே உருவ அமைப்பில் உள்ளன. ஆனால் கையில் மார்பகம் இன்றி மாலையுடன் காட்சி தருகிறாள். இது தடாதகையின் திருமணக் கோலமாக நினைக்கத் தோன்றுகிறது.

## 10. தக்கன்

இச்சிற்பம் திருக்குறுங்குடியில் மட்டும் இடம்பெற்றுள்ளது. இச்சிற்பமும் திருவிளையாடற்புராணத்தைப் பின்பற்றியே அமைக்கப் பட்டுள்ளது. மேலும், இச்சிற்பம் வீரபத்ரன் சிற்பத்திற்கு எதிரே அமைந்துள்ளது. கைகளில் வில் மற்றும் வாளை ஏந்தியபடி காட்டப் பட்டுள்ளது. இச்சிற்பவமைதி வீரபத்ரனுடன் போர்புரிய வேண்டி தக்கன் வீரபத்திரனை எதிர்த்து நிற்பதாகக் கொள்ளலாம்.

### 11. கார்த்தவீரியார்ச்சுனன்

கார்த்தவீரியார்ச்சுனன் ஆயிரம் கைகள் கொண்டவன். இவன் இராவணனையே சிறையிலடைத்த பெருமை பெற்றவன். எனினும் பரசுராமனிடம் தோற்றவன்.

இத்தகு கார்த்தவீரியார்ச்சுனன் சிற்பம் தாடிக்கொம்பில் சக்கரத்தாழ்வாருக்கு எதிரே பதினாறு கைகளுடன் இடம்பெற்றுள்ளது. இது கார்த்தவீரியார்ச்சுனன் தான் என அறுதியிட்டுக் கூறுவதற்கான அகச் சான்றுகள் எதுவும் இச்சிற்பத்தில் இடம்பெறவில்லை.

இதுவரை கண்ட புராணச் சிற்பங்களிலிருந்து மக்களிடையே செல்வாக்குப் பெற்ற புராணங்களிலிருந்து சிற்பங்கள் எடுத்தாளப் பட்டுள்ளன என்பதை அறியமுடிகின்றது. ரதி-மன்மதன் சிற்பங்கள் அதிக அளவில் கையாளப்பட்டுள்ளன. சைவ, வைணவ வேறுபாடின்றி வைணவக் கோயில்களில் சைவம் தொடர்பான சிற்பங்களையும் இடம்பெறச் செய்துள்ளனர்.

## 4. நாட்டார் வழக்காற்றியல் சிற்பங்கள்

விசயநகர-நாயக்கர் ஆட்சிக்காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த புராண, இதிகாச, அவதாரங்கள் முதலியன தொடர்பான சிற்பங்கள் மண்டபங்களில் இடம்பெற்ற பாங்கினை இதுவரை கண்டோம். அதுபோலவே, இவர்களது காலத்தில் நாட்டார் வழக்காற்றியல் சிற்பங்களும் மண்டபங்களில் அதிக அளவு இடம்பெற்றன. இவ்வேந்தர்கள் தமிழகத்திற்கு வந்த போது அந்நாட்டுக்கலைகள் இங்கு புதுமையான கலைகளாக இருந்ததனால் மக்களிடம் அதிக செல்வாக்குப் பெற்றன. மக்களிடம் செல்வாக்கு பெற்ற அல்லது அவ்வாறு மக்களுடன் இரண்டறக்கலந்த கலை மற்றும் கலைஞனை சிற்பங்களில் இடம்பெறச் செய்தனர். மக்களது அன்றாட வாழ்வில் கலந்தவர்கள்தான் வேடன், நாடோடி, நாடோடிப்பெண், குறவன், குறத்தி, முதலியோர். எனவே, இவர்களது சிற்பங்கள் மண்டபங்களில் இடம்பெற்றுள்ளன.

### 1. வேடன்

வேடன் சிற்பம் நாங்குனேரி, ஸ்ரீவைகுண்டம் ஆகிய இடங்களில் இடம்பெற்றுள்ளது. ஏந்திய வலக்கை வாள் தாங்கியுள்ளது. இடது கையில் உள்ள (வில் அல்லது ஊதும் கொம்பு போன்ற கருவி) கருவி ஒடிந்துள்ளது. இடுப்பில் சிறு கத்தி, தொங்கிய மீசை, காலில் வீரக்கழல் கொண்டு இடம்பெற்றுள்ளன. காலிரண்டிலும் சலங்கை காட்டப்பட்டுள்ளது. (பார்க்க நி.ப.எண்: 14) ஸ்ரீவைகுண்டத்தில் வேடனுக்குக் கீழ் உள்ள பீடத்தில் பாம்பு இடம்பெற்றுள்ளது. நாங்குனேரியில் வேடனது பின்பக்கம் ஒருவன் இடம்பெறுகிறான். இவன் ஒருகையில் தண்டும் மறு கையில் கழியுடனும் காணப்படுகிறான். இவனை நாட்டார் வழக்காற்றியல் கூத்துக்களில் இடம்பெறும் கோமாளியாகக் கருதலாம்.

## 2. நாடோடி

நாடோடிச் சிற்பம் திருக்குறுங்குடி, கிருஷ்ணாபுரம், திருமெய்யம் ஆகிய இடங்களில் இடம்பெற்றுள்ளது. மூன்று இடங்களிலும் நாடோடி இளவரசி ஒருத்தியைத் தன் இடது தோள்மீது தூக்கிவைத்துக் கொண்டு ஓடுவதுபோல் அமைந்துள்ளது. நாடோடி வலக்கையில் வாளைத் தூக்கியபடியும் இடதுகையில் வில்லுடன் இளவரசியின் காலைப்பிடித்துக் கொண்டும் உள்ளான். (பார்க்க நி.ப.எண். 15) இளவரசி ஒருகையால் நாடோடியின் கொண்டையைப் பிடித்துக் கொண்டு மறுகையால் வேகமாக ஓடு என்று கூறுவது போல் கையை உயர்த்தியபடியும் உள்ளாள். இவற்றில், கிருஷ்ணாபுரத்தில் இளவரசி சிரித்த முகத்துடன் காணப்படுகிறாள். மேலும், இவளது தலைக்கு மேலே முக்காடிட்ட சீலை காற்றில் பறப்பது போன்று கல்லில் செதுக்கியுள்ள பாங்கு விசயநகர-நாயக்கர் காலக் கலைச்சிறப்பிற்கு சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறது. இதில் இடம்பெறும் இளவரசி ஒருவேளை நாடோடியின் காதலியாக இருந்து அவன் தூக்கிச் செல்ல இசைந்ததுடன் வேகமாகச் செல் எனக் கூறுவதாகக் கொள்ளலாம். திருக்குறுங்குடி மற்றும் கிருஷ்ணாபுரத்தில் நாடோடிச் சிற்பத்தின் இரு மருங்கிலும் குதிரையில் வீரர்கள் கையில் வேலுடன் பாய்ந்து வருவது போல் செதுக்கப்பட்டுள்ளனர். திருமெய்யத்தில் மட்டும் இத்தகு அமைப்பு இல்லை. இந்நாடோடிச் சிற்பத்திற்கு இணையாக நாடோடிப் பெண் சிற்பம் அதே வரிசையில் பக்கவாட்டில் இடம்பெற்றுள்ளது.

## 3. நாடோடிப் பெண்

நாடோடிக்கு இணையாக அமைந்துள்ள சிற்பம் நாடோடிப் பெண் சிற்பமாகும். இச்சிற்பம் திருக்குறுங்குடி, கிருஷ்ணாபுரம் ஆகிய இடங்களில் அமைந்துள்ளது. நாடோடிப் பெண் மேலாடை இன்றித் தன் இடது தோளில் இளவரசனைத் தூக்கிக் கொண்டு ஓடுவதுபோல் காணப்படுகிறது. அவள் ஒருகையால் இளவரசனது காலைப் பிடித்துக் கொண்டும், மறு கையில் கிளியினைப் பிடித்துக்கொண்டும் காணப்படுகின்றாள். (பார்க்க நி.ப.எண். 16) கிருஷ்ணாபுரத்தில் இளவரசன் ஒரு கையில் வாள் ஏந்தியபடி, தலையில் கிரீடத்துடன் காட்டப்பட்டுள்ளான்.

கிருஷ்ணாபுரத்தில் இச்சிற்பத்திற்கு ஒருபுறம் வீரன் ஒருவன் நாடோடிப் பெண்ணைத் துரத்தும் காட்சியும், தூணின் பின்பக்கம் குறத்தி மற்றொரு பெண்ணுக்குக் குறி சொல்லும் காட்சியும், தூணின் பக்கவாட்டில் ரதி அன்னத்தில் அமர்ந்து கையில் உள்ள மலர் அம்பை நாடோடிப் பெண் மீது எறிவது போன்றும் செதுக்கப்பட்டுள்ளது. சமூகத்தில் உயர்ந்தவர் தாழ்ந்தவரைக் காதலிப்பதும், தாழ்ந்தவர் உயர்ந்தவரைக் காதலிப்பதும் இருந்து கொண்டுதான் வந்துள்ளது என்பதையே சிற்பி இங்கு சிற்பங்களில் காட்டியுள்ளார்.

## 4. குறவன்

குறவன், குறத்தி என்பவர் இன்றளவும் சமுதாயத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சேர்ந்தவர்களாவர். குறவன், குறத்தி வேடமிட்டு நாட்டுப்புற ஆட்டங்களில் ஆடும் நிகழ்ச்சியை இன்றைய திருவிழாக்களில் காணலாம். எனவே, குறவன், குறத்தி ஆகியோர் விசயநகர-நாயக்கர் கால மண்டபச் சிற்பங்களில் இடம்பெறுவதால் அக்காலத்தில் அவர்கள் கலைகளோடு தொடர்பு கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகிறது. தமிழ் இலக்கியத்தில், குறிப்பாக சங்க இலக்கியத்தில் குறிசொல்லுதல் என்ற ஒரு துறை இடம்பெறுகிறது. தொல்காப்பியத்தில் மலையும் மலைசார்ந்த பகுதியான குறிஞ்சி நிலத்திற்குரிய கருப்பொருள்களைப் பற்றி கூறும்போது அந்த நிலத்து மக்களாகக் குறவனும் குறத்தியும் கூறப்பட்டுள்ளனர்.[45].

இதற்கடுத்ததாகச் சிற்றிலக்கியங்களில் குறவன், குறத்தி பற்றிய குறிப்புகள் அதிகமாக இடம்பெறுகின்றன. சிற்றிலக்கிய காலம் என்பது நாயக்கர் காலமே. எனவே, நாயக்கரது ஆட்சிக்காலத்தில் சிற்றிலக்கியங்கள் பல தோன்றின. அதில் குறவஞ்சி என்பது ஒரு வகை சிற்றிலக்கியம். இது குறத்தி குறி சொல்வதை வைத்து எழுதப்பட்டதால் இவ்வாறு பெயர்பெற்றது. குறவஞ்சி வகையில் திருக்குற்றாலக்குறவஞ்சி சிறந்த படைப்பாகும். இதில் குறவன் குறத்தியின் அழகு மிக அருமையாகக் கூறப்பட்டுள்ளது.

இக்காலகட்டத்தினைச் சேர்ந்த நாயக்கர் கால மண்டபங்களில் தான் குறவன், குறத்தி சிற்பங்கள் அதிகம் இடம்பெற்றுள்ளன. எனவே, நாயக்கரது ஆட்சிக் காலத்தில் சமூகத்தில் குறவர்கள் முக்கிய இடத்தை வகித்துள்ளனர் எனலாம். மேலும், அரசர்களோடு அவர்களுக்கு ஏதேனும் தொடர்புகள் இருந்திருக்கலாம். ஒற்றர்களாகக் கூட குறவன், குறத்தியர் செயல்பட்டிருக்கலாம். எனவேதான் இவர்கள் சிற்பங்களில் இடம் பெற்றனர்.

குறவனது சிற்பம் திருக்குறுங்குடி, திருமெய்யம், மன்னார்கோயில் ஆகிய இடங்களில் காணப்படுகிறது. குறவன் பக்கவாட்டுக் கொண்டை, முறுக்கிய மீசை, சிரித்தமுகம், மார்பில் பலவிதமான பாசிகளாலான மாலை, முதுகில் ஒருபை, இடது கையில் ஈட்டியும், அவ் ஈட்டி புலியின் மேல் குத்தியபடியும் உள்ளன. ஈட்டியின் மேற்பகுதியில் குரங்கு ஒன்று உள்ளது. வலது கையில் உடும்பைப் பிடித்து வைத்துள்ளான். கால்சட்டை அணிந்துள்ள குறவனின் தோளில் கிளி அமர்ந்துள்ளது. குறவனுக்குக் கீழே குரங்கு ஒன்று நிற்கிறது. பக்கவாட்டில் குறத்தி தன் குழந்தையின் தலையில் கைவைத்தபடி நிற்கிறாள்.

திருமெய்யத்தில் இதேபோல் காணப்படும் குறவன் வலக்கையில் உள்ள ஈட்டியால் ஆமையைக் குத்தியபடியும், இடக் கையால் குரங்கைக் கயிற்றால் கட்டி இழுத்துச் செல்வது போலவும், இடது தோளில் தேன்

சேகரிக்கும் கூட்டைத் தாங்கியபடியும் உள்ளான். மன்னார்கோயிலில் குறவனின் கைகள் ஒடிந்துள்ளன. முறுக்கிய மீசையுடனும் தலையில் கொண்டையுடனும் காணப்படுகிறான். இம்மூன்று குறவன் சிற்பங்களிலும் திருக்குறுங்குடி குறவன் சிற்பம் மிக அழகுறச் செதுக்கப்பட்டுள்ளது.

## 5. குறத்தி

குறத்தியின் சிற்பம் திருக்குறுங்குடி, திருமெய்யம், மன்னார்கோயில் ஆகிய இடங்களில் இடம்பெற்றுள்ளது. திருக்குறுங்குடியில் இடது கையில் பன ஓலையினால் முடைந்த கூடையை இடுக்கியபடி, தோளில் குழந்தையை வைத்துக் கொண்டு கையில் உணவுப் பாத்திரத்தை ஏந்தி நிற்க, மேலே உள்ள குழந்தை அவ்வுணவை எடுத்துத்தின்பது போல் செதுக்கப்பட்டுள்ளது. குறத்தியின் மற்றொரு கை கீழே நின்றிருக்கும் குழந்தையின் தலையில் உள்ளது.

திருமெய்யத்தில் குறத்தி, இடது பக்கத்தில் முடைந்த கூடையை வைத்துக் கொண்டும், வலது கையில் குழந்தையை ஏந்தியவாறும் இடம் பெறுகிறாள். தோளில் மற்றொரு குழந்தை இடம்பெற்றுள்ளது.

மன்னார்கோயிலில் குறவன் இடம்பெறும் சிற்பத்தின் பக்கவாட்டில் குறத்தி இடம்பெறுகிறாள். தாடிவைத்த ஒருவர் குறத்தியின் தனங்களைப் பற்றிய வண்ணம் காட்டப்பட்டுள்ளார்.

மேற்கண்ட மூன்று குறத்திகளில் மிகவும் இயற்கையாகச் செதுக்கப்பட்டுள்ளது திருக்குறுங்குடிக் குறத்தியே ஆகும். அவளுடன் குறவர்கள் பயன்படுத்தும் பொருட்களும் நேர்த்தியாகச் செதுக்கப்பட்டுள்ளமை மேலும் அதற்கு அணி சேர்ப்பதாக அமைந்துள்ளது.

நாட்டார் வழக்காற்றியல் சிற்பங்களில் இத்தகு ஆள்உயர சிற்பங்கள் தவிர இச்சிற்பங்களின் பின்புறமும், பக்கவாட்டிலும் சிறு வடிவில் நாட்டார் வழக்காற்றியல் சிற்பங்கள் இடம்பெறுவதுண்டு. இவைகள் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயிலிலும், கிருஷ்ணாபுரம் கோயிலிலும், இடம்பெற்றுள்ளன. இவற்றில் குறத்தி குறிசொல்லுதல், கழைக்கூத்தாடி, மற்றும் சாட்டையால் உடம்பை அடிக்கும் கல்லுளிமங்கன் ஆகிய சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

குறத்தி குறி கூறும் சிற்பம் கிருஷ்ணாபுரத்தில் நாடோடிப் பெண் சிற்பம் இடம்பெறும் தூணின் பின்பக்கம் இடம்பெற்றுள்ளது. இதில் ஒரு குறத்தி தன் கையில் கோளுடன் மற்றொரு பெண்ணின் கையைப் பிடித்துக்குறி சொல்வதாக அமைந்துள்ளது. இருவரும் அமர்ந்த நிலையில் உள்ளனர். இச்சிற்பம் அக்காலத்திலிருந்து இன்றுவரை சமூகத்தில் இருக்கும் பழக்க வழக்கத்தைக் கூறுவதாக அமைந்துள்ளது.

ஸ்ரீவில்லிபுத்தூரில் மோகினி சிலையின் பின்பக்கம் கழைக்கூத்தாடி சிற்பம் இடம்பெற்றுள்ளது. 'கழை' என்பது மூங்கில் ஆகும். எனவே மூங்கிலை வைத்து ஆடப்படும் கூத்து 'கழைக்கூத்து' எனப்படுகிறது. ஒரு கழைக் கூத்தாடி தன்னைச் சமநிலைப்படுத்தி நிற்கிறான். ஒரு பெண் கீழே அமர்ந்து மத்தளம் போன்ற கருவியைத் தட்டுகிறார். அதற்கேற்றபடி அவன் நடனமாடுவது போல் காணப்படுகிறது.

இக்கழைக் கூத்து இன்றளவும் நடைமுறையில் இருந்து வருகிறது. வித்தை காட்டுபவர்கள் (சர்க்கஸ்) அதிகமாக இதனைச் செய்கின்றனர்.

மோகினிச் சிற்பத்திற்கு அடுத்துள்ள நடனமாது சிற்பத்தின் இடப்புறம் ஒரு பெண் சாட்டையைக் கையில் சுற்றியபடி இடம் பெறுகிறாள். இது இன்று சாட்டையால் தன்னை அடித்து உடம்பிலிருந்து ரத்தத்தைச் சிந்தவைத்து அதன் மூலம் காசு வாங்கிப் பிழைப்பு நடத்தும் கல்லுளிமங்கன் கலையை நினைவுபடுத்துவது போல் உள்ளது. கல்லுளிமங்கன், கழைக்கூத்தாடி ஆகியன அனைத்தும் நாட்டார் வழக்காற்றியல் தொடர்பானவை ஆகும்.

இத்தகைய சிறு சிற்பங்கள் செய்வது சிற்பியின் விருப்பத்தைப் பொறுத்தது ஆகும். அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த சுதந்திரமே இத்தகைய கழைக்கூத்துக்களை சிற்பங்களில் செதுக்கக் காரணமாக அமைந்தது.

நாட்டார் வழக்காற்றியல் சிற்பங்களான வேடன், குறவன், குறத்தி, நாடோடி, முதலிய சிற்பங்கள் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளன. கழைக்கூத்தாடி, கல்லுளிமங்கன் முதலான சிற்பங்கள் தூண்களின் பக்கவாட்டில் சிறு சிற்பவடிவில் இடம்பெற்றிருப்பதால் இவற்றிற்கு இரண்டாவது இடத்தை அளித்துள்ளான் சிற்பி. முதலில் கூறப்பட்டவர்கள் அரண்மனையுடன் தொடர்புடையவர்களாகக் கொள்ளலாம். இரண்டாவது கூறப்பட்டவர்கள் பெரும்பாலும் மக்களுடன் அதிகம் தொடர்பு கொண்டுள்ளவர்கள் எனக் கருதலாம்.

## 5. பிற சிற்பங்கள்

மேற்கண்ட சிற்பங்கள் தவிர அவற்றுடன் தொடர்பின்றி அமைந்துள்ள சில சிற்பங்கள் மண்டபங்களில் இடம்பெற்றுள்ளன. அவற்றை இங்குக் காணலாம்.

### 1. நடனமாது

நாங்குனேரி, ஆழ்வார்திருநகரி, கிருஷ்ணாபுரம், ஆண்டாள் கோயில் ஆகிய இடங்களில் நடனமாது சிற்பம் இடம் பெற்றுள்ளது.

நாங்குனேரியில் நடனமாதின் கைகளில் ஒன்று தர்ஜனியிலும், மறு கை தோலகஸ்தத்திலும் வைத்து நடனமாடுவது போல் செதுக்கப் பட்டுள்ளாள். கிருஷ்ணாபுரம், மற்றும் ஆழ்வார்திருநகரியில் இதேபோல் சதுரதாண்டவ நிலையில் காட்டப்பட்டுள்ளாள்.

நாங்குனேரியிலும், கிருஷ்ணாபுரத்திலும் நடனமாது நின்ற நிலையில் இடம்பெற்றுள்ளாள். இவற்றுடன் தொடர்புடைய சிற்பம் ஏதும் அருகில் இடம்பெறவில்லை. ஆழ்வார்திருநகரியில் ஒரே மண்டபத்தில் ஒரே மாதிரியான மூன்று நடனமாது சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

அக்காலத்தில் கோயில்களில் நடனமாதர்கள் இருந்துள்ளனர். இவர்கள் தேவரடியார் என அழைக்கப்பட்டனர். இவர்கள் கோயில்களோடும், விழாக்களோடும் நெருங்கிய தொடர்புடையவர் களாக இருந்தனர். இவர்கள் இறைவனுக்குச் செய்யும் தொண்டில் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர்களாவர். இவர்கள் விழாக் காலங்களில் இறைவன் திருவீதிவுலா வரும் போது இறைவன் முன்னர் ஆடிக்கொண்டு வருவர். இறைப்பணியில் இவர்களது பணி சிறப்பிடம் பெற்றிருந்ததனால் இவர்களது உருவங்களைச் சிற்பங்களில் இடம் பெறச் செய்வதன் மூலம் கௌரவிக்கப்பட்டுள்ளனர் எனலாம். மேலும், மண்டபச்சிற்பங்கள் அமைக்கும் பொழுது இடத்தை நிரப்புவதற்காக வேண்டியும் நடனமாதர்களில் சிற்பம் இடம் பெற்றிருக்கலாம்.

ஆண்டாள்கோயிலில் மேற்கண்ட நடனமாதுக்களைப் போல் அல்லாது ஒரு நடனமாது அருகில் தன்னைவிட அளவில் சிறிய பெண்ணைத்தழுவிய நிலையில் உள்ளாள். வலக்கையில் மலரும், இடக்கை அப்பெண்ணின் தோளின் மீதும் இடம்பெறுகிறது. இச்சிற்பத்தின் பக்கவாட்டில் உடுக்கடிக்கும் ஒரு பெண்ணும், நட்டுவனார் கையில் சிறு கோலுடன் இடம்பெறுகின்றனர். இது முன்னர் சொன்ன தேவதாசி முறையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். தாயான தேவதாசி தனது மகளை நாட்டியம் பயில அழைத்து வருவதாகக் கருதலாம்.

## 2. விறலி

விறலி என்பது பாணன், பாடினி போல் இசைக்கருவியை மீட்டிப் பிறரை இன்பமடையச் செய்யும் ஒரு பெண் கலைஞரைக் குறிக்கும். சங்க இலக்கியங்களில் பாணர்களை பற்றிச் சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை என்ற நூல்கள் விளக்குவதுபோல் பொருணராற்றுப் படை விறலியைப் பற்றிப் பேசுகிறது. விறலியின் அழகு இதில் வர்ணிக்கப்படும்.

இதேபோல் பிற்காலத்தில் எழுந்த சிற்றிலக்கியங்களில் குறிப்பாகத் தூது எனும் இலக்கியவகையில் விறலிவிடுதூது என்ற இலக்கியமே உருவாகியுள்ளது.

விறலி சிற்பம் ஆண்டாள்கோயில் மற்றும் ஆழ்வார்திருநகரியில் இடம்பெற்றுள்ளது. ஆண்டாள்கோயிலில் இடம்பெற்றுள்ள விறலி கையில் வீணை போன்ற இசைக்கருவியை வைத்து மீட்டுவது போல் நின்ற நிலையில் இடம்பெறுகிறாள். இச்சிற்பத்திற்குக் கீழே சிறு அளவில் நடனமாது நாட்டியம் ஆடுவது போல் செதுக்கப்பட்டுள்ளாள்.

இச்சிற்பத்தை இரெங்கம்மாள் தனது ஆய்வேட்டில் கலைவாணி என அடையாளம் காட்டியுள்ளார்.[46] ஆனால், கலைவாணி எனில் நான்கு கரங்களும், அவற்றில் ஒருகையில் அக்கமாலையும், ஒருகையில் புத்தகமும் இருக்கும். மற்ற இரண்டு கரங்களில் வீணை வாசிப்பது போல இடம்பெறும்.[47] எனவே, கலைவாணி என்று கூறல் இங்குப் பொருத்தமுடையதாக அமையவில்லை. எனவே, இச்சிற்பம் விறலியின் சிற்பமாயிருக்க வேண்டும். *(பார்க்க நி.ப.எண். 12)*

இதேபோன்ற சிற்பம் மதுரை மீனாட்சிசுந்தரேசுவரரர் ஆலயத்திலுள்ள ஆயிரக்கால்மண்டபத்தில் இடம்பெற்றுள்ளது. இச்சிற்பத்தைத் தேவகுஞ்சரி சரஸ்வதி என்றும்[48] ஏ.வி.செயச்சந்துருன்[49] விறலி என்றும் கூறிச் செல்கின்றனர். இவற்றில் செயச்சந்துருவின் கருத்தே ஏற்புடையதாக அமைகிறது.

ஆண்டாள்கோயிலில் இடம் பெற்றுள்ள விறலி சிற்பத்திற்கு எதிரே நடனமாது சிற்பம் இடம் பெற்றிருப்பது பொருத்தமாக அமைகிறது.

ஆழ்வார் திருநகரியில் விறலியின் ஒரு கை இசைக்கருவியுடனும் மற்றொரு கை தூக்கிய நிலையில் ஒடிந்தும் காணப்படுகிறது.

### 3. பணிப்பெண்

திருமெய்யம், திருக்குறுங்குடி, மன்னார்கோயில் ஆகிய இடங்களில் பணிப்பெண் சிற்பம் அமைந்துள்ளது.

திருமெய்யத்தில் ஒருபெண் கையில் சாமரத்துடன் காணப் படுகின்றாள். மற்றொரு பெண் கையில் விளக்குடன் இடம் பெற்றுள்ளாள்.

திருக்குறுங்குடியில் குறவன், குறத்தி சிற்பத்திற்குப் பின்பக்கம் அரசு உருவங்கள் அமைந்துள்ளதால் பக்கவாட்டில் பணிப்பெண் இருவர் சாமரத்துடன் இடம்பெற்றுள்ளனர்.

மன்னார்கோயிலில் கொடிமண்டபத்தில் இரு பெண்கள் இடம் பெறுகின்றனர். இவர்களில் ஒருத்தி கையில் விளக்கு ஏந்திய வண்ணம் உள்ளாள். இவ்விளக்கு மார்பகத்தை ஒட்டி இடம்பெற்றுள்ளது. மார்பகத்தின் மேல் சிறு துவாரமும், மார்பகமுனையில் ஊசித்துவாரமும் உள்ளன. மார்பின் மேலுள்ள துவாரத்தின் வழியாக எண்ணெய் ஊற்றிவிட்டால் சிறுதுவாரத்தின் வழியாக எண்ணெய் விளக்கிற்குச் சென்று தொடர்ந்து விளக்கு எரியுமாறு செய்துள்ளனர். இச்சிற்பம் "தூண்டாமணி விளக்கு" என்றும், "பால்விளக்குப்பாவை" என்றும் அழைக்கப்படுகின்றது. எதிரிலிருக்கும் பெண் சிற்பம் மங்களப் பொருட்களுடன் கூடிய தட்டை ஏந்தியபடி நிற்கிறது. (தற்பொழுது தட்டு இல்லை, ஒடிந்துள்ளது) இச்சிற்பம் கோயிலுக்கு வருவோரை வரவேற்பதாக அமைகிறது.

அக்காலத்தில் கோயில்களில் இடம் பெறுகின்ற இத்தகு சிற்பங்கள் கோயிலில் பணிபுரியும் பணியாளர்கள் மற்றும் இறைவனுக்குத் தொண்டு செய்த தேவரடியார்களது சிற்பங்களாக இருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது.

## 4. அரச உருவங்கள்

அரச உருவங்களை மண்டபங்களில் இடம் பெறச் செய்யும் வழக்கம் பல்லவர் காலம் முதலே இருந்து வந்துள்ளது. காஞ்சிபுரம் வைகுண்டப் பெருமாள் எனும் காஞ்சி பரமேஸ்வர விண்ணகரத்தில் பல்லவர் வரலாறு முழுவதுமே தொடர்சியாகச் சிற்பமாகச் செதுக்கப் பட்டிருக்கிறது.[50] அதே போல் சோழர் காலத்திலும் பல கோயில்களில் அரச உருவங்கள் இடம்பெற்றுள்ளன. உதாரணமாக தஞ்சாவூர் மாவட்டம் செம்பனார் கோயிலில் இடம்பெற்றுள்ள முதலாம் ஆதித்தனின் உருவச்சிலை, திருவாவடுதுறை கோமுகீசுவரர் கோயிலில் இடம்பெறும் முதலாம் பராந்தகனது உருவச்சிலை ஆகியவற்றைக் கூறலாம்.[51] விசயநகர-நாயக்கர் காலத்தில் மண்டபங்களில் ஆள் உயர அரச சிற்பங்கள் அமைக்கும் வழக்கம் பெருவளர்ச்சியுற்றது. அந்தந்த மண்டபங்களைக் கட்டியவர்களுடைய சிற்பங்களை அம்மண்டபத் தூண்களில் அமைப்பது மரபு. இத்தகு சிற்பங்கள் தாடிக்கொம்பு, திருமெய்யம், ஆண்டாள்கோயில், கூடலழகர் கோயில் அழகர் கோயில், திருப்புல்லாணி, திருக்கோட்டியூர், நாங்குனேரி, திருமோகூர், ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி, திருக்குறுங்குடி போன்ற பல கோயில்களில் காணலாம். ஆனால், இவர்களுடைய பெயர்களை அறிய இயலவில்லை. இச்சிற்பங்கள் அனைத்தும் பெரிய தொப்பையுடன் கூடிய வயிறு, தலையில் முன்பக்கம் நீண்டுள்ள கிரீடம் என்ற அமைப்புடன் காணப்படுவதால் இவை நாயக்கமன்னரது சிற்பங்கள் எனக் கூறலாம்.

மதுரை மீனாட்சியம்மன் கோயிலுக்கு முன்னுள்ள புதுமண்டபத்தில் பல நாயக்க மன்னர்களின் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. இவை மதுரையை ஆண்ட விசுவநாத நாயக்கர் முதல் திருமலை நாயக்கர் வரையிலான அரசர்களது சிற்பங்கள் என வழிவழியாகக் கூறப்படுகிறது.[52]

திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டம் இடைக்கால் கிராமத்தில் உள்ள சிவன் கோயில் நாயக்க மன்னரது காலத்தில் காளிங்கன் என்னும் மந்திரியால் கட்டப்பட்டதாகும். இக்கோயிலில் இடம்பெறும் வினாயகர் கோயில் தூணில் உள்ள காளிங்கரது சிற்பத்திற்குக் கீழ் காளிங்கன் என்ற பெயர் கல்லில் வெட்டப்பட்டுள்ளது. இவ்வாறு பெயருடன் இடம்பெறும் சிற்பங்கள் மிகக் குறைவே.

இப்பகுதியில் மண்டபங்களில் தனித்து இடம்பெறும் சிற்பங்கள் பற்றிப் பேசப்படவில்லை. மண்டபத்தில் இடம்பெறும் பிற சிற்பங்களுக்கு இடையே இடம்பெறும் அரசர்களது சிற்பங்கள் பற்றி

மட்டும் நோக்குவோம். இங்கு இடம்பெறும் கோயில்களில் திருமெய்யம், மன்னார்கோயில், திருக்குறுங்குடி ஆகிய இடங்களில் மட்டும் அரச உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவை திருமெய்யத்தில் அஞ்சலியில் இடம்பெறுகிறது. மன்னார்கோயிலில் நான்கு அரச உருவங்கள் காணப்படுகின்றன. இவை அஞ்சலியிலும் பக்கவாட்டில் சாமரம் வீசும் பணிப்பெண்களும் இடம் பெறுகின்றனர்.

திருக்குறுங்குடியில் உள்ள மண்டபத்தின் வெளிப்பக்கம் இதிகாச. சிற்பங்கள், அவதார சிற்பங்கள் மற்றும் நாட்டார் வழக்காற்றியல் சிற்பங்கள் ஆகியன இடம்பெற்றுள்ளன. எனினும், உள்பக்கம் அதே தூண்களின் பின்பக்கம் அரச உருவங்கள் ஏழு இடம்பெற்றுள்ளன. இவை அனைத்தும் அஞ்சலியில் உள்ளன. சில அரச உருவங்களுக்குப் பக்கவாட்டில் பணிப்பெண்கள் இடம்பெற்றுள்ளனர்.

## 5. கொம்பூதும் மனிதன்

கொம்பூதும் மனிதன் சிற்பம் ஆழ்வார்திருநகரியில் மட்டும் இடம் பெற்றுள்ளது. இம்மனிதன் கையில் கொம்பை, வைத்து ஊதிய நிலையில் காணப்படுகிறான். இக்கொம்பூதும் மனிதன் கோயில் விழாக்காலங்களில் கொம்பூதுபவனாக இருக்கலாம்.

## 6. பாலியல் சிற்பங்கள்

புனிதமான கோயில்களில் பாலியல் சிற்பங்கள் ஏன் இடம் பெறுகின்றன என்பது பலரது கேள்வியாகும். கோயில் விமானம் கோபுரம் முதலான இடங்களில் திருஷ்டிபடக்கூடாது என்பதற்காக பாலியல் சிற்பங்கள் இடம் பெறுகின்றன[53] என்றும் மனிதவாழ்வில் பாலியல் ஓர் அங்கமாக இருப்பதால் கோயில்களில் பாலியல் சிற்பங்கள் இடம் பெறுகின்றன[54]என்றும், கோபுர வாசலைக் கடந்து கருவறையை நோக்கிச் செல்லும் போது மனத்தில் உள்ள கெட்ட எண்ணங்களை விடுத்துத் தூய எண்ணத்துடன் இறைவனை அணுக வேண்டும் என்றும் சபலங்களுக்கு மனதில் இடமளிக்கக்கூடாது என்ற கருத்தை உணர்த்துவதற்காகவும் கோபுரங்களில் பாலியல் சிற்பங்கள் இடம் பெறுகின்றன எனலாம்.

பாலியல் சிற்பங்கள், விமானம், கோபுரம், மற்றும் மண்டபத்தூண்களின் சதுரப்பகுதி ஆகியவற்றில் அதிக அளவில் இடம் பெறும். இப்பாலியல் சிற்பங்கள் மனிதனின் காம உணர்வுகளைத் தூண்டுவதால் குழந்தைவரம் வேண்டி கோயிலுக்கு வரும் தம்பதியர் இச்சிற்பங்களைப் பார்த்து உணர்வுகள் தூண்டப்பட்ட நிலையில் கூடி குழந்தைகள் பெற இப்பாலியல் சிற்பங்கள் ஓரளவிற்குத் துணைபுரிகின்றன எனக் கொள்ளலாம்.

தமிழகக் கோயில்களில் பாலியல் சிற்பங்கள் அதிகம் இடம் பெறுவது விசயநகர-நாயக்கர் காலத்தில்தான். இதேபோல் வட இந்தியாவில்

கஜுராகோ பகுதியில் பெரிதும் பாலியல் சிற்பங்கள் இடம்பெற்ற பல கோயில்கள் இருந்து அவை முஸ்லீம்களின் படையெடுப்பின் போது அழிக்கப்பட்டுவிட்டன. இன்று மிஞ்சியிருப்பது கஜுராகோ கோயில் மட்டுமே. இக்கோயிலிலும் பாலியல் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.[55] விசயநகர-நாயக்கர் தம் கோயில் மண்டபத்தூண்களில் இத்தகு சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில், மன்னார்கோயில், அழகர்கோயில், நான்குனேரி, கிருஷ்ணாபுரம் ஆகிய இடங்களில் பாலியல் சிற்பங்கள் மண்டபத்தூண்களில் இடம்பெறுகின்றன.

ஸ்ரீவில்லிபுத்தூரில் மதுக்குடம் ஏந்திய மங்கையை வயதான கிழவன் காம இச்சையுடன் நோக்கும் சிற்பம் இரு இடங்களில் இடம் பெறுகிறது. இவை தவிர ஒருவன் பெண் ஒருத்தியின் மார்பகங்களைப் பற்றிக் கொண்டிருக்க அவன் கையில் வாள் மற்றும் கேடயம் கொண்டுள்ளான். தன் கால்களில் ஒருகாலைத்தூக்கி படம் எடுக்கும் நாகத்தின் மீது வைத்துள்ளான்.

மன்னார்கோயிலில் குறத்தி ஒருத்தியின் மார்பகத்தை முனிவர் ஒருவர் பற்றிய வண்ணம் உள்ளார்.

அழகர்கோயிலில் யாளித்தூணில் ஒருவன் தனது பிறப்புறுப்பை பிடித்தபடி உள்ளான். அவனுக்கு எதிர்த்த யாளித்தூணில் ஆடை இன்றி ஒரு பெண் காட்டப்பட்டுள்ளாள்.

நான்குனேரியில் வயதான கிழவர் ஒருவர் அழகிய பெண்ணை அணைத்தபடி காட்டப்பட்டுள்ளார். இதிலிருந்து மனிதனின் இச்சைக்கும் அவனது வயதிற்கும் தொடர்பில்லை என்பது போல எண்ணத் தோன்றுகிறது.

கிருஷ்ணாபுரத்தில் ஒரு பெண் தன் கீழாடையைத் தூக்கியபடி கீழே கிடக்கும் ஒருவன் மேல் நிற்கிறாள். இவனது முகம் வயதானவன் போல் காட்டப்பட்டுள்ளது. மார்பகங்கள் தொங்கிய நிலையில் உள்ளன. கீழே கிடக்கும் அவன் அவளது பிறப்புறுப்பைக் காட்டியபடி உள்ளான். இத்தகு சிற்பங்கள் நாயக்கர் காலக்கோயில்கள் பலவற்றில் இடம் பெறுகின்றன.[56] பெண்ணொருத்தியின் மார்பகத்தை ஒருவன் பிடிக்க அவனது தாடி மற்றும் மீசையை அவள் பற்றி இழுத்த வண்ணம் காட்டப்பட்டுள்ளது.

மேற்கண்ட பாலியல் சிற்பங்களின் மூலம் விசயநகர-நாயக்கர் காலச் சமுதாயத்தில் பாலியலுக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவம் பற்றி ஓரளவிற்கு அறியலாம். மேலும், கலைஞன் தன் மனதில் ஏற்பட்ட நடைபெறாமல் போன சில ஆசைகளை சிலைவடிவில் வடித்துள்ளான் என்றும் இதனைக் கருதலாம்.

## III. விமானச் சிற்பங்கள்

விமானப் பகுதியில் இங்கு, 1) உபபீடத்தில் இடம் பெறும் கண்டச் சிற்பங்கள், 2) கூரையின் மேற்பகுதியில் இடம்பெறும் விமான தளச்சிற்பங்கள் (விமான தேவதைச் சிற்பங்கள் கட்டிடக்கலையியலில் விளக்கப்பட்டுள்ளது) ஆகியன மட்டும் இப்பகுதியில் விளக்கப் படுகின்றது.

### 1. கண்டச் சிற்பங்கள்

கண்டச் சிற்பங்களின் தோற்றம் பற்றியும், விசயநகர-நாயக்கர் காலத்தில் அதன் வளர்ச்சிநிலை பற்றியும் கட்டடக்கலை இயலில் ஏற்கனவே குறிப்பிடப்பட்டுள்ளது. அதிட்டான உபபீடத்தில் இடம்பெறும் கண்டச்சிற்பங்கள் கூடலழகர் கோயில் மற்றும் திருப்புளியங்குடி ஆகிய இடங்களில் மட்டும் இடம்பெறுகின்றன.

ஸ்ரீவைகுண்டம், மன்னார்கோயில் ஆகிய இடங்களில் அதிட்டானத்தின் கண்டங்களில் சிற்பங்கள் இடம்பெறுகின்றன.

ஆழ்வார்திருநகரியில் மட்டும் அதிட்டானக் கபோதக் கூடுகளில் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. மேற்கண்ட கோயில்களில் அதிக அளவில் தொடர்ச்சியான சிற்பங்கள் கூடலழகர், மன்னார்கோயில், ஆழ்வார்திருநகரி ஆகிய இடங்களில் மட்டும் பெருவாரியாக உள்ளன.

கூடலழகர்கோயில் அதிட்டான உபபீடத்தில் சுமார் 168 கண்டச் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.[57] இவற்றில் இராமாயணம், கிருஷ்ண லீலைகள், திருமாலின் அவதாரங்கள், சமயச் சார்பற்ற உருவங்கள் முதலியன காணப்படுகின்றன. பெரும்பாலான சிற்பங்கள் மீண்டும் மீண்டும் செதுக்கப்பட்டுள்ளன.

இராமாயணச் சிற்பங்களில் தாடகைவதம், வாலி- சுக்ரீவன் சண்டை ஆகியன சிறப்பாக அமைந்துள்ளன. கிருஷ்ணலீலைகளில் வெண்ணெய் திருடும் கண்ணன், வெண்ணெய்க்கு ஆடும் கண்ணன், உரலுடன் வந்து மரத்தைச் சாய்க்கும் கண்ணன், யாசோதாக் கண்ணன் எனக் கண்ணனது குழந்தைப் பருவ நிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன. மேலும், கேசி எனும் அசுரன், காளிங்கன், கன்றாய்வந்த அசுரன், கம்சன் ஆகியோரை வதம் செய்யும் காட்சிகள் இடம் பெற்றுள்ளன. கோவர்த்தனக் கண்ணன் சிற்பமும் இடம்பெற்றுள்ளது.

மேற்கண்ட சிற்பங்கள் தவிர திருமாலது உருவங்களான விஷ்ணு, அனந்தசாயி, கருடநாராயணன் முதலிய சிற்பங்களும், மன்மதனின் கையில் வில்-அம்புடன் தேரில் நின்ற நிலையிலான சிற்பமும் காட்டப்பட்டுள்ளன. அரசி, அரசன் உருவங்கள் பக்கவாட்டுக் கொண்டையுடன் இடம் பெற்றுள்ளன.

திருப்புளியங்குடியில் அமர்ந்த நிலையில் சிம்மம் மற்றும் யாளி, மகரம், நடனமாடும் பெண் முதலிய சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

அதிட்டான கண்டச் சிற்பங்களில் ஸ்ரீவைகுண்டத்தில் பூதகணங்கள், அன்னப்பறவை, மற்போர் புரியும் வீரர்கள், ஆண், பெண் சிற்பங்கள், கருடாழ்வார் காளிய கிருஷ்ணன், நின்ற கோல விஷ்ணு ஆகிய சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

மன்னார்கோயிலில் சைவசமயச் சிற்பங்களும், வைணவசமயச் சிற்பங்களும், சமயச்சார்பற்ற சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன. வைணவத்தில் இராமாயணச் சிற்பங்களில் இராம-இலக்குவர், வாலி-சுக்ரீவன் சண்டை, இராம-இலக்குவர் இருவரும் ஆஞ்சனேயரின் தோளில் அமர்ந்திருத்தல், சீதையுடன் ராமன் நிற்றல், இலக்குவன் சூர்ப்பநகையின் மூக்கை அறுத்தல், இராமர் கையில் வில்லுடன் மானை விரட்டுதல், இராமர் குழுவுடன் இருத்தல், பதினாறு கைகளுடன் கார்த்தவீரியார்ச்சுனன் வானத்தில் தேரில் பறத்தல், அனுமன் சிவலிங்கத்தைப் பூசை செய்தல் முதலியன இடம் பெற்றுள்ளன.

கிருஷ்ணலீலைகளில் வஸ்திர அபகர்ணன் மிக அழகுபடச் சித்தரிக்கப்பட்டுள்ளது. கண்ணன் கவர்ந்த ஆடைகளுடன் மரத்தில் அமர்ந்த நிலை, கோபியர் சிலர் ஆடையின்றி தனது பிறப்புறுப்பைக் கையால் மறைத்து நின்ற நிலையில் காட்டப்பட்டுள்ளனர். இதில் தண்ணீரில் கோபியர் நின்றிருக்கும் நிலை மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. இவைதவிர பாக்காசுரவதம், யசோதாகிருஷ்ணன், குவளையாபீடம் எனும் யானைவடிவ அசுரவதம், நடனமாடும் கண்ணன், கோவர்த்தனதாரி ஆகிய சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. இவற்றை நோக்கும் போது கிருஷ்ணலீலைகளில் மிக முக்கியமான காட்சிகள் மட்டும் இடம்பெற்றுள்ளன என்பது தெரிகின்றது.

விஷ்ணுவின் அவதாரச்சிற்பங்களாக இரணியநரசிம்மன் யுத்தம், வராகர் பூதேவியைதன்மடியில் அமரவைத்தபடி கடலிலிருந்து வரும் சிற்பம், யோகநரசிம்மர் மற்றும் மகாவிஷ்ணுவின் நின்ற, சயன கோலச் சிற்பங்கள் ஆகியன இடம்பெற்றுள்ளன.

சைவசமயச் சிற்பங்களாக கணபதி அமர்ந்த கோலத்திலும், துர்க்கை நின்ற நிலையிலும் அவருக்கு இருபுறமும் அவளது வாகனங்களான சிம்மம் மற்றும் மான் ஆகியன இடம்பெற்றுள்ளன. மேலும், நர்த்தனமாடும் கணபதி, காளசம்ஹாரமூர்த்தி ஆகிய சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன.

சமயச் சார்பற்ற சிற்பங்களாக பெண் ஒருத்தி கண்ணாடியைப் பார்த்துத் தலைவாறும் காட்சி, ஆண் உருவம் ஆகியன இடம் பெறுகின்றன.

மன்னார்கோயிலில் சுமார் நாற்பது கண்டச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. இவையனைத்தும் அரை அடி (ஆறு அங்குலம்) சமசதுர அளவில் அமைந்துள்ளன. இவைகள் மடிப்புமடிப்பாக உள்ள அதிட்டானத்தில் (பத்ரம், அகாரை, கர்ணம்) உட்செல்லும் பள்ளங்களில்

இடம்பெறாது வெளிவரும் பகுதிகளான பார்வைபடும் இடங்களில் இடம்பெற்றுள்ளன. சில சிற்பங்கள் பக்கவாட்டில் இடம்பெற்றாலும் அந்த இடமும் பார்வைபடும் இடமாகவே உள்ளது. சிற்பங்களுக்கு இடையிடையே கொடி வேலைப்பாடுகளும் இடம்பெற்றுள்ளன.

ஆழ்வார்திருநகரியில் அதிட்டான கண்டத்தில் சிற்பங்கள் இடம் பெறாது அதிட்டான கபோதக் கூடுகளில் இடம்பெற்றுள்ளன. இக்கூடுகளில் பெரும்பாலான சிற்பங்கள் கிருஷ்ண லீலைகளாகக் அமைகின்றன. காளிங்கநர்த்தனன், பாலகிருஷ்ணன், வேணுகோபாலன், வெண்ணெய்க்கு ஆடும் பிள்ளை, கொக்குவடிவ அசுரவதம், யசோதாக்கண்ணன், ஆலிலைப்பள்ளி கொண்ட கண்ணன் முதலிய சிற்பங்கள் முக்கியமான சிற்பங்கள் ஆகும். இவை தவிர இராமாயணத் தொடர்புடைய சிற்பம் ஒன்று மட்டுமே இடம் பெற்றுள்ளது. இதில் இராமர் நின்ற கோலத்தில் கையில் வில்-அம்புடன் காணப்படுகிறார். திருமாலின் அவதாரச் சிற்பங்களாக யோக நரசிம்மர், இரணிய-நரசிம்மயுத்தம் ஆகியன இடம்பெற்றுள்ளன. மகாவிஷ்ணு நின்ற, அமர்ந்த, கிடந்த கோலங்களில் இடம் பெற்றுள்ளார். சமயச் சார்பற்ற சிற்பங்களாக அரச உருவம், குரங்கு, அன்னப்பறவை முதலியன இடம்பெற்றுள்ளன.

விமானத்தில் இடம்பெறும் அதிட்டான சிற்பங்களை நோக்கும் போது அவற்றில் பெரும்பகுதி கிருஷ்ண லீலைகளாகவே அமைகின்றன. இதனை அடுத்த நிலையில் இராமாயணம் இடம் பெறுகிறது. எனவே, அக்காலத்தில் விசயநகர-நாயக்க மன்னர்களிடமும் மக்களிடமும் அவை பெற்றிருந்த செல்வாக்கை இது காட்டுவதாக அமைகிறது. இவற்றில் சமயச் சார்பற்ற சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன. சைவ சமயம் தொடர்பான சிற்பங்களும் அரிதாகக் காட்டப்பட்டுள்ளன.

## 2. விமானதளச் சிற்பங்கள்

இந்நூலில் விளக்கப்பெறும் கோயில்களில் பெரும்பாலானவை விசயநகர-நாயக்கர் காலத்தில் கட்டப்பட்டிருந்தாலும் எல்லா விமானங்களிலும் விமானதளச் சிற்பங்கள் இடம்பெறவில்லை. பெரிய அளவிலான விமானங்களில் மட்டும் விமானதளச் சிற்பங்கள் இடம் பெற்றிருப்பதால் விசயநகர-நாயக்கர் சிறு விமானங்களில் சிற்பங்களை அமைக்காது விமான தேவதைகளை மட்டும் அமைத்தனர் எனத் தெரிகின்றது. இந்நூலில் விளக்கப்பெறும் கோயில்களில் கூடலழகர் கோயில், உரகமெல்லணையான் கோயில், ஆண்டாள்கோயில், ஆகிய கோயில்களில் மட்டுமே விமான தளச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. விமான தளங்களில் இச்சிற்பங்கள் விமானத்தின் அழகிற்காக அமைக்கப்படுகின்றன. இதில் இதிகாசங்கள், கிருஷ்ணலீலைகள் தொடர்பான சிற்பங்களை அமைப்பதன் மூலம் அவற்றை மக்கள் மனதில் நிலைக்கச் செய்தனர்.

## 1. கூடலழகர் கோயில் விமானதளச் சிற்பங்கள்

இவ்விமானம் அஷ்டாங்க விமானமாதலால் இதில் இரண்டு தளங்கள் அமைந்துள்ளன. ஒவ்வொருதளமும் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றில் முதல் தளம் முதலாவது பகுதியில் இராமாயணச் சிற்பங்களும், இராண்டாவது பகுதியில் கிருஷ்ணாவதாரச் சிற்பங்களும், இரண்டாம் தளத்தின் முதற்பகுதியில் சிவபுராணச் சிற்பங்களும்; திருமாலின் அவதாரச் சிற்பங்களும் இரண்டாம் பகுதியில் முனிவர்களது சிற்பங்களும் அமைந்துள்ளன.

## அ. இராமாயணச் சிற்பங்கள்

இராமாயணக் காட்சிகள் தாடகை வதத்திற்கு இராமர், இலட்சுமணர் விசுவாமித்திரருடன் கிளம்புவதிலிருந்து தொடங்கி இராமர் பட்டாபிஷேகத்துடன் முடிவடைகிறது. இதில் மொத்தம் 24 சிற்பத் தொகுதிகள் இடம்பெற்றுள்ளன. பெரும்பாலான சிற்பங்கள் கதை நிகழ்வின் ஏதேனும் ஒரு கூற்றைப் பிரதிபலிப்பதாகவும் சில சிற்பங்களில் இராமர், இலக்குவணன், சீதை முதலியோர் இயக்கமின்றி நின்ற நிலையிலும் காட்டப்பட்டுள்ளனர். மாரீசன் உடலில் பாதி அம்புபட்டு இரத்தம் சிந்தும் மானாகவும், மீதியை அசுரனாகவும் காட்டியுள்ளனர். மேலும், இராவணன் பத்துத் தலைகளுடன் தேரில் நின்று இராமனுடன் போர் செய்வது போன்றும், அவனது தலை துண்டிக்கப்பட்டு தரையில் கிடப்பது போன்றும் ஒரே சிற்பத்தொகுதியில் காட்டப்பட்டுள்ளது. அகலிகை சாபவிமோசனக் கதையும் இத்தகையதே. இத்தகு இயக்க ஆற்றல் இச்சிற்பங்களுக்கு அழகு சேர்க்கின்றன.

## ஆ. கிருஷ்ணாவதாரச் சிற்பங்கள்

கிருஷ்ணாவதாரச் சிற்பங்களில் 17 சிற்பத் தொகுதிகள் இடம் பெற்றுள்ளன. கம்சன் கண்ணனைக் கொல்ல ஆலோசனை செய்யும் இடத்தில் தொடங்கி, ருக்மணி கண்ணன் திருமணக்காட்சி ஈறாக சிற்பங்கள் காட்டப்பட்டுள்ளன. இச்சிற்பங்களில் அசுரவதமே அதிக அளவில் காட்டப்படுகிறது. இவற்றில் வண்டியுருவில் வரும் அசுரன், குதிரைவடிவில் வரும் கேசி எனும் அசுரன், பூதகி, காளிங்கன் ஆகியோரைக் கொல்லுதல் முதலியன இன்றியமையாதவை. இவற்றில் வண்டி மற்றும் குதிரைவடிவில் வரும் அசுரர்களது உருவங்களில் பாதிமட்டும் வண்டி மற்றும் குதிரை மேல் காட்டப்பட்டுள்ளது இயக்க ஆற்றலை வெளிப்படுத்துவதாக உள்ளது.

இராமாயணக் கதையில் இராமனது இளமைக் கால வாழ்வு அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாக இல்லாததால் தாடகை வதத்திலிருந்து தொடங்கியது. கிருஷ்ணாவதாரத்தில் கண்ணனது இளமைக் காலமே லீலைகளுக்குரிய காலமாதலால் கண்ணனது இளமைக்காலம் காட்டப்பட்டுள்ளது.

## இ. திருமால் அவதாரங்களும் சிவபுராணமும்

இரண்டாம் தளத்தின் முதற்பகுதியில் சிவபுராணத்தின் கதைகளை உணர்த்தும் சில சிற்பங்களும், திருமாலின் அவதாரங்களுமாக மொத்தம் இருபத்தி ஏழு சிற்பத் தொகுதிகள் இடம்பெற்றுள்ளன. திருமாலின் அவதாரங்களில் இனி எடுக்க இருப்பதாகச் சொல்லப்படும் கல்கி அவதாரம் காட்டப்படவில்லை. இதுவரை திருமால் எடுத்த அவதாரங்களாகக் கருதப்படும் ஒன்பது அவதாரங்களே இடம் பெற்றுள்ளன.

சிவனது திருவிளையாடல்களில் காலசம்காரமூர்த்தி சிற்பத் தொகுதி மிக அருமையாக இடம்பெற்றுள்ளது. மார்க்கண்டேயன் சிவலிங்கத்தைப் பிடித்துக் கொண்டிருக்க காலன் எருன்மக்கிடா வாகனத்தின் மீது அமர்ந்து பாசக்கயிற்றால் சிவலிங்கத்தைப் பிடித்துக் கொண்டிருக்கும் மார்க்கண்டேயன் கழுத்தில் பிணைத்து இழுக்கிறார். சிவலிங்கம் இரண்டாகப் பிளக்க, சிவன் கோபத்துடன் தோன்றி காலனைக் காலால் உதைத்து, திரிசூலம் கொண்டு வதம் செய்யும் இக்கதை முழுவதும் ஒரே சிற்பத் தொகுதியில் இடம்பெற்றுள்ளது. இரண்டாவது பகுதியில் முனிவர்கள் யோகாசனம், வீராசனம், மகாராசலீலாசன்ம் போன்ற அமைப்புக்களில் இடம்பெற்றுள்ளனர்.

## ஈ. சிற்பங்களின் அமைப்புமுறை

இச்சிற்பத்தொகுதிகள் கிழக்கில் ஆரம்பித்து தெற்கு, மேற்கு வடக்கு என்று வரிசையாக இடம்பெற்று இறுதியில் கிழக்கிலேயே முடிவடைகின்றன. பக்தர்கள் இவ்விமானத்தைத் தெற்கில் ஆரம்பித்து மேற்கு, வடக்காக வலம் வருவதால் வலம் வரும் பொழுது இத்தகு சிற்பங்களைக் கண்டு இன்புறும் வகையில் அமைந்துள்ளன.

## 2. உரகமெல்லணையான் கோயில் விமானதளச் சிற்பங்கள்

இக்கோயில் விமானத்தின் மூன்றாம் தளத்தில் மட்டும் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. இத்தளம் இரண்டு பிரிவுகளாகச் பிரிக்கப் பட்டுள்ளது. கீழ்த்தளத்தில் மேற்குப்பக்கம் திருமாலின் பத்து அவதாரங்கள் இடம்பெற்றுள்ளன. கிழக்கே இலட்சுமி, சரஸ்வதி, கையில் வெண்ணையுடன் கண்ணன், வேணுகோபாலன் முதலிய சிற்பங்கள் உள்ளன. வடக்கே பைரவர், நரசிம்மர் முதலானோர் இடம் பெற்றுள்ளனர்.

மேல்தளத்தில் மேற்கே பிச்சாடனர், இராமர், மகாவிஷ்ணு துர்க்கை முதலிய சிற்பங்களும்; வடக்கே வீரபத்ரர், மகாவிஷ்ணு, அர்த்தநாரி, உமாசகிதமூர்த்தி, பிரம்மன் முதலிய உருவங்களும்; கிழக்கே காளபைரவர், பார்வதி, வினாயகர், காலிங்கநர்த்தனன், கஜேந்திர மோட்சம் முதலிய சிற்பங்களும்; தெற்கே முருகன், சக்கரத்தாழ்வார், நடராசர், கங்காளர், பிச்சாடனர் முதலிய உருவங்களும் வைக்கப்

பெற்றுள்ளன. இக்கோயில் விமானத்தில் உள்ள இறை உருவங்களின் அமைப்பு முறையில் சரியான முறைமை பின்பற்றப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

## 3. ஆண்டாள்கோயில் விமானதளச் சிற்பங்கள்

ஆண்டாள்கோயில் விமானம் திருப்பாவை விமானம் என்று அழைக்கப்படுகிறது. விமானத்தின் முதல்தளத்தில் திருப்பாவை தொடர்பான சிற்பங்கள் இடம்பெற்றுள்ளதால் இப்பெயர் பெற்றது. இச்சிற்பங்கள் யாவும் பெருமளவில் ஒரே அமைப்பில் உள்ளன. திருப்பாவைப் பாடலின் மையக் கருத்தான ஆன்மாக்களை விழித்தெழச் செய்து நீராடி, இறைவனின் புகழ்பாட அழைப்பது போல இவை அமைந்துள்ளன. இரண்டாம் தளத்தில் விஷ்ணு மற்றும் அவதாரச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன

வரகுணமங்கை விசயாசனப்பெருமாள் கோயில் விமான தளத்திலும் சிற்பங்களைக் காணலாம். இவற்றில் கிருஷ்ணன், இராமன், வேணுகோபாலன் முதலிய சிற்பங்கள் குறிப்பிடத்தக்கனவாகும். மேலும், பல சிற்பங்கள் அடையாளம் காணாத அளவிற்குச் சிதைந்துள்ளன.

இதுவரை கண்ட விமானதளச் சிற்பங்களிலிருந்து இராமாயணம் போன்ற கதைகளை விளக்கும் தொடர்சிற்பங்களும் இறைவனின் பெருமையை விளக்கும் தனித்தனிச் சிற்பங்களும் முக்கியத்துவம் பெற்றுள்ளமை தெரிகின்றது. இயக்க ஆற்றலுடன் கூடிய சிற்பங்களும், சாதாரணமாக நின்ற நிலையிலான சிற்பங்களும் கிடைக்கின்றன.

## IV. கோபுரச் சிற்பங்கள்

கோயில் அமைப்பை மனிதனது உருவத்திற்கு ஒப்பாகக் கூறுமிடத்து, கிடந்த கோலமாகப் பார்க்கின்ற போது கோபுரம் பாதமாகக் கருதப்படுகிறது. இத்தகு கோபுரம் பல்லவர் மற்றும் சோழர்காலத்தில் சிறியதாக (அதே சமயத்தில் விமானம் பெரியதாகவும்) அமைத்தனர். கோபுரதரிசனம் கோடிபுண்ணியம் எனும் கருத்தை ஒட்டியும், பக்தர்கள் தூரத்தில் இருந்தே கோபுரத்தைத் தரிசித்தே இறைவனை தரிசித்த பலனைப் பெறலாம் என்ற நம்பிக்கையின் அடிப்படையிலும், கோபுரங்கள் உயரமாகக் கட்டப்பட்டன. மேலும், அரசர்கள் தங்களது பெயர்களை நிலை நாட்ட வேண்டியும் இத்தகு உயர்ந்த கோபுரங்களை அமைத்தனர் எனலாம்

இத்தகு கோபுரங்கள் பிற்காலப் பாண்டியரது காலத்தில் துவங்கப்பட்டு விசயநகர–நாயக்கர் காலத்தில் மிக உன்னத நிலையை அடைந்தன. விசயநகரர் கால அரசர்களுள் சிறந்தவரான கிருஷ்ணதேவராயர் காலத்தில் தான் மிக உயர்ந்த கோபுரங்கள் கட்டப்பட்டன. இவை ராயகோபுரங்கள் என்று அழைக்கப்பட்டன. விசயநகரர் காலத்தில் துவங்கப்பட்ட பல கோபுரங்கள் முழுமை

யடையாது மொட்டைக் கோபுரங்களாகவே இருந்துவருகின்றன. உதாரணமாக அழகர்கோயிலில் தெற்குக் கோபுரத்தையும் இராமேஸ்வரத்தில் வடக்கு மற்றும் தெற்குக் கோபுரங்களையும் கூறலாம். தமிழகக் கோபுரங்களில் மிக் உயரமானது ஸ்ரீவில்லிபுத்தூர் கோபுரம் ஆகும். ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி கோயில் கோபுரம் தமிழக அரசின் சின்னமாக விளங்குகிறது என்பது கோபுரத்திற்கு அளிக்கப்படும் முக்கியத்துவத்தைக் காட்டுகிறது. கோபுரங்கள் பல அடுக்குகளைக் கொண்டதாக அமையும். பெரும்பாலும் இவ்வடுக்குகள் ஒற்றைப் படையில் அமைந்திருக்கும் இக்கோபுரத்தின் மேலே இடம்பெறும் கலசங்கள் கோபுர அடுக்குகளின் எண்ணிக்கையின் அடிப்படையில் அமையும்.[58]

கோபுரங்களை சிலைகள் இன்றியும் அமைப்பதுண்டு. கோபுரத்தினை அழகுபடுத்த மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்ற புராணக் கதைகளையும் பாலியல் சிற்பங்களையும் இதில் அமைப்பர்.

பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களில் கூடலழகர்கோயில் அழகர்கோயில், பெருங்குளம், மன்னார்கோயில், நாங்குனேரி, திருக்குறுங்குடி, ஸ்ரீவைகுண்டம் ஆகிய ஏழு கோயில் கோபுரங்களில் சிற்பங்கள் காட்டப்பெற்றுள்ளன. இவற்றைத் தனித்தனியாகக் காணலாம்.

### 1. கூடலழகர் கோயில் கோபுரச் சிற்பங்கள்

இக்கோபுரம் ஐந்து அடுக்குகளைக் கொண்டது. முதல்தளத்தின் கிழக்குப்பக்கம் விபீடணனுக்கு இராமர் பட்டாபிஷேகம் செய்து வைக்கும் காட்சியும், இராமர் பட்டாபிஷேகக் காட்சியும் இடம் பெற்றுள்ளன. இது மங்கலமான காட்சிகள் என்பதால் கோயிலில் நுழையும் இடத்தில் இருக்க வேண்டும் என அமைத்துள்ளனர் போலும். வடக்கே இராம-இராவண யுத்தக் காட்சி இடம்பெற்றுள்ளது. இதில் இராமன் அனுமனது தோளில் அமர்ந்து அம்பெய்கிறார். இராவணன் நெஞ்சில் அம்பு பட்டு நிராயுதபாணியாக உள்ளார். மற்ற இருபக்கங்களில் சிற்பங்கள் இல்லை.

இரண்டாம் தளத்தில் இராமாயணக் காட்சிகள் உள்ளன. ஜனகனுடன் சீதை நின்றிருக்க இராம-இலக்குவனர் விசுவாமித்திரருடன் வரும் காட்சியில் தொடங்கி அசோக வனத்தில் சீதையை அனுமன் காணும் காட்சிவரை இடம்பெற்றுள்ளன. இதில் சூர்ப்பநகை இராவணனிடம் சீதையின் அழகுபற்றியும் தனக்கு நேர்ந்த துன்பம் பற்றியும் கூறுவதாகவும், அதே சிற்பத்தொகுதியில் மாரீசனிடம் மானாகப் போகுமாறு இராவணன் கூறுவதுமான இரண்டு காட்சிகளைத் தொடர்போல் ஒரே சிற்பத்தொகுதியில் காட்டியிருப்பது சிறப்பானதாகும். மாரீசன் இராமனால் அம்புபட்டுக் கிடக்கும் காட்சியில் பாதி உடல் மானாகவும் மீதிஉடல் அசுர உருவமாகவும்

காட்டப்பட்டுள்ளது இயக்க ஆற்றலுடன் கூடியதாக உள்ளது. அடுத்ததாக சபரி இராமனிடம் தன்னைத் தாயாக ஏற்றுக்கொள்ளும்படி வேண்ட அடுத்த பிறவியில் எனக்குத் தாயாக விளங்குவாய் என இராமன் கூறுவது போன்ற காட்சியும் அதில் பாதி யசோதையும் கண்ணனுமாகக் காட்டியிருப்பதும் பொருத்தமாக அமைந்துள்ளது. இது சிறந்த உத்தி முறை ஆகும்.

மூன்றாம் தளத்தில் கிருஷ்ணலீலைகள் காணப்பெறுகின்றன. இதில் பூதகி மடியில் அமர்ந்து கண்ணன் பால் குடிப்பதில் தொடங்கி கண்ணன் பத்மாவதி திருமணக் காட்சியுடன் முடிவடைகிறது. நான்காம் தளத்தில் மீண்டும் கிருஷ்ணலீலை தொடர்பான சிற்பங்களே இடம் பெறுகின்றன. ஐந்தாம் தளத்தில் திருமாலது பத்து அவதாரங்கள் உள்ளன. இவைதவிர துவாரபாலகர் ஒவ்வொரு அடுக்கில் உள்ள துவாரத்தின் இருமருங்கிலும் நின்று கொண்டுள்ளனர்.

## 2. அழகர்கோயில் கோபுரச் சிற்பங்கள்

அழகர்கோயிலில் இரண்டு கோபுரங்கள் உள்ளன. உள்ளே உள்ள கோபுரம் "தொண்டைமான் கோபுரம்" என்றும் வெளியே உள்ள கோபுரம் "பதினெட்டாம்படி கருப்பசாமி கோபுரம்" என்றும் அழைக்கப்படுகிறது. இப்பதினெட்டாம்படிக் கருப்பசாமி கோபுரம் திறக்கப்படுவது இல்லை. இக்கோபுரமே கோயிலாகக் கருதப்பட்டு இங்கு கருப்பசாமி எனும் தெய்வம் இருப்பதாகக் கருதி இப்பகுதி மக்கள் வழிபட்டு வருகின்றனர். எனவே, இந்தக் கோபுரத்தை ஒட்டிய கோட்டைச் சுவரில் உள்ள வாசல் வழியாகவே மக்கள் கோயிலுக்குச் சென்று வருகின்றனர்.

தொண்டைமான் கோபுரம் ஐந்து தளங்களைக் கொண்டது. இதில் முதல் தளத்தில் சிற்பங்கள் இல்லை. பிறதளங்களில் சுதையால் ஆன சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. இக்கோபுரத்தில் திருமால் அவதாரங்கள், கிருஷ்ணலீலைகள், இராமாயணக்காட்சிகள், சிவன், பிரம்மன், லட்சுமி, முனிவர்கள், மகிஷாசுரமர்த்தினி, கருடாழ்வார் என விரவிக் காட்டப்பட்டுள்ளன. ஐந்தாம் தளத்தில் கோபுரம் தாங்கிகள் உள்ளனர். சிம்மம் மற்றும் கருடன் சிற்பங்கள் நான்கு மூலைகளில் வைக்கப்பட்டுள்ளன.

பதினெட்டாம்படிக் கோபுரம் ஏழு அடுக்குகளைக் கொண்டுள்ளது. இக்கோபுர தளங்களில் இடம்பெறும் துவாரபாலகர்கள் முதல் அடுக்கில் எட்டுக் கைகளுடனும், இரண்டாம் அடுக்கில் ஆறு கைகளுடனும் மூன்று, நான்காம் அடுக்குகளில் நான்கு கைகளுடனும், ஐந்து, ஆறாம் அடுக்குகளில் இரண்டு கைகளுடனும் அமைக்கப்பட்டுள்ளனர். கோபுரம் கீழே அகலமாகவும் மேலே செல்லச் செல்ல குறுகியும் காணப்படுவது போல துவாரபாலகர்களின் கைகள் மேலே செல்லச் செல்ல எண்ணிக்கையில் குறைந்து காணப்படுகின்றன..

இக்கோபுரத்தில் ஒவ்வொரு அடுக்கிலும் குறிப்பிட்ட கதை தொடர்பான சிற்பங்கள் வைக்கப்பெறாது பல்வேறுபட்ட சிற்பங்களும் விரவியே இடம்பெற்றுள்ளன. முதல் தளத்தில் பெரும்பாலும் அடியவர்கள், முனிவர்கள், விஷ்ணு சிற்பங்கள் மற்றும் பாலியல் தொடர்பான சிற்பங்கள் போன்றவை மாறி மாறி இடம்பெற்றுள்ளன.

இரண்டாம் தளத்தில் பெரும்பாலான சிற்பங்கள் இராமாயணக் காட்சிகளைக் கொண்டுள்ளன. மூன்றாம் தளத்தில் இராமாயணச் சிற்பங்களும், அடியவர் மற்றும் அரசர் சிற்பங்களும் உள்ளன. இதில், மாரீசவதையும், இராவணன் துறவியாக சீதையைத்தூக்கிச் செல்ல வருவதும் சிறப்பாக அமைந்துள்ளன. நான்காம் தளத்தில் கிருஷ்ணலீலை சிற்பங்களும், இராமாயணச் சிற்பங்களும் ஐந்தாம் தளத்தில் இராமாயணம் மற்றும் கிருஷ்ணலீலைகளும் காணக் கிடைக்கின்றன.

மொத்தத்தில் இக்கோபுரச் சிற்பங்களில் ஒரு முறைமையான அமைப்புக் காணப்படவில்லை. சிற்பங்கள் தொடர்ச்சியாக இல்லாது விரவி வருகின்றன. எந்தச் சிற்பமும் இயக்க நிலையில் இல்லை.

## 3. பெருங்குளம் கோயில் கோபுரச்சிற்பங்கள்

இக்கோபுரம் மூன்று தளங்களையுடையதாக அமைந்துள்ளது. இதில் முதல் தளத்தில் கிருஷ்ணலீலையும், திருமாலது உருவங்களும் உள்ளன. இரண்டாம் தளத்தில் திருமாலின் அவதாரச் சிற்பங்களும்; மூன்றாம் தளத்தில் முனிவர்களும், அடியவர் சிற்பங்களும் இடம் பெற்றுள்ளன. இக்கோபுரத்தில் உள்ள சிற்பங்கள் சிறியவனாக உள்ளன.

## 4. மன்னார்கோயில் கோபுரச்சிற்பங்கள்

இக்கோபுரம் ஐந்து நிலைகளை உடையது. முதல் தளத்தில் கிருஷ்ணலீலை, நரசிம்மர்-இரணியன் சண்டை, இரணியன் வதை, இராமர், இலக்குவன், சீதை முதலிய சிற்பங்கள் உள்ளன.

இரண்டாம் தளத்தில் சிற்பங்கள் அழிந்துவிட்டன. விஷ்ணுவின் அவதாரச்சிற்பங்களாக இரணியநரசிம்மர் சண்டை, வராகர் பூதேவியைத் தன்மடியில் அமரவைத்தபடி கடலிருந்து மேலேழும்பும் சிற்பம், யோகநரசிம்மர் மற்றும் மகாவிஷ்ணுவின் நின்ற, சயன கோலச் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

மூன்றாம் தளத்தில் கணபதி அமர்ந்த கோலத்திலும், துர்க்கை நின்ற நிலையிலும் அவளுக்கு இருபுறமும் அவளது வாகனங்களான சிம்மம் மற்றும் மான் இடம்பெற்றுள்ளன. மேலும், நர்த்தனகணபதி, காளசம்ஹாரமூர்த்தி ஆகிய சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன.

சமயச் சார்பற்ற சிற்பங்களில் பெண் ஒருத்தி கண்ணாடியைப் பார்த்து தலைவாறும் காட்சி, ஆண் உருவம் ஆகியன காணப் பெறுகின்றன.

நான்காம் தளத்தில் பெரும்பாலும் கிருஷ்ணலீலைகளுடன் கருடநாராயணன், வேணுகோபாலன் ஆகிய சிற்பங்களும் சிவன், பார்வதி, நடராசர் உருவங்களும் உள்ளன.

ஐந்தாம் தளத்தில் மனித உருவங்கள், ரிசிகள் ஆகிய சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன.

இக்கோபுரச் சிற்பங்கள் பெருமளவில் சிதைந்துள்ளது. சில சிற்பங்களை அடையாளம் காண்பது கடினமாக உள்ளது. அருகில் உள்ள சிற்பங்களைவைத்தே அவற்றை அடையாளம் காண இயலுகிறது.

## 5. நாங்குனேரி கோயில் கோபுரச் சிற்பங்கள்

இக்கோயிலில் இரண்டு கோபுரங்கள் உள்ளன. முதல் கோபுரத்தில் சிற்பங்கள் இல்லை. இரண்டாம் கோபுரம் ஏழு நிலைகளைக் கொண்டது. முதல் தளத்தில் சிற்பங்கள் இல்லை. இரண்டாம் தளத்தில் விஷ்ணுவின் உருவங்கள், இராமன் மற்றும் அவதார உருவங்கள், அடியவர் உருவங்கள் காணப்பெறுகின்றன. மூன்றாம் தளத்தில் வாமனன், திரிவிக்ரமன் முதலியவர்களின் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. இதில் பெரும்பாலான சிற்பங்கள் சிவனது திருவிளையாடல் தொடர்பானவை. நான்காம் தளத்தில் பெரும்பாலான சிற்பங்கள் இராமயணம் தொடர்பானவை யாக உள்ளன. வாலி-சுக்ரீவன் சண்டை, இராமன் மறைந்திருந்து அம்பெய்தல், அனுமன் தோள் மீது இராமன் அமர்ந்து போர் செய்தல் முதலிய காட்சிகள் சிறப்பாக அமைந்துள்ளன. ஐந்தாம் தளத்தில் கிருஷ்ணலீலை இடம்பெற்றுள்ளது. இதில் பாக்காசுரன், எருதுவடிவில் வந்த அசுரன், யானை வடிவில் வ்ந்த அசுரன் முதலிய அசுரர்களைக் கொல்லும் காட்சி, வெண்ணெய் திருடும் கண்ணன், கோவர்த்தனதாரி முதலிய சிற்பங்கள் சிறப்பாக அமைந்துள்ளன. ஆறாம் தளத்தில் அடியவரது சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. ஏழாம் தளத்தில் கோபுரம் தாங்கிகள் அமைந்துள்ளனர்.

## 6. திருக்குறுங்குடி கோயில் கோபுரச் சிற்பங்கள்

திருக்குறுங்குடியில் இரண்டு கோபுரங்கள் உள்ளன. முதல் கோபுரம் ஐந்து தளங்களையும், இரண்டாம் கோபுரம் தளங்கள் இன்றி குடைவரையுடனும் அமைந்துள்ளது. முதல் கோபுரம் – சித்திரகோபுரம் என அழைக்கப்படுகிறது. இதில் முதல் தளத்தில் மட்டும் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. இவை கல்லினால் ஆனதால் தந்தத்தில் செய்யப்பட்டவை போல், மிகத் துல்லியமாகச் செதுக்கப்பட்டு அழகுடன் திகழ்கின்றன. இச்சித்திர கோபுரத்தில் சுமார் 41 சிற்பத் தொகுதிகள் அடங்கியுள்ளன. இதில் சைவம் மற்றும் வைணவம் தொடர்பான சிற்பங்கள் அடங்கியுள்ளன. பெரும்பாலான சிற்பங்கள் ஒவ்வொன்றும் ஒரு கருத்தை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளன. இவைதவிர திக்குபாலகரது சிற்பங்கள்

அவ்வத்திசைகளில் வைக்கப் பெற்றுள்ளன. மேலும் சைவம், வைணவம் இரண்டும் கலந்த ஹரிஹரன் சிற்பம் இடம் பெற்றுள்ளது.

சிற்பத் தொகுதிகள் இருபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு மேற்பிரிவில் மேகங்கள் காட்டப்பட்டு அதில் தேவர்கள் மற்றும் வானதூதர்கள் மலர்மாரி பொழிவது போல காட்டப்பட்டுள்ளன திருமாலது உருவங்களாக கஜேந்திரமோட்சம், (பார்க்க நி.ப.எண். 18) வேணுகோபாலன், திரிவிக்ரமன், கருடநாராயணன், கோவர்த்தனதாரி, இராமன், வெண்ணெய் திருடும் கண்ணன், பாலகிருஷ்ணன், காளிங்க நர்த்தனன், நரசிம்மர், பாக்காசுரவதை முதலிய சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. இதில், கோவர்த்தனதாரி சிற்பம் மிகவும் தத்ரூபமாக வெட்டப்பட்டுள்ளது. கண்ணன் கோவர்த்தன மலையைத் தூக்கியபடி நிற்க அம்மலையில் புலி, பன்றி,யானை, குரங்கு, மாடு, நாகம் முதலிய மிருகங்கள் காட்டப்பட்டுள்ளன. குன்றினுக்குக் கீழே இடையர்கள் குழந்தைகளை ஏந்தியபடியும் வயதான இடையர்கள் குளிருக்குத் தாங்காது நடுங்கிய படியும் உள்ளனர். பெண்கள் குளிரினால் மார்பைக் கைகளால் கட்டியபடி காட்டப்பட்டுள்ளனர். கண்ணனுக்கு அருகில் பலராமன் நிற்கிறார். இவ்வளவு நிகழ்ச்சிகளையும் ஒரே சிற்பத் தொகுதியில் காட்டியுள்ளனர்.

இராமாயணத்தில் இராமன் பட்டாபிஷேகக் காட்சி இடம் பெறுகிறது. இதில் இராமர், சீதை அமர்ந்திருக்க அருகில் இலக்குவன் பரத சத்ருகணன் நிற்க, தேவர்கள் பூமாரி பொழிகின்றனர். மற்றொரு இராமாயணக் காட்சியில் இராமர் மரவுரிதரித்து கையில் அம்புடன் குன்றில் அமர்ந்திருக்க், அனுமன் காலடியில் அமர்ந்திருக்க, சுக்ரீவன் இராமனுக்குப் பின்னால் அமர்ந்திருக்க, இலக்குவன் அருகில் நிற்க, சமுத்திரராஜன் எனப்படும் கடல் அரசன் இராமனை வணங்கியபடி உள்ளார். இக்காட்சி இராமர் இலங்கைக்குப் பாலம் கட்டும்போது சமுத்திரராஜன் வந்து உதவும் காட்சியாகும்.

இரணியவதை சிற்பத்தொகுதியில் இரண்டு நிலைகள் காட்டப் படுகின்றன. முதல் நிலையில் நரசிம்மர் தூணிலிருந்து பிளந்து வெளிவருவதும் இரண்டாம் நிலையில் இரணியனை வதை செய்வதும் என நாடகக் காட்சித்தொடர் போல் காட்டப்பட்டுள்ளது.

சிவனது வடிவங்களாக கங்காளர், தட்சிணாமூர்த்தி, சிவபெருமான், வீரபத்ரர், நடராசர் முதலியோர் காட்டப்பட்டுள்ளனர். இச்சிற்பங்கள் அனைத்துமே முறையாக அமைக்கப்பட்டுள்ளன.

திக்பாலகர்கள் சுகாசனத்தில் அமர்ந்தநிலையில் காட்டப் பட்டுள்ளனர். அருகே அவரவர் வாகனங்கள் நிறுத்தப்பெற்றுள்ளன.

நுழைவாயிலின் இருமருங்கிலும் விநாயகர், முருகன் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. மேற்கண்டவை தவிர ஹரிஹரன் சிற்பத்தில் வலப்பக்கம் பிரம்மனும் இடப்பக்கம் தேவேந்திரனும் காணப்படுகின்றனர்.

மகிஷாசுரமர்த்தினி சிற்பம் மகாபலிபுரத்திலுள்ள மகிஷாசுரமர்த்தினி குடைவரைக் கோயிலில் இடம்பெற்றுள்ள மகிஷாசுரமர்த்தினி சிற்பத்திற்கு இணையான அழகில், அதேசமயம் சிறு வடிவில் காட்டப்பட்டுள்ளது மிக அருமையாகும். மகிஷாசுரமரித்தினி சிற்பம் பதினெட்டு கரங்களுடன், இடது காலால் மகிஷனின் பாதத்தை மிதித்துக்கொண்டும், வலது காலால் வீழ்ந்து கிடக்கும் அவனது தோளில் மிதித்துக்கொண்டும் காட்டப்பட்டுள்ளது. மகிஷன் உடல் மீது பாய்ச்சிய திருசூலம் அவனுடைய தோளில் பாய்ந்து வெளியில் வந்த வண்ணம் காட்டப்பட்டுள்ளது. வீழ்ந்து கிடக்கும் மகிஷன் வாளும் கேடயமும் ஏந்தியுள்ளான். மகிஷாசுரமர்த்தினியின் வாகனமான சிங்கம் மகிஷனின் புட்டப்பகுதியைக் கவ்வியுள்ளது. இக்காட்சிக்கு எதிரே தோல்வியுற்ற அசுரப்படை வீரர்கள் புறமுதுகிட்டு ஓடும் நிலையில் காட்டப்பட்டுள்ளனர். (பார்க்க நி.ப.எண். 17)

வீமனும் அனுமனும் சந்தித்துக் கொள்ளும் மகாபாரதச் சிற்பம் ஒன்று இடம் பெற்றுள்ளது. இதில் அனுமனது வாலை தன் கதையால் வீமன் தூக்கிய வண்ணம் காட்டப்பட்டுள்ளது.

கருடபுராணத்திலிருந்து ஒருபகுதி சித்தரிக்கப்பட்டுள்ளது. இதில் கருடன் தன் அலகில் மரத்தைக் கவ்வியும் வலது கரத்தில் யானையையும், இடது கரத்தில் ஆமையையும் பற்றிய வண்ணம் பறந்த நிலையிலும் சித்தரிக்கப்பட்டுள்ளது. அம்மரத்தில் முனிவர்கள் தலைகீழாகத் தொங்கிய நிலையில் உள்ளனர். இக்காட்சி கருடன் தன் அன்னை வினதாவை அடிமைவிலங்கிலிருந்து மீட்க வேண்டி அமிர்தம் கொண்டு வரும் கதையை உணர்த்துகிறது.

இக்கோபுரச் சிற்பத் தொகுதியில் அரசனும் அவனது பரிவாரங்களும் வனத்தில் வேட்டையாடும் காட்சி மிக அருமையாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. மேலும், இக்கோயிலில் அக்காலத்தில் நடந்த உற்சவர் திருவீதியுலா மிகச் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளது. இதில் இசைக்கலைஞர்கள் இசைக்கருவிகள்ள மீட்ட, தேவரடியார் உற்சவருக்கு முன் நடனமாடிச் செல்ல, பக்தர்கள் கூட்டம் பின் தொடர ஊர்வலம் நடக்கிறது. இவ்வாறாக சித்திர கோபுரக் காட்சிகள் அனைத்துமே மிக நேர்த்தியாகச் செதுக்கப்பட்டு மனதைக் கொள்ளை கொள்ளும் அழகுடன் விளங்குகின்றன.

## இரண்டாம் கோபுரம்

இக்கோபுரம் குடைவரையுடன் நின்றுவிட்டது. எனினும் குடைவரையில் 30-க்கும் மேற்பட்ட சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றில இராமாயணம் மகாபாரதம் மற்றும் சைவ, வைணவச் சிற்பங்கள் அமைந்துள்ளன. பெரும்பாலான சிற்பங்கள் இயக்க நிலையின்றியும், திரிவிக்ரமன், கஜசம்காரமூர்த்தி, ஊர்த்துவ-தாண்டவர், முதலிய சிற்பங்கள் இயக்க நிலையிலிலும் உள்ளன.

## 7. ஸ்ரீவைகுண்டம் கோயில் கோபுரச் சிற்பங்கள்

ஸ்ரீவைகுண்டம் வைகுண்டப் பெருமாள் கோயில் கோபுரம் ஒன்பது தளங்களையுடையது. இக்கோபுரம் சமீபத்தில் புதுப்பிக்கப்பட்டுள்ளது. *(பார்க்க நி.ப.எண். 8)*

முதல் தளத்தில் பெரும்பான்மையாக இராமாயணச் சிற்பங்களும், இரண்டாம் தளத்தில் கிருஷ்ணாவதாரச்சிற்பங்கள் மற்றும் திருமாலின் அவதாரச் சிற்பங்களும் இடம்பெற்றுள்ளன. மூன்றாம் தளத்தில் வைணவசமயச் சிற்பங்களும் சைவ சமயச் சிற்பங்களும் விரவிக் காணப்படுகின்றன. நான்காம் தளத்திலும், ஐந்தாம் தளத்திலும் பெரும்பாலும் விஷ்ணுவின் சிற்பங்களும், அடியவர், ஆண், பெண் மற்றும் பாலியல் சிற்பங்களும் உள்ளன. பிற தளங்களிலும் மேற்கண்ட அமைப்பே காணப்படுகிறது.

ஸ்ரீவைகுண்டம் கோபுரம் உயர்ந்த கோபுரமாக இருப்பினும் இதில் இடம்பெற்றுள்ள சிற்பங்கள் எல்லா நிலைகளிலும் விரவியே காணப் படுகின்றன.

மேலும், இதில் சிற்பங்களின் அமைப்பு முறை ஏதும் இல்லை. இயக்கநிலை இன்றி அமைந்துள்ள இச்சிற்பங்கள் கலையழகு மிக்கனவாக இல்லை.

## தொகுப்புரை

இதுவரை கண்ட 'சிற்பக்கலை' என்னும் இயல் மூலம், விசயநகர-நாயக்கமன்னர் காலத்தில் இருபெரும் இதிகாசங்களுக்கும், புராணக் கதைகளுக்கும் அதிக முக்கியத்துவம் கொடுத்து அவற்றை விளக்கும் சிற்பங்களும், சிற்பத்தொகுதிகளும், கோயில் மண்டபங்களிலும், விமானத்தின் தளங்களிலும், கோபுரங்களின் தளங்களிலும், செதுக்கப்பட்டுள்ளமை புலனாகிறது. அம்மன்னர்கள் வைணவர்களாயிருந்த போதும் சைவ சமயத்தின் மீது காழ்ப்புணர்வு கொண்டவரல்லர் என்பதை அறிவிக்கும் வகையில் சைவசமயத் தொடர்புடைய சிற்பங்களும் இக்கோயில்களில் இடம்பெற்றுள்ளன.

இக்கோயில்களில் உள்ள சிற்ப அமைப்புகள் கிராமங்களில் அல்லது நகரங்களில் அக்காலத்தில் நடத்தப்படும் நாடகப்பாங்கினைப் போன்று கதைத் தொடர்ச்சியினைக் கொண்டு, கற்களாயிருப்பினும் தொடர் கதையாக இயக்க நிலையில் உயிரோட்டமுள்ளவனவாகவும் காட்டப்படுவது இங்கு நோக்கத்தக்கதாகும். சில கோயில்களில் மட்டுமே இவ்வியக்க நிலையும், கதைத் தொடர்பும் அறுபடுவதைக் காண்கிறோம். அறுபடுவதற்குக் கலைஞர்களின் உளநிலையும் அன்றைய அரசியல் பொருளாதார சூழலும் கூடக் காரணிகளாக இருந்திருக்கலாம். தூணில் இடம் பெறும் சிற்பத்துடன் தொடர்புடைய மற்ற சிற்பங்கள்

பக்கவாட்டிலோ, எதிரிலோ அமைக்கப்படுவது ஒரு பொதுமரபாகவே இருந்து வந்துள்ளது. சில இடங்களில் இம்மரபு பின்பற்றப்படாமல் இருந்திருக்கலாம். இக்காலத்தில் பாலியல் சிற்பங்கள் வெகுவாக இடம் பெற்றுள்ளமை கலைஞனின் படைப்பில் அரசரின் கட்டுப்பாடு குறைந்துள்ள நிலையையே நமக்கு உணர்த்துவதாகக் கொள்ளலாம். நாட்டார் வழக்குவகைச் சிற்பங்கள் அக்காலச் சமுதாய நடவடிக்கைகளை எடுத்துக்காட்டுவதாய் உள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. சோழபாண்டியர் என்பவர்கள் சோழர்களே. முற்காலப்பாண்டியர் காலத்தின் இறுதியில் அவர்களை வென்று பாண்டியநாட்டைக் கைப்பற்றி சுமார் ஐம்பது ஆண்டுகள் அரசாட்சி செய்தனர். அப்போது மக்கள் தங்களை ஏற்றுக் கொள்ளவும், தாங்கள் வேற்றுநாட்டவர்கள் என்று மக்கள் நினைக்காமலிருக்கவும் வேண்டி தங்களைச் சோழபாண்டியர் என்றே அழைத்துக் கொள்ளலாயினர்.
2. உதாரணமாக சோழபாண்டியர் காலத்துக் கோயிலான மன்னார் கோயில் இராசகோபாலசுவாமி கோயிலின் கருவறை மற்றும் அர்த்தமண்டப அதிட்டானத்துக் கண்டச் சிற்பங்கள் சோழர் கலைப்பாணியைச் சேர்ந்ததாகும். எனினும், இது கண்டச் சிற்பங்கள் என்பதால் இதில் கலைப்பாணியைத் துல்லியமாகக் கூற இயலவில்லை. இத்தகு சிற்பங்களும் இங்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.
3. *ஆர்.வெங்கட்ராமன், பேராசிரியர் ஓய்வு, பேட்டி 28.11.95.*
4. *இரா. இரெங்கம்மாள், ஸ்ரீவில்லிபுத்தூர் வடபெருங்கோயிலும் ஆண்டாள் கோயிலும் ஓர் ஆய்வு, ஆய்வேடு, ப.259.*
5. *வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார், கம்பராமாயண உரை, ஆரணிய காண்டம், ப.754.*
6. *மேலது, ப.223.*
7. இச்சிற்பத்தில் தலையில் கிரீடம் இல்லாததையும், கிரீடம் உள்ளதனையும் வைத்தே முறையே அங்கதன், சுக்ரீவன் என அடையாளம் காண இயலுகின்றது.
8. *ஆர். வெங்கட்ராமன், பேராசிரியர் ஓய்வு, பேட்டி : 2.1.95.*
9. *வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரியார், கம்பராமாயண உரை, ஆறாவது யுத்த காண்டம், அதிகாயன் வதைப்படலம், பாடல்: 1927.*
10. G.Sethuraman, **Facets of Indian Art and Culture,** 1995 p.54.
11. உதாரணம், மதுரை மீனாட்சியம்மன் கோயில் பொற்றாமரைக் குளத்தை ஒட்டிய பிரகாரத்தில் இடம்பெறும் வாலி-சுக்ரீவன் சிற்பம்.
12. *இரா. இரெங்கம்மாள், ப.225.*
13. G. Sethuraman, 1995, p. 43.
14. *மேலது, பக். 43-45,* மற்றும் **Random House library series II,** p.199-200.
15. *வை.மு.கோபாலகிருஷ்ணமாச்சாரி, வில்லிபுத்தூரரின் மகாபாரதம், விராடபருவம், ப.188.*
16. Margaret, Stutley, **The Illustrated Dictionary of Hindu Iconography,** p.110.

17. மேலது.
18. R.Chempaklakshmi, **Vaishnava Iconography in the Tamil Country**, p.93.
19. இது போலவே இராமாயணத்தில் திருமாலின் அவதாரங்களாக இராமனும் பரசுராமனும் சந்தித்துச் சண்டையிடுவதாகவும் அதில் பரசுரமானை இராமன் வென்றதாகவும் கூறப்படுகின்றது.
20. R.Chempakalakshmi, p.195.
21. T.A.Gopinatha Rao, **Elaments of Hindu Iconography**, Part II, Vol.I, p.201.
22. மேலது, ப.20.
23. இரா.இரெங்கம்மாள், ப.260.
24. Margaret Stutley, p.88.
25. R.Chempakalakshmi, p.145.
26. Margaret Stutley, p.88.
27. R.Chempakalakshmi, p.146.
28. Margaret Stutley, p.159.
29. மேலது.
30. மேலது.
31. T.A. Gopinatha Rao, Vol.I, Part II, p.358.
32. Vettam Mani, **Puranic Encyclopaedia**, Padma Purana Chap 3-5, p.496.
33. Richard Butor and others, **The Kamasutra of Vatsayana**, p.XVII.
34. காளிதாசர், குமாரசம்பவம் ப.16.
35. C. Sivaramamoorti, **Art of India**, p.185.
36. Devachariya and others, **Silparatnam**, p.168.
37. T.A. Gopinatha Rao, Vol.I., Part II, p.268.
38. S.Selvin Kumar, **Manmatha and Rati in Sculptures**, p.45.
39. R.Nagasamy, **The Art of Tamilnadu**, Plate : 56.
40. **Bhagavata Purana**, Chap VIII, **Matsya Purana**, Chap.249-51.
41. R.Chempakalakshmi, p.168.
42. T.A.Gopinatha Rao p.168.
43. மேலது, ப.284.
44. பரஞ்சோதிமுனிவர், திருவிளையாடற்புராணம், மதுரைக் காண்டம், பாடல் 542.
45. மு.அருணாசலம்பிள்ளை, தொல்காப்பியம், அகத்திணையியல் உரைவளம் ப.241.
46. இரா.இரெங்கம்மாள், ப.210.
47. Margaret Stutley, p.126.
48. D.Devakunjari, **Madurai through the ages.**
(படத்தின் கீழ் எழுதப்பட்ட விளக்கம்)
49. A.V.Jeyachandrun, **Madurai Temple Complex**, p.74.

50. இரா. நாகசாமி, ஓவியப்பாவை, ப.28.
51. குடவாயில் பாலசுப்ரமணியன், சோழ மண்டலத்து வரலாற்று நாயகர்களின் சிற்பங்களும், ஓவியங்களும், ப.73.
52. இரா.நாகசாமி, ப.62.
53. கணேசபட்டர், மீனாட்சியம்மன் திருக்கோயில், பேட்டி : 10.11.93.
54. மேலது.
55. பார்க்க, Prakash, Vidya, Khajuraho.
56. உதாரணமாக திருநெல்வேலி மாவட்டம், அம்பாசமுத்திரம் வட்டம், கல்லிடைக்குறிச்சி வராகப்பெருமாள் கோயில் கதவில் இடம் பெறும் மரச் சிற்பங்கள் இதே அமைப்பைப் பெற்று விளங்குகிறது.
57. கூடலழகர்கோயில் மற்றும் மன்னார்கோயில்களில் கண்டச் சிற்பங்கள் விமானத்தின் அதிட்டானத்தில் மட்டுமல்லாது அர்த்தமண்டபத்தின் அதிட்டானத்திலும் இடம்பெற்றுள்ளன. அர்த்தமண்டபத்திலிருந்து தொடங்கி விமானத்தைச் சுற்றி மீண்டும் அர்த்தமண்டபத்தில் முடிவடைவதால் தொடர்ச்சி கருதி இங்கு அர்த்தமண்டபச் சிற்பங்களும் எடுத்துக் கொள்ளப்படுகின்றன.
58. K.V.Soundrarajan, Art of South India, Tamil Nadu and Kerala, p.158.

5

# ஓவியக்கலை

## முன்னுரை

ஓவியம், மொழி இவை இரண்டும் மனிதன் தன் கருத்தை மற்றவர்களுக்குப் புலப்படுத்துவதற்குரிய கருவிகளாக அமைகின்றன. மொழியினும் முன்தோன்றிய ஓவியம் கூறவேண்டிய கருத்தை அழகுபடவும், தெளிவுபடவும் கூறுவதற்கு ஏற்ற ஒரு ஊடகமாயிருக்கின்றது. வேட்டையினச் சமூக மனிதன் காலத்திலேயே பாறை ஓவியங்கள் தோன்றிவிட்டன. அத்தகைய பாறை ஓவியங்களின் பெரும்பகுதி இன்று அழிந்துவிட்டன. வேட்டையாடும் மிருகங்களை வரைதல், தன்னைப்பயமுறுத்தும் மிருகங்களை வரைதல் ஆகியவை அவற்றைத் தன் கட்டுபாட்டில் வைக்கப் பயன்படும் ஒரு வித்தையாகவே மனிதன் கருதியிருக்க வேண்டும். அதனால் தான் முந்திய பாறை ஓவியங்களில் பெரும்பான்மையாக வேட்டை மிருகங்களின் உருவங்கள் வரையப்பட்டுள்ளன. உதாரணமாக உத்திரப்பிரதேசத்தில் மிர்சாப்பூர், பண்டா, பண்டேல்கண்டு ஆகிய இடங்களில் உள்ள பழங்காலப் பாறை ஓவியங்களைக் கூறலாம்.

இயற்கையில் காணலாகும் அழகிய காட்சிகள் பழங்கால மனிதனின் உள்ளத்தில் ஒருவகைக் கிளர்ச்சியைத் தந்தன. அத்தகைய கிளர்ச்சியுணர்வுகள் படிப்படியாக அழகுணர்ச்சிகளாக மலரலாயின. அந்த உந்துதலின் வெளிப்பாடாகவே சித்திரங்களை மனிதன் தீட்ட ஆரம்பித்தான் எனத்தெரிகின்றது. குறிப்பாகக் கோயில் கட்டட அமைப்பில் சிற்பங்கள் சில குறிப்பிட்ட இடங்களில் தான் அமைக்கப்பட முடியும். ஆனால், ஓவியங்களை கோயிற் கட்டடத்தின் எவ்விடத்தில் வேண்டுமானாலும் இடம்பெறச் செய்யமுடியும். எனவே, ஓவியம் ஒரு சிறந்த நுண்கலையாகக் கருதப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டது.

ஓவியத்தைப்பற்றி விஷ்ணு தர்மோத்திரத்தில் உள்ள சித்திர சூத்திரத்தில் அதிக அளவில் குறிப்புகள் காணப்படுகின்றன.[1] இது தவிர அபிலாசித்தார்த்த சிந்தாமணி, சிவதத்துவரத்னாகரம், சிற்பரத்தினம், நாரதசிற்பம், சரசுவதிய சித்திரகர்மசாத்திரம், பிரஜாபதி சிற்பம் போன்றவை ஓவியம் தொடர்பான சிறந்த நூல்கள் ஆகும். இவற்றில் பெரும்பாலான நூல்கள் தென்னிந்தியாவில் தோன்றியவை.[2] இவற்றில் பல பிற்காலத்தில் எழுதப்பட்டவையாகும்.

உலகிலேயே மிகத் தொன்மையான குகை ஓவியம் ஸ்பெயின் நாட்டில் அல்டமிரா என்ற இடத்திலும், பிரான்சில் லாசெக்சிலும், இந்தியாவில் பிம்பெட்கா என்ற இடத்திலும் கிடைத்துள்ளன.[3] இதைத்தவிர, இந்தியாவில் உத்திரப்பிரதேசத்தில் மிர்சாப்பூர், பண்டா, பண்டேல்கண்டு, விந்திய மலைத் தொடரில் மகாதேவக்குன்றுகள், பாகேல்கண்டு பரப்பில் கைமூர் குன்றுகள், மத்திய இந்தியாவில் ராய்கர் மாவட்டத்துச் சிங்கண்பூர், தெற்கில் பல்லாரி ஆகிய இடங்களில் உள்ள பண்டைய குகைகளிலும், பாறைச்சரிவுகளிலும் இந்தியாவின் மிகப்பழைய ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.[4] முன்னர் சொன்னதுபோல் இவை பெரும்பாலும் மனிதன் விலங்குகளுடன் எதிர்த்துப் போரிடும் வேட்டைக் காட்சிகளைச் சித்தரிப்பதாகவே உள்ளன. இந்த வகை ஓவியங்களே பிற்காலத்தில் மிருகங்களுடன் போராடி மாயும் வீரமரணத்தைச் சுட்டும் வீரக்கல் சிற்பங்களுக்கு முன்னோடிகளாய் இருந்திருக்க வேண்டும். இந்தியாவில் வரலாற்றுக்கால ஓவியங்களுள் காலத்தால் முற்பட்டவை சாதவாகனர் காலத்து ஓவியமாகும். இவை கி.மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. இரண்டாம் நுற்றாண்டு வரையிலான காலத்தைச் சேர்ந்தனவாகும்.[5] இவர்களது காலத்தில் வெட்டப்பட்ட குடைவரைக் கோயில்களில் இன்றியமையாதவை நாசிக், பேட்சா, பாஜா, அமராவதி கார்லா, கொண்டானே ஆகிய குடைவரைகளாகும். இவற்றில் இடம்பெற்றுள்ள குகை ஓவியங்கள் சிறப்புப்பெற்றவை. இதில் கௌதமபுத்தரின் முந்தையப்பிறவிகளிலிருந்தும் அவர்தம் புத்த நிலை வாழ்க்கையில் இருந்தும் பல காட்சிகள் தீட்டப்பட்டுள்ளன. இங்குள்ள ஓவியங்களில் சாஞ்சி தோரண வளைவுகளில் உள்ளது போன்று ஏராளமான உருவங்களை உள்ளடக்கியும் இயற்கையின் வனப்பு மாறாமலும் அமைக்கப்பட்டுள்ளன.

தமிழகத்தில் ஓவியம் மற்றும் ஓவியக்கலை பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத் தொகுப்புக்களிலேயே கிடைக்கின்றன.[6]

எனினும், இன்று அவ்வோவியங்கள் நமக்குக் காணக்கிடைக்க வில்லை. தமிழ்நாட்டில் மல்லபாடி என்னுமிடத்தில் கிடைத்த குகை ஓவியமே காலத்தால் முற்பட்டதாகும்.[7] தமிழகத்தில் இவ் ஓவியக்கலை பல்லவர், சோழர், பாண்டியர், விசயநகர - நாயக்கர் ஆகியோரால் வளர்க்கப்பட்டது

பல்லவரது ஓவியங்களில் பெரும்பாலானவை அழிந்துவிட்டன. எஞ்சியவை சிலவே. அவற்றுள் மாமண்டூரில் உள்ள முதலாம் மகேந்திரவர்மப் பல்லவன் குடைவித்த குடைவரைக் கோயிலில் அவனது காலத்தில் வரையப்பட்ட ஓவியங்களின் வண்ணங்களே ஆங்காங்கு உள்ளன. இவைதவிர, இராசசிம்மன் காலத்தில் வரையப் பட்ட ஓவியங்கள் காஞ்சி கைலாசநாதர் கோயிலிலும் பனைமலைத் தாலகிரீசுவரர் கோயிலிலும் காணப்படுகின்றன. இவர்களது காலத்தில்

சோமாசுகந்தர், கின்னரர், கின்னரி, இலக்குமி, துர்க்கை முதலிய ஓவியங்கள் தீட்டப்பட்டன. பல்லவர்கள் ஓவியங்கள் வரைவதிலும் வண்ணங்கள் திட்டுவதிலும் ஆர்வமாய் இருந்தனர் என்பதனைக் காஞ்சி கையாலசநாதர் சுற்றுப்பிரகாரத்தில் அமைந்துள்ள சிறுகோயில்களில் உள்ள சிற்பங்களில் தீட்டப்பட்டுள்ள வண்ணங்கள் மூலம் அறியலாம்.

சோழர் காலத்தில் ஓவியக்கலை நன்கு வளர்ச்சி அடைந்திருந்தது என்பதனைத் தஞ்சைப்பெருவுடையார் கோயிலில் காணப்படும் ஓவியங்களைப் பார்க்கும்போது தெரிகின்றது. இவ்வோவியங்கள் முதலாம் இராசராசன் (கி.பி. 985-1014) காலத்தில் தீட்டப்பட்டதாகும். இவற்றில் தாருகாவனக்காட்சி, திரிபுராந்தகர் கதை, தட்சிணாமூர்த்தி, சுந்தரமூர்த்திநாயனார், சேரமான்பெருமாள்நாயனார், நடராசர், இராசராசர், கருவூர்த்தேவர், முப்புறம்எரித்தவிரிசடைக்கடவுள், இராவணன் கையிலாய மலையைத் தூக்கும் காட்சி முதலியன வரையப் பட்டுள்ளன. இதில் சுந்தரமூர்த்திநாயனார் கதை சித்தரிக்கப்பட்டுள்ளது. இச்சோழர்கால ஓவியங்களின்மேல் சுதை பூசப்பட்டு அதில் நாயக்கர் காலத்தில் ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன. இந்நாயக்கர்கால ஓவியங்கள் சிதைவுற்ற இடத்தில் தெரிந்த சோழர்கால ஓவியங்களை 1930-ஆம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் எஸ்.கே.கோவிந்தசாமி என்பவர் கண்டுபிடித்தார்.[8] சோழர்கால ஓவியங்கள் தஞ்சை பெருவுடையார் கோயில் தவிர நார்த்தாமலையில் உள்ள விசயாலய சோழீசுவரம், மலையடிப்பட்டி விஷ்ணு குடைவரைக் கோயில் முதலியவற்றில் இடம்பெற்றுள்ளன. இதில் நார்த்தாமலையில் உள்ள ஓவியங்கள் பெரிதும் அழிந்து, அங்கு ஓவியங்கள் இருந்தன என்பதற்கான தடயங்கள் மட்டுமே உள்ளன. மேற்கூறப்பட்டுள்ள இரு கோயில்களும் சோழர் கட்டிய கோயில்கள் தானா? என்பதில் கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன.

பாண்டியர் கால ஓவியங்கள் நெல்லைத் திருமலைபுரம் குடைவரைக் கோயில், குமரி மாவட்டம் திருநந்திக்கரை குடைவரைக் கோயில், சித்தன்னவாசல் குடைவரைக் கோயில் முதலிய இடங்களில் காணக்கிடைக்கின்றன. இவற்றில் சித்தன்னவாசல் ஓவியங்கள் மிகவும் புகழ்பெற்றவை. இதில் பொய்கை, தாமரை, அல்லிமலர்கள், அன்னப்பறவைகள், மீன்கள், கந்தர்வர்கள், யானைகள், எருமைகள், ஆடவர் மூவர் முதலிய பல ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன. இவை அங்குச் சமணசமயம் மேலோங்கி இருந்தமையை விளக்குகின்றன.

விசயநகர-நாயக்கர் வேற்றுநாட்டு அரசர்களாயினும் தமிழகத்துக் கோயிற் கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை ஆகியவற்றை வளர்த்ததில் பெரும்பங்கு பெற்றுள்ளனர். கி.பி. 14-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த விசயநகர ஓவியம் லெபாக்சி, அனிகுண்டே, விசயநகர் ஆகிய இடங்களில் கிடைக்கிறது. தமிழகத்துக் கோயில்களுள் அதிக அளவில்

இவர்களது ஓவியம் இடம் பெற்றுள்ளது. தமிழகத்தில் விசயநகர-நாயக்கர் காலத்து ஓவியம் காஞ்சிபுரம், திருவரங்கம், திருவீழிமிழலை, தில்லை, கும்பகோணம் ஆகிய இடங்களில் காணப் படுகிறது. நாயக்கரது ஓவியங்க்ள் திருவாரூர், தஞ்சை, திருவலஞ்சுலி, செங்கம், சிதம்பரம், கும்பகோணம், திருவெள்ளறை, திருவண்ணாமலை, புதுக்கோட்டை, மதுரை, அழகர் கோயில், திருக்கோட்டியூர், ஸ்ரீவில்லிபுத்தூர், குற்றாலம், இடைக்கால், ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி போன்ற பல இடங்களில் இடம் பெற்றுள்ளன.

இதுவரை பெரும்பாலும் மகாவீரர், புத்தர் மற்றும் இந்துக் கடவுளர்களின் கதைகளில் வரும் நிகழ்ச்சிகள் பற்றிய ஓவியங்களே அமைக்கப்பட்டுள்ளன எனக்கண்டோம். விசயநகர-நாயக்கர் காலத்தில் இதிகாசமான இராமாயணம் மற்றும் பாகவதம் முதலிய கதைத் தொடர்பானவற்றையே தீட்டியுள்ளனர். இவை தவிர அந்தந்தக் கோயில் தலபுராணம் தொடர்பான ஓவியங்களும் இடம்பெற்றுள்ளன. வைணவக் கோயில்களில் பஞ்சாயுத புருசர்கள், பஞ்சாயுதங்கள், திருமாலின் பத்து அவதாரங்கள்; வியூக நிலைகளான பன்னிரண்டு வியூகங்கள், இருபத்துநான்கு வியூகங்கள் முதலானவையும்; பெரியதிருவடி, சிறியதிருவடி, வைணவ அடியார்கள், கின்னரர்கள், கின்னரிகள், சிவன், பிரம்மன் திக்குபாலகர்கள் முதலிய ஓவியங்களும் இடம்பெற்றன. சைவசமயக் கோயில்களில் சிவபுராணக் காட்சிகள், கந்தபுராணக்காட்சிகள் முதலியன வரையப்பட்டுள்ளன. மேற்கண்ட வற்றில் திக்குபாலகரது ஓவியம், சைவம், மற்றும் வைணவம் ஆகிய இரண்டு சமயக் கோயில்களிலும் காட்டப்பெற்றுள்ளன.

## விசயநகர – நாயக்கரது ஓவியப்பாணி

விசயநகர மன்னர்கள் ஹொய்சாலர்களது ஓவியப்பாணியைப் பின்பற்றி ஓவியம் தீட்டினர்[10]. மேலும் இவர்களது ஓவியமானது 'லெபாக்சிபாணி' என்று அழைக்கப்படும். முதன் முதலில் லெபாக்சியில் அவர்தம் ஓவியம் அமைக்கப்பட்டதால் அதற்கு அப்பெயர் வழங்கப்படுகிறது. இவர்களது ஓவியங்களில் மூக்கு, கண், முழங்கை, கால், அடி இவை சற்றுக் கூர்மையாக வரையப்பட்டிருக்கும். பெண் ஓவியத்தில் உடல் ஒல்லியாய் இருப்பினும் மார்பகங்கள் சதைப்பற்றுடையனவாய் எடுப்பாய் அமைந்திருக்கும். வண்ணங்களில் சிவப்பு அதிகமாய் இடம்பெற்றிருக்கும். பெண்கள் புடவை அணிந்திருப்பினும் மார்பின் ஒரு பகுதி வெளியே தெரியும்படியாக வரையப்பட்டிருக்கும் என நாயக்கர் கால ஓவியம் பற்றிப் பொதுவான கருத்தாகக் கூறுவர்.[11]. இவை தவிர இவ்வோவியங்களின் மிக முக்கிய இயல்பானது இவை நேர்பார்வை அமைப்பிலோ, பக்கவாட்டுப் பார்வை அமைப்பிலோ அமையும். பக்கவாட்டுப் பார்வையில் (profile) ஓவியம் இடம்பெறும் பொழுது இரு கண்கள் வரையப்படாது ஒரு கண்மட்டும் வரையப்பட்டிருக்கும்.

ஓவியத்தொகுதியில் அவ்வோவியம் வரையச் செய்த அரசனது உருவம் பெரும்பாலும் ஏதாவது ஒரு பகுதியில், அல்லது அவ்வரசனது விருப்பப்படியான தக்க இடத்தில், இடம் பெற்றிருக்கும். நத்தம் கோவில்பட்டி சிவன் கோயிலில் காணப்பெறும் 'குமார சம்பவம்' ஓவியத் தொகுதியில் அதனை வரையச் செய்த லிங்கமநாயக்கரது உருவம் இடம்பெற்றிருப்பதையும், மதுரை மீனாட்சி-சுந்தரேசுவரர் கோயில் ஊஞ்சல் மண்டபத்தில் உள்ள திருவிளையாடற் காட்சி ஓவியத்தில்[12] மீனாட்சி-சுந்தரேசர் திருமணத்தைப் பதினேழாம் நூற்றாண்டில் அரசியாயிருந்த மங்கம்மாள் கண்டுகளிப்பது போல உள்ள ஓவியத்தையும், ஸ்ரீவைகுண்டத்தில் இடம்பெற்றுள்ள நூற்றி எட்டு திவ்வியதேச இறையுருவங்களின் ஓவியத்தில்[13] விசயநகர-நாயக்க மன்னரின் (பெயர் குறிப்பிடப்படவில்லை) ஓவியத்தையும் மேற்சொன்ன கருத்திற்கு உதாரணங்களாகக் கொள்ளலாம்.[14]

மேலும், ஓவியங்கள் சிலவற்றில் அவ்ஓவியத்தை வரைந்த ஓவியனின் பெயர்கூட இடம்பெறுவதுண்டு. மேலும், சில தொடர் ஓவியங்களில் அவ்ஓவியத்தினைக் காண்போர் எங்கு ஆரம்பித்து எப்படிப் பார்த்துவர வேண்டும் என்பது கூட எழுதப்பட்டிருக்கும். மேற்கண்ட இரு அமைப்புகளும் அழகர்கோயில் வசந்த மண்டப இராமாயண ஓவியத்தில் இடம்பெற்றுள்ளன.

இராமாயணம், கந்தபுராணம் முதலிய தொடர் ஓவியங்களில் அவை பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பகுதியிலும் மேலே ஓவியம் பற்றிய விளக்கங்களும், கீழே அதற்கான ஓவியமும் இடம்பெறும். இவ்வெழுத்துக்கள் தமிழிலோ, தெலுங்கிலோ இருக்கும். சில இடங்களில் மேலே தெலுங்கிலும் கீழே தமிழிலும் எழுதப்பட்டிருக்கும்.

விசயநகர-நாயக்கர் தெலுங்கு மொழியைப் பெரிதும் வழக்கத்தில் வைத்திருந்தனர் என்பதால் ஓவியத்தில் பெரும்பாலான கருத்துக்களை (Themes) தெலுங்கு மொழியில் இருந்து கையாண்டுள்ளனர். இராமாயண ஓவியத்தை வால்மீகி இராமாயணம் மற்றும் கம்பராமாயணம் ஆகியவற்றின் அடிப்படையில் அமைத்திருக்கின்ற போதும், பெரும்பான்மையாகத் தெலுங்கில் புகழ்பெற்ற இரங்கநாத இராமாயணத்தைத் தங்களது கலை அமைப்புக்களில் பயன்படுத்தியுள்ளமையும் நன்றாகத் தெரிகின்றது.[15] மேலும், விசயநகர-நாயக்கரது ஓவியங்களில் வட்டாரப் பழக்கவழக்கங்களின் தாக்கம் அதிகம் இடம்பெற்றிருப்பதைக் காணலாம்.

## பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களில் ஓவியம்

இங்கு எடுத்துக்கொண்ட கோயில்களுள் கீழ்க்காணும் கோயில்களில் மட்டுமே விசயநகர-நாயக்கர் கால ஓவியங்கள் இடம் பெற்றுள்ளன. அவை.

1. அழகர்கோயில் - கள்ளழகர் கோயில்
2. மதுரை - கூடலழகர் கோயில்
3. ஸ்ரீவில்லிபுத்தூர் - ஆண்டாள் கோயில்
4. திருக்கோட்டியூர் - உரக மெல்லணையான் கோயில்
5. ஸ்ரீவைகுண்டம் - வைகுண்டநாதர் கோயில்
6. திருக்குறுங்குடி - நம்பிகோயில்
7. ஆழ்வார்திருநகரி - ஆதிநாதர் கோயில்
8. மன்னார்கோயில் - இராசகோபாலசுவாமி கோயில்

மேற்கண்ட கோயில்களில் அழகர்கோயில் வசந்த மண்டபத்திலும், ஸ்ரீவில்லிபுத்தூர் யாளி மண்டபத்திலும் இராமாயண ஓவியம் இடம் பெற்றுள்ளது. மதுரை, திருக்கோட்டியூர், மன்னார்கோயில் ஆகிய கோயில்கள் அஷ்டாங்க விமானமாதலின் மேலிரு கருவறைகளில் ஓவியங்கள் தீட்டப்பெற்றுள்ளன.[16] நான்குகால் மண்டபத்தின் விதானத்தில் ஓவியங்கள் உள்ளன. ஆழ்வார்திருநகரியில், அவ்வூரில் தோன்றியவரும் வைணவ ஆழ்வார்களில் தலைசிறந்தவராகக் கருதப்படுபவருமான நம்மாழ்வாரது வாழ்க்கை வரலாற்றை ஓவியமாகத் தீட்டியுள்ளனர். ஒவ்வொரு கோயிலிலும் வரையப்பட்டுள்ள ஓவியங்களின் சிறப்புக் கூறுகளைக் தனித்தனியாகக் காண்பது இன்றியமையாததாகும்.

## 1. அழகர்கோயில் இராமாயண ஓவியம்

இங்கு வசந்த மண்டபத்தின் நான்குபக்கச் சுவர்களிலும், விதானத்திலும் இராமாயண ஓவியம் இடம்பெற்றுள்ளது. சுவர்ப்பகுதியில் ஓவியம் இரண்டாகப் பிரிக்கப்பட்டு, மேல் வரிசையில் துவங்கிச் செல்லும் இவ்வோவியம் பின்பு, கீழ்வரிசையிலும் தொடர்ச்சியாக வரையப்பட்டுள்ளது. இவ்வோவியங்கள் சிறுசிறு கட்டங்களாகப் பிரிக்கப்பட்டு அவற்றின் மேற்பகுதியில் தமிழில் விளக்கமும் அதற்குரிய ஓவியம் அதன் கீழும் இடம்பெற்றுள்ளது. எழுத்துக்கள் எழுதுமிடம் கறுப்பு வண்ணம் தீட்டப்பட்டு அதன் மீது எழுத்துக்கள் வெள்ளை நிறத்தில் எழுதப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஓவியத்தையும் பிரித்துப்பார்க்க அவைகளுக்கு இடையிடையே கறுப்புப்பட்டை தீட்டப்பட்டுள்ளது. விமானத்தில் தீட்டப்பட்டுள்ள ஓவியங்கள் வலமிருந்து இடம், இடமிருந்து வலம் என்ற அமைப்பில் (Zig Zag pattern) அமைந்துள்ளன. இராமாயணக்கதையின் ஆரம்பமாக பாற்கடலில் பள்ளிகொண்டுள்ள விஷ்ணுவிடத்தில் முனிவர்களும், தேவர்களும் சென்று அசுரர்களது கொடுமைக்கு முடிவுகாண வேண்டுகின்றனர். அதனை ஏற்று விஷ்ணு இராமனாகப் பிறப்பேன் என்று வாக்குத்தருகின்றார். இதிலிருந்து துவங்கி வசிட்டர் தயரதனிடம் குழந்தைபெற கலைக்கோட்டு முனிவரை அழைத்துவந்து யாகம்

செய்யவேண்டும் என்று கூறுவதிலிருந்தும் தொடர்ந்து இராம-இராவணயுத்தம் வரை ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என அனைத்துக் காண்டப்பகுதிகளுக்கும் சம முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. இனி இவ்வோவியத்தின் சிறப்புக்களைக் காணலாம்.

## இயக்க உத்தி (Animation Technique)

இவ்வோவியத்தில் விசுவாமித்திரன் அயோத்திக்கு வரும் போது தசரதன் விசுவாமித்திரனது காலில் விழுந்து வணங்குவது, பின் எழுவது ஆகிய இரண்டு நிகழ்வுகளையும் தசரதனின் ஒரே உருவத்தில் இடுப்புக்கு மேல் இரண்டு உருவங்களை வரைந்து ஒரு உருவம் கீழ்நோக்கி விழுவது போலவும், மற்றொரு உருவம் நிமிர்வது போலவும் வரையப்பட்டுள்ளது. இரு காட்சிகள் இவ்வாறு வரையப்பட்டிருப்பது இயக்க ஆற்றலை வெளிப்படுத்துவதாக உள்ளது. எனவே, இவ்வோவியம் ஒரு நிகழ்வு உணர்வை ஏற்படுத்துகின்றது.

இதே போல் தாடகை வதத்திலும் இயக்க உத்தி பயன்படுத்தப் பட்டுள்ளது. இதில் தாடகையின் இரண்டு உடல்களில் ஒன்று இராமனின் அம்புபட்டுத் துடிப்பது போலவும், மற்றொரு உடல் சரிந்து கீழே விழுவது போன்றும் காட்டப்பட்டுள்ளன.

இராம-இலக்குவர் பதினான்கு ஆண்டுகள் கானகம் செல்ல வேண்டிப் பெற்றோரை வணங்கி எழும் காட்சி தசரதன் விசுவாமித்திரர் காலில் வணங்கி எழுந்த காட்சி போலவே அமைக்கப்பட்டுள்ளது.

இயக்க உத்தியானது ஓவியங்களில் மட்டுமின்றி சிற்பங்களிலும் அமைக்கப் பெறுவதுண்டு. இத்தகு இயக்க உத்தி மதுரை கூடலழகர் கோயில் விமானப்பகுதியில் குறிப்பாக தாடகைவதம், அகலிகை சாபவிமோசனம் முதலிய காட்சிகளில் காட்டப்பெற்றிருப்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. இவ்வியக்க உத்தி கதை நிகழச்சியை நடத்திக் காட்டுவது போல் அமைவதோடு மட்டுமல்லாது இரண்டு நிலைகளில் கூறவேண்டியதை ஒரே நிலையில் கூறி விடுவதால் இடம் மற்றும் நேரம் மிச்சமாவதோடு புதிய உத்திகள் வெளிப்பட இடமளிப்பதாக அமைகின்றது.

## வட்டாரப் பழக்க வழக்கங்களின் தாக்கம்

முன்னமே கூறியபடி இவ்வோவியத்தில் பல இடங்களில் கம்பராமாயணம் அல்லது வால்மீகி இராமாயணத்தில் கூறப்படாத காட்சிகள் (ஒருவேளை இரங்கநாத இராமாயணத்தைச் சேர்ந்த காட்சி களாக இருக்கலாம்.) இடம்பெற்றுள்ளன. வட்டாரப் பழக்கவழக் கங்களின் தாக்கத்தினாலோ அல்லது இரங்கநாத இராமாயணத்தின்

தாக்கத்தினாலோ இத்தகு காட்சிகள் அமைகின்றன. உதாரணமாக கோசலை, கைகேயி, சுமித்திரை ஆகிய மூவரும் நின்ற நிலையில் குழந்தை பெற்றுக்கொள்கின்றனர். அப்போது தாதியர் இருவர் சீலையால் மறைத்து நிற்பது போன்றும் வரையப்பட்டுள்ளது. நின்ற நிலையில் குழந்தை பெறுவது நம் நாட்டில் பழங்காலத் தொட்டே நிலவி வந்த மரபு என்பதைச் சிற்பங்களின் வாயிலாக அறியலாம். உதாரணமாக மதுரை மீனாட்சி-சுந்தரேசுவரர் ஆலயத்துக் கம்பத்தடி மண்டபத்திலும், மதுரை கூடலழகர்கோயில் பிரகாரத்திலும் இம்மாதிரிச் சிற்பங்கள் காணக்கிடைக்கின்றன. கௌதம புத்தரின் பிறப்பைக் குறிக்கும் சிற்பங்களில் அவரது தாயார் மாயாதேவி நின்ற நிலையில் காட்டப்பட்டிருக்கின்றார். மேலும், அஷ்வகோஷர் எழுதிய புத்த சரிதத்தில் மாயாதேவி சால மரத்தின் கிளையைப் பிடித்து நின்றிருந்த போது புத்தர் பிறந்தார் என்ற குறிப்பும் உள்ளது.[17].

இராமன், இலக்குவன், பரதன், சத்ருக்கணன் ஆகிய குழந்தைகளை நீராட்டும் பொழுது தாதியர் காலை நீட்டி அமர்ந்து கொண்டு தான் கட்டியிருக்கும் துணியை முழங்கால்வரை ஒதுக்கிக் கொண்டு குழந்தைகளை நீராட்டுகின்றனர். இத்தகைய வழக்கம் இன்றும் கிராமத்தில் உள்ளது. இதுவும் வட்டாரப் பழக்க வழக்கத்தின் தாக்கமாயிருக்க வேண்டும்.

குழந்தைகள் பிறந்த செய்தி கேட்ட தசரதன், வசிட்டர் மற்றும் பலரும் புடைசூழ வருகிறார். அப்பொழுது தசரதன் தாடியுடன் காணப்படுகிறார். இன்னும் பல கிராமங்களில் மனைவி கருவுற்ற நிலையில் கணவன் முகச்சவரம் செய்யாது இருப்பதைக் காண்கிறோம். தொன்று தொட்டே இவ்வழக்கம் இருந்து வந்துள்ளமை இங்குத் தெரிய வருகின்றது.

தசரதன் இறந்த செய்தி கம்பராமாயணத்தில் கூறப்பட்டுள்ளது. அழகர்கோயில் இராமாயண ஓவியத்திலோ தசரதன் இறந்தவுடன் அவரது வாயில் துணியைக் கட்டி எண்ணெய்க்கொப்பரையில் வைத்தபடி தீட்டப்பட்டுள்ளது. மேலும், தசரதனது உடலைப் பல்லக்கில் உட்காரவைத்து எடுத்துச் செல்லுதல், இடுகாட்டில் ஈமத்தில் அவனுடைய உடலைப் படுக்கவைத்து பரதன் தீ மூட்டுதல் முதலிய சடங்குகள் அக்கால வட்டாரப் பழக்கவழக்கங்களின் தாக்கமாக இருக்கலாம். மேலும், இன்றும் இறந்தவர்களது உடலில் எண்ணெய், சீயக்காய் முதலானவற்றை உற்றார் உறவினர் தடவி பின்னர் நீராட்டுவர். எனவே, சமுதாயத்தில் இருந்த பழக்கவழக்கத்தினை ஓவியன் அப்படியே ஓவியத்தில் ஏற்றியுள்ளான். இவ்வாறு ஓவியன் பல இடங்களில் வட்டாரப் பழக்க வழக்கங்களில் தனக்குப் பரிச்சயமானவற்றை ஓவியத்தில் தீட்டியுள்ளான்.

## சொல் வழக்கு

இராமாயண ஓவியங்களுக்கு மேல் தமிழில் எழுதப்பட்டுள்ள விளக்கங்கள் தூய தமிழில் இல்லை. மாறாக கொச்சைத் தமிழில், சொல் வழக்கில் உள்ளன. ஓவியன் நல்ல முறையில் தமிழ் தெரியாதவன் என்பதை இலக்கணப் பிழையோடு எழுதியிருப்பதிலிருந்தும், சொல் வழக்கில் கூட மிகவும் கொச்சைத்தமிழில் எழுதியதினின்றும் அறியலாம். சில இடங்களில் தெசரத மகாராசுலு என எழுதியிருப்பதினின்றும் ஓவியன் தெலுங்கு மொழி பேசுவோன் என்பது தெரிகிறது. கைகேயிப் பிராட்டியார் பரதனைப் பெற்றது. சுமித்திரைப்பிராட்டியார் லெட்சும ணரையும், சத்ருக்கணரையும் பெற்றது என்று எழுதுவதற்குப் பதிலாக கைகேயி பிராட்டியாள் பிரதறைபெற்றது. சுமித்திறி பிறாட்டியாற் லெட்சுமணறையும், சத்ரிக்கறையும் யிவர்களெ பெற்றது என எழுதப்பட்டுள்ளது. மேலும், திருக்கூட்டம் கூடி என எழுத்துவதற்குப் பதிலாக திருக்குட்டக்குடி என எழுதப்பட்டுள்ளது. இதன்மூலம் எழுத்துப் பிழையும் கொச்சைத்தமிழும் எந்த அளவிற்கு இடம் பெற்றுள்ளன என்பதை அறியலாம்.

## வண்ணம்

இராமாயண ஓவியத்தில் பொதுவாகப் பச்சை வண்ணம் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதற்கு அடுத்த நிலையில் மஞ்சள் வண்ணம் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவை தவிர வெள்ளை, காவி, கறுப்பு ஆகிய வண்ணங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அக்னியும், கலைக்கோட்டு முனிவரும் காவி நிறத்திலும் விஷ்ணு (திருப்பாற்கடலில்) நீல வண்ணத்திலும் காட்டப்படுகின்றனர்.

கடல் மற்றும் ஆறுகள் இடம்பெறும்போது அவை வெள்ளை நிறத்தில் வரையப்பட்டு, அது நீர்நிலை என்பதைக் குறிக்க அதில் சங்குகள், மீன்கள் முதலியவற்றைப் பெறச் செய்துள்ளான் ஓவியன்.

இராமன், இலக்குவன், பரதன், சத்ருக்கணன் ஆகிய நால்வர் இருக்குமிடத்தில் இராம இலக்குவன் இருவரும் நீல நிறத்திலும், பரதன், சத்ருகணன் சிவப்பு நிறத்திலும் காட்டப்படுகின்றனர். இராம-இலக்குவர் மட்டும் இருக்கும்போது இராமன் நீல நிறத்திலும் இலக்குவன் சிவப்பு நிறத்திலும் காட்டப்படுகின்றனர். இங்கு உருவத்தினைக் காட்டும் வண்ணத்தின் மூலமாக ஆட்களை அடையாளம் காட்டுவது மிகத்தெளிவாக உள்ளது. யானைகள், குதிரைகள் காவி நிறத்தில் வரையப்பட்டுள்ளன. பெண்களது ஆடைகள், குறிப்பாக சேலைகள் பல்வேறு வண்ணங்களில் தீட்டப் பெற்றுள்ளன.

## சிறப்பு அம்சங்கள்

விசயநகர-நாயக்கரது காலத்தில் வரையப்பட்ட ஓவியங்களில் இராமாயணம் பல கோயில்களில் இடம்பெற்றிருப்பினும் முழுமையான

கதை இடம்பெற்றிருப்பது ஒரு சில கோயில்களில் தான். எனவே, அழகர்கோயில் இராமாயண் ஓவியம் அந்த வகையில் சிறப்புப் பெற்றிருக்கின்றது.

இன்றளவும் பெரும்பான்மையாக அறிந்து கொள்ளக் கூடிய அளவிற்கு ஓவியம் அதிகம் சிதைவுறாது உள்ளது என்றாலும் சில பகுதிகள் முழுமையாக அழிந்துவிட்டன. (எஞ்சியுள்ள ஓவியங்களை யாவது தமிழக அரசு, மாநிலத் தொல்பொருள் ஆய்வுத்துறை அல்லது இந்து சமய அறநிலையத்துறையின் மூலம் பாதுகாக்கவில்லையெனில் நாயக்கரது சிறப்பு மிக்க முழுமையான இராமாயண ஓவியத்தை நாம் இழக்க வேண்டி வரும்).

இராமன் தன் தம்பியரோடு வசிட்டரிடம் கல்வி கற்கும் போது ஏட்டில் முதன்முதலில் 'ஸ்ரீஇராமஜெயம்' எனத் தன் பெயரைத்தானே எழுதுவது போல் வரையப்பட்டிருப்பதிலிருந்து ஸ்ரீஇராமஜெயம் எழுதும் வழக்கம் எந்த அளவிற்கு மக்களிடம் செல்வாக்கோடு பரவியிருந்தது என்பதை அறிய முடிகின்றது. மேலும், முதன்முதலில், கல்விக் கூடத்தில் சேரும்போது ஸ்ரீஇராமஜெயம் எழுதினர் என்ற வழக்கம் இங்கு வெளிப்படுகிறது.

இராமனும், இலக்குவனனும் காட்டிற்குச் செல்லும் போது ஆலம்பால் கொண்டுவரச் சொல்லி சடைதரித்துத் கொள்கின்றனர் என்ற செய்தி மூலம் அக்காலத்தில் சடைதரிப்பவர் ஆலம்பால் வைத்துச் சடைதரிப்பர் என்ற செய்தியை அறிய முடிகின்றது.

கானகம் என்பதனைக் குறிக்க மரம் குறியீடாகப் பயன்படுத் தப்படுகின்றது. அயோத்தி மற்றும் மிதிலை, முதலான நகரங்களைக் காட்டும்போது சிறு வீடுகள் திறந்த கதவுகளுடன் வரையப்பட்டுள்ளன.

ஒரு தொடர் காட்சி முடிவுற்றதும் வெள்ளை நிறத்தில் கோபுரம் இடம் பெறுகின்றது. மேலும், அடுத்த காட்சி தொடங்கும்போது. கோபுரத்துடன் தொடங்குகின்றது. ஓவியன் காட்சித் தொடக்கம், காட்சி முடிவு என்பதனை இவ்வாறு கோபுரத்தின் மூலம் காட்டியுள்ளான்.

திருமணத்தின் போது நலுங்குச் சடங்குகள் அதிக அளவில் தீட்டப் பெற்றுள்ளன. இன்று ஓவியத்தின் நலுங்குப்பகுதி அழிந்து விட்டிருப்பினும் மேலே இடம்பெற்றுள்ள எழுத்துக்களை வைத்து செய்தியினை அறியமுடிகிறது.

## ஆடை அணிகலன்

இந்த இராமாயண ஓவியத்தில் இறைவனைக்காட்டும்போது கால்வரை கீழாடை, இடுப்பில் துண்டு, தலையில் கிரீடம், பெரிய மாலை மற்றும் மேலாடையாகத் துண்டு ஆகியவை வரையப்பட்டுள்ளன.

அரசர்கள், அரசிகளைக் காட்டும் போது அரசர்கள் கால்வரை மடிப்புக்களுடன் கூடிய கீழாடையுடனும், இடையில் புட்டகோசி எனும்

துண்டுடனும், தலையில் தலைப்பாகையுடனும் இடம்பெறுகின்றன நாயக்கரது ஓவியத்தில் அரச குடும்பத்தினர் முதல், சாதார மனிதர்வரை இந்தத் தலைப்பாகை அணிந்திருப்பதால் அக்காலத்தி இந்த வழக்கம் பரவலாக இருந்து வந்துள்ளதை அறிய முடிகின்றது. இ மேல்நோக்கி நேராகச் செல்வது, பக்கவாட்டில் சாய்ந்திருப்பது எ இரண்டு வகைகளாக இருந்துள்ளன. இங்கு விசுவாமித்ரர், மற்று வசிஷ்டர் ஆகியோர் அணிந்துள்ள தலைப்பாகைகளில் அலங்கார பொருட்கள், குறிப்பாக முத்துக்கள் காணப்படுகின்றன.

அரசிகளைக் காட்டும்போது லெபாக்சி ஓவியத்தில் இட பெற்றிருப்பது போல் சேலையானது கால்வரை காட்டப்பெற்றுள்ள மேலாடையாக இரவிக்கை அணிந்துள்ளனர். சேலையிலும் இரவிக்கை யிலும் பல்வேறு அலங்காரங்கள் உள்ளன. இவை இன்றளவும் ப நெசவுக் கூடங்களில் புதிய அலங்காரங்களை உருவாக்க மாதிரியாக பயன்படுத்தப்படுகின்றன. அரசிகளின் தலையின் பின்பக்க கொண்டை இடம்பெறுகிறது. இக்கொண்டை தலையை ஒட் அமையாது சற்று இறங்கிய நிலையில் தளர்ந்தபடி அமைந்துள்ளத மேலும், இக்கொண்டைக்கு மேல் பூவைத்துள்ளனர். தாதியரைக்காட்டு பொழுது அவர்கள் நீண்ட சடையுடன் காட்டப்படுகின்றனர்.

இராம-இலக்குவர் கானகத்தில் காட்டப்படும் போது கால்சட்டையுடன் காணப்படுகின்றனர். அதே போல் குகனுடன் வந் அவனது பணியாளர்களைக் காட்டும் போதும் கால் சட்டையுடன் காட்டப்படுகின்றனர். எனவே, கால்சட்டை அணிதல் என்பது அக்காலத்தில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என அனைவரிடத்திலும் இருந்துள்ளதை அறிய முடிகிறது.

முனிவர்கள் சடைமுடியுடன் காட்டப்பட்டுள்ளனர். இதில் முடியானது தலையில் சடாமகுடம்போல் அமைக்கப்பட்டுள்ளது மேலும், பின் பக்கத்தில் தொங்கிக் கொண்டிருப்பதாக அமைந்துள்ளது.

கந்தர்வப் பெண்கள் மார்புச் சீலை அல்லது மாராப்பு இன்றி இரவிக்கையுடன் காட்டப்பட்டுள்ளனர். தசரதனிடம் தானம் பெறும் பல்வேறு சமூக நிலையுடைய மக்கள் பல்வேறு விதமான ஆடைகளுடன் திகழ்கின்றனர். இவர்கள் தலையில் குல்லா அணிந்துள்ளனர்.

ஆண்கள் காலில் "கழல்" எனும் அணிகலன் அணிந்துள்ளனர். காதுகளில் குண்டலம் இடம் பெறுவதோடு காதின் நடுவில் 'மோட்சகாமு'[18] எனப்படும் அணிகலன் அலங்கரிக்கின்றது.

பெண்கள் தலையின் நடுவில் உச்சி எடுத்து சீவி வகிடில் நெற்றிச் சுட்டி அணிந்துள்ளனர். மேலும், தலையின் பக்கவாட்டில் சுட்டி அணிந்துள்ளனர். காதுகளில் குண்டலம் மற்றும் மோட்சகாமு அணிந்ததோடு "மாட்டல்" எனும் கொலுசும் காணக் கிடைக்கின்றது. அரசியரின் உருவங்கள் அதிக அளவில் அணிகலன்களுடன்

காட்டப்பட்டுள்ளன. மேலும், இவ்வணிகலன்கள் முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டனவாக உள்ளன. பாண்டியநாடு என்றாலே முதலில் நினைவுக்கு வருவது முத்துதான். அதைக்குறிக்கவே இங்கு முத்துச் செல்வம் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

கழுத்தில் அணிகள் அதிக அளவில் பூட்டப் பெற்றிருப்பினும் கழுத்தை ஒட்டிய ஆரம், சற்று தளர்ந்த அளவில் இடம்பெறும் அணிகலன், நீண்ட ஒரு அணிகலன் என்று மூன்று வகையாகப் பயன் படுத்தப்பட்டுள்ளமை மிகவும் குறிப்பிடத்தக்கதும் அழகு வாய்ந்தவையுமாகும்.

## ஓவியத்தின் காலம்

பொதுவாக நாயக்கரது ஓவியங்களின் காலம் கி.பி. பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டுகள் ஆகும். பானர்ஜி என்பவர் அழகர் கோயில் இராமாயண ஓவியத்தின் காலம் கி.பி. 1700[19] எனக் கருதுகின்றார்.

## 2. ஆண்டாள்கோயில் ஓவியம்

ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயிலில் உள்ள யாளி மண்டபம் அல்லது கல்யாண மண்டபம் என்று அழைக்கப்படும் மண்டபத்தின் விதானத்தில் இராமாயண ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. இது சுவரில் வரையப்படாது உயரமான விதானத்தில் வரையப்பட்டுள்ளதால் இன்றுவரை இவ் ஓவியம் பற்றிப் பெரும்பாலோர் அறியவில்லை. இதில் இடம்பெற்றுள்ள எழுத்துக்கள்கூடத் தூரத்தில் உள்ளதால் உருப்பெருக்கிக் கண்ணாடியின் உதவி கொண்டே சரிவரப்படிக்க இயலுகின்றது.

இராமாயணக்கதை கருவறைப்பக்கம் தொடங்கி கோபுரத்தை நோக்கிச் செல்கிறது. சுமார் நாற்பது வரிசைகளில் இக்கதை தீட்டப் பெற்றுள்ளது. ஒவ்வொரு வரிசையிலும் சுமார் ஆறு காட்சிகள் வரை வரையப்பட்டுள்ளன. அழகர்கோயிலில் இடம்பெற்றுள்ளது போலவே ஓவியத்திற்கு மேலே விளக்கம் எழுதப்பட்டு அதன் கீழே அவ்விளக்கத்திற்கு தொடர்புடைய ஓவியம் தீட்டப்பட்டுள்ளது.

முதலிரண்டு வரிசைகள் முழுவதுமாக அழிந்துவிட்டன. மூன்றாவது வரிசையில் வசிட்டர், இராமன், இலக்குவன், பரதன், சத்ருக்கனன் ஆகியோருக்குப் பாடம் கற்றுக்கொடுக்கும் காட்சி இடம் பெற்றுள்ளது. எனவே, இராமனது பிறப்பிலிருந்தே கதை இருந்திருக்கும் என ஊகிக்க முடிகின்றது.

நாயக்கர் காலத்தில் தீட்டப்பட்ட இராமாயண ஓவியங்கள் ஒரே அமைப்பைப் பெரும்பாலும் பெற்று விளங்கும் என்றாலும் அழகர் கோயில் இராமாயணக் காட்சிகளிலிருந்து ஆண்டாள்கோயில் இராமாயணக் காட்சிகள் பெரிதும் மாறுபட்டுள்ளன. அழகர்கோயில்

ஓவியத்தில் விசுவாமித்திரர் வந்தபோது தசரதன் விசுவாமித்திரன வணங்கிச் சபைக்கு அழைத்துச் செல்வதாக அமைந்திருக்கின்றது மேலும், விசுவாமித்திரர் தசரதனிடம் இராம-இலக்குவரை உட அனுப்பவேண்ட தசரதன், அவனது தேவியர் மூவர், வசிட்டர் ஆகியோ இராம-இலக்குவரை உச்சி முகர்ந்து அனுப்பிய காட்சி காண கிடைக்காத ஒன்றாகும். அதே காட்சிகள் இங்கு சற்று மாறுபட் நிலையில் கோசலையிடம் விசுவாமித்திரர் இராம-இலக்குவரை உட அனுப்பி வைக்குமாறு கேட்கும் காட்சியும், அடுத்து இராம-இலக்குவ வில்லேந்தி நடந்து செல்வதும், மூன்றாம் காட்சியில் விசுவாமித்திரரி தொடை மீது படுத்திருப்பதுமான காட்சிகள் அமைக்கப்பட்டிருப்பதை காணலாம். எனவே, அழகர்கோயிலில் இடம் பெற்றது போல் காட்சிக தெளிவாகவும், விவரமாகவும் இங்கு இடம் பெறவில்லை எனலாட மற்றோரிடத்தில் சீதை மடியில் இராமன் தலைவைத்துப் படுத்திருக்கு போது காக்கை வடிவில் வந்த இந்திரன் மகன் செயந்தன் சீதையி மார்பகத்தைக் கொத்தவே இராமர் அம்பொன்றை வீச அது காக்கையி ஒரு கண்ணைக் குத்திவிடும் கதை இங்கு இடம் பெற்றுள்ளது. ஆனா இக்காட்சி அழகர் கோயிலில் காணப்பெறவில்லை.

இறுதியாகத் தசரதன் மாண்டது, குகனுடன் பரதன் ஓடத்தில் ஏற இராம-இலக்குவரைக் காணச்சென்றது, சூர்ப்பநகையை இலக்குவன் உறுப்புக்குறை செய்தது, முதலான காட்சிகளே மிஞ்சியவை. மீதமுள்ள ஓவியங்கள் அனைத்தும் அழிந்துவிட்டன.

அடுத்ததாக அரங்கமன்னார், ஆண்டாள், கருடாழ்வார் என கருவறையில் உள்ள உருவங்கள் தீட்டப்பட்டுள்ளன. அழகர் கோயிலிலும், விதானத்தில் கருவறையில் இடம்பெற்றுள்ள இறை யுருவத்தை வரைந்துள்ளனர். இதன் மூலம் நாயக்கர் காலத்து ஓவியங்களில் அந்தந்தக் கோயிலில் இடம்பெற்றுள்ள இறைவனின் திருவுருவம் வரையப்படும் மரபு பின்பற்றப்பட்டுள்ளது என்பதை அறிய முடிகிறது. மேலும், அழகர்கோயில் வசந்த மண்டபம் அமைப்பில் மற்றொரு சிறப்பினைப் பெற்றுள்ளதைக் காணலாம். இது மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. உட்பகுதி விண்ணுலகு போன்ற அமைப்பினைப் பெற்றுள்ளது. இங்குதான் விஷ்ணு இடம் பெற்றுள்ளார். அடுத்தது நீர்த்தேக்கப்பிரிவு. இது நடுநிலையாகவும், மூன்றாம் பகுதி பூமியாகவும் இங்குக் கையாளப்பட்டிருக்க வேண்டும்.

## வட்டாரப் பழக்கவழக்கங்களில் தாக்கம்

சீதா-இராமர் திருமணக்காட்சியில் ஆறுபேர் சேர்ந்து வில்லை எடுத்துவர அதைக்கண்ட ஐம்பத்தாறு தேசத்து அரசர்கள் மூர்ச்சையாக இராம-இலக்குவர் மட்டும் வில்லை முறிக்கின்றனர் எனக் காட்டப்படுகின்றது. பின்னர் "கல்யாண ஓலை" எழுதி அஞ்சல்காரன் மூலம் தசரதனுக்குச் செய்தி அனுப்பி அனைவரும் புறப்பட்டு மிதலைக்கு

வர நிச்சயதார்த்தம் நடைபெறுகிறது என நடைமுறையில் இருந்த ஓலை வைத்தல் என்ற பழக்கத்தையும் திருமண ஒப்பந்தம் செய்யும் பழக்கத்தையும் ஏற்றிக் கூறியிருக்கின்றான் ஓவியன்.

## வரைந்தவன், வரைவித்தவன்

கருவறை இறையுருவின் ஓவியத்திற்கு அடுத்ததாக ஒரு அடியவரது ஓவியம் இடம்பெற்றுள்ளது. இவ்வடியவர் இவ் ஓவியம் வரைவித்தவராக இருக்கலாம். இவ் ஓவியத்திற்குமேல், "ஓவியம் வரைய நான்கு பத்திகளுக்கு ஐந்து பொன்கூலி என எழுதப்பட்டிருப்பதையும், வரைந்தவன் பெயர் 'பொன் சுகாரணமகா புத்திரப்பிள்ளை என்றும் எழுதப்பட்டுள்ளதிலிருந்து எழுதியவன் யார் என்பதும் தெரிகிறது. மேலும், இதனை எழுத உபயம் செய்தவர் ஆழ்வார்திருநகரி வேலாயுதம் பிள்ளை குமாரன் வீரபத்திரப்பிள்ளை என்றும் எழுதப்பட்டுள்ளது. எனவே, நாயக்கரது ஆட்சிக்காலத்தில் மன்னர்கள் மட்டுமின்றி பொதுமக்களும் கோயில்களில் இராமாயண ஓவியம் வரைதல் முதலிய பணிகளில் பங்கெடுத்துக் கொண்டுள்ளனர் என்பதை இதன் மூலம் அறியமுடிகின்றது.

## காலம்

இவ் ஓவியம் வரைவித்தவர் அரசனாக இன்றி தனிப்பட்ட ஒருவர் வரைவித்தது ஆகும். எனவே, இது கி.பி. 17, 18ஆம் நூற்றாண்டுகளில் நாயக்கரது ஆட்சியின் போது அவர்களிடம் பணியாற்றிய ஒருவர் வரைவித்ததாகக் கருதலாம்.

## வண்ணம்

இவ் ஓவியத்தொகுதியில் பச்சை, வெள்ளை, பழுப்பு, கருப்பு, மஞ்சள், நீலம் ஆகிய வண்ணங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஆறுகள், குளங்கள் ஆகியன அழகர்கோயிலில் உள்ளது போல் வெண்மை நிறத்திலும், மீன்கள் கறுப்புக் கோடுகளாலும் வரையப்பட்டுள்ளன.

படகுகள் பழுப்பு நிறத்திலும், அதில் கருப்புக் கோடுகளால் கட்டம் போடப்பட்டு அவை கூடைகள் போல் வரையப்பட்டுள்ளன. உருவங்களுக்குப் பெரும்பாலும் செம்பழுப்பு வண்ணமும், கூந்தலுக்குக் கறுப்பும், தாடிக்கு அடர்பழுப்பு வண்ணமும் கொடுக்கப்பட்டுள்ளன. யானைகளுக்குக் கறுப்பு வண்ணம் கொடுப்பதற்குப் பதிலாக பழுப்புக் கலந்த மஞ்சள் வண்ணமும், யானைகளின் நெற்றியில் உள்ள முகபடாமிற்கு மஞ்சள் வண்ணமும் தீட்டப்பட்டுள்ளன. யானைகளில் சில பொன், பச்சை மற்றும் பழுப்பு வண்ணங்களிலும் தீட்டப்பட்டுள்ளன. இராம-இலக்குவர் இருவரும் சில இடங்களில் பச்சை நிறத்திலும், வேறு சில இடங்களில் இராமன் மட்டும் பச்சை

நிறத்திலும் இலக்குவன் மனித உடல் நிறத்திலும் காட்டப்பட்டுகின்றனர். முனிவர்களில் விசுவாமித்திரர் மட்டும் பச்சை நிறத்தில் காட்டப்படுகிறார். பிறர் மனித உடலின் நிறத்திலேயே இடம்பெறுகின்றனர். பெரும்பாலும் அழகர்கோயில் போன்றே இங்கும் வண்ணம் தீட்டப்பட்டிருப்பதைக் காணலாம்.

## ஆடை அணிகலன்

இங்கு இடம்பெற்றுள்ள ஓவியங்களில் அரச உருவங்கள் கணுக்கால் வரை கீழாடையுடன் இடம்பெற்றுள்ளன. இவை மடிப்புக்களுடனும், பல்வேறு அலங்காரங்களுடனும் காணப்படுகின்றன. இவர்களுக்கு மேலாடையும் அணியப்பெற்றுள்ளது. இடுப்பில் புட்டகோசி எனும் துண்டு அணிந்துள்ளனர். இத்துண்டு சரிகையுடன் காணப்படுகிறது. தலையில் கிரீடம் அணிந்துள்ளனர்.

அரசி உருவங்கள் பல்வேறு விதமான அலங்காரங்களுடன் கூடிய சேலைகளில் மிளிர்கின்றன. மேலாடையாக இரவிக்கை இடம் பெறுகின்றது. மேலும், பெரிய மாலை மற்றும் நீளமான துண்டுடன் இவர்கள் காட்டப்படுகின்றனர். இந்தச்சீலைகள் கட்டங்கள், புள்ளிகள், கோடுகள், முகப்பு முதலியவற்றுடன் விளங்குகின்றன.

இராம-இலக்குவர் காட்டில் இருக்கும் காட்சியில் மேலாடை, இன்றிக் கால்சட்டையுடன் மட்டும் காட்டப்படுகின்றனர்.

அரண்மனைப் பணியாளர்கள் கால்சட்டை அணிந்துள்ளனர். மேலும், யானைப்பாகன், குதிரையோட்டி, பல்லக்குத்தூக்கிகள் ஆகியோரது இடுப்பில் உள்ள உதரத்துண்டுகள் கணுக்கால் வரை தொங்குகின்றன. இதிலிருந்து அக்காலத்தில் பணியாளர்கள், கால்சட்டை மற்றும் உதரத்துண்டு மட்டும் அணிந்தனர் என்பதை அறிய முடிகிறது. இங்கு, காட்டில் அரச வாழ்வைத் துறந்தவர் சாதாரண உடையே உடுத்த முடியும் என்பதைக் காட்ட இராம-இலக்குவர்களும் பணியாளர் உடுத்தும் உடையையே அணிந்துள்ளமையும் நோக்கத் தக்கதாகும். இதில், அழகர்கோயில் ஓவியத்தினின்றும் சிறிது வேறுபட்டுப் பணியாளர்கள் துண்டும் கட்டியுள்ளதைக் காணமுடிகிறது.

அரண்மனையில் பணிபுரியும் உயர்பதவி வகிப்போர் மேலாடையும் அணிந்துள்ளனர்.

பணியாளர்களது தலையில் துண்டு இடம்பெறவில்லை. ஆனால், யானைப்பாகன், பல்லக்குத் தூக்கிகள் முறையே தலைப்பாகை, முகலாயக் குல்லா முதலியவற்றை அணிந்துள்ளனர்.

இராம-இலக்குவர் பக்கவாட்டுக் கொண்டையிட்டு உள்ளனர். அக்கொண்டையிலிருந்து சிறு குஞ்சம் தொங்குகிறது. இது நாயக்க மன்னர்களின் பக்கவாட்டுக் கொண்டையினை நினைவூட்டுவதாக உள்ளது. பெண்கள் சடையுடன் காணப்படுகின்றனர். இச்சடை முழுவதையும் வட்டமான அணிகலன் அலங்கரிக்கின்றது.

அரசிகள் சற்று தளர்ந்த நிலையிலான கொண்டையும் தலைக்குப்பின்னால் தூக்கிக்கட்டிய கொண்டையும் கொண்டுள்ளனர். இக்கொண்டையில் பூவும், முத்துக்களால் அணிசெய்யப்பட்ட மாலையும் சுற்றப்பட்டுள்ளது.

பெண்கள் மூக்கில் வளையமும், காதுகளில் குண்டலமும் அணிந்துள்ளனர். ஆண்கள் காதுகளில் குண்டலமும், கால்களில் கழலும் அணிந்துள்ளனர். இவ்வாறாக ஆடைகளும், அணிகலன்களும் அக்காலத்துச் சமுதாயப் பழக்க வழக்கங்களை அறியப் பெரிதும் பயன்படுகின்றன.

## 3. கூடலழகர் கோயில் ஓவியம்

கூடலழகர் கோயிலின் இரண்டு மற்றும் மூன்றாம் கருவறைகளில் ஓவியம் இடம்பெற்றுள்ளது. கீழ்த்தளத்தில் ஓவியம் இல்லை. இக் கோயிலில் நாயக்கர் காலத்து ஓவியங்கள் இடம்பெற்றிருப்பினும் அவை பின்னர் புதுப்பிக்கப்பட்டுள்ளன (Re-touch). அழகர்கோயில் மற்றும் ஆண்டாள் கோயில்களில் இடம்பெற்றிருப்பது போல் இராமாயண ஓவியம் இங்கு தீட்டப்பெறவில்லை. மாறாக மூலவர் உருவம், திக்கு பாலகர்கள், பிரம்மன், மற்றும் சிவன் ஆகியோரது ஓவியங்கள் வரையப் பெற்றுள்ளன. இக்கோயிலில் முதல்தளக் கருவறையைச் சுற்றி வெளிப்பகுதியில் அந்தந்தப் பக்கங்களுக்குரிய திசைக்காவலர்களது சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. அதுபோலவே மேலிருதளங்களிலும் அமைந்துள்ள ஓவியத்தில் திக்குபாலகரது ஓவியம் காட்டப்பெற்றுள்ளது. இங்கு காத்தல் தொழிலைச் செய்யும் திருமாலுக்கருகில் திசைக்காவலர்களான திக்குபாலகரின் உருவங்கள் அமைத்திருப்பது பொருத்தமாக அமைகின்றது.

## இரண்டாம் தள ஓவியம்

இரண்டாம் தளக் கருவறையினுள் நான்கு பக்கங்களிலும் ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. இச்சுவர்கள் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு கீழ் நிலையில் மும்மூர்த்திகளது உருவங்களும், மேல் நிலையில் திக்குபாலகர்களின் உருவங்களும் வரையப்பட்டுள்ளன. சிவன் மற்றும் பிரம்மன் ஆகிய இருவரது ஓவியங்களும் திருமாலுக்கு இருபுறமும் நின்று வணங்குவது போல் இடம்பெற்றிருப்பது மும்மூர்த்திகளில் திருமாலே முழுமுதற்கடவுள் எனும் வைணவக் கருத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். திக்குபாலகரின் உருவங்கள் அவரவர் வாகனங்களுடன் இடம் பெற்றுள்ளமை, இவர்களை யார்? யார்? என அடையாளம் கண்டு கொள்ள ஏதுவாக அமைகின்றது.

திருமால் தன் தேவியருடன் அமர்ந்த கோலத்தில் சிற்பத்தில் வடிக்கப் பெற்றிருப்பது போலவே ஓவியத்திலும் இடம் பெற்றுள்ளார். சாமரதாரிகள் இருவர் சாமரம் வீசுகின்றனர். சிவனும், பிரம்மனும்

திருமாலுக்கு இருபக்கங்களில் காட்டப்பெற்றுள்ளனர். திருமாலுக்
உள்ளது போல் சாமரதாரிகள் சிவனுக்கும், பிரம்மனுக்கும் வைக்க
பெறவில்லை. இதுவும் திருமால்தான் முழுமுதற் கடவுள் என்ற வைணவ
கருத்துக்குத் துணை நிற்பதாக அமைகிறது. திக்குபாலர்களி
உருவங்களில் அக்னி மூன்று தலைகளுடன் காட்டப்பட்டுள்ளா
(பார்க்க நி.ப.எண். 19) பொதுவாக அக்னிக்கு இரண்டு தலைகள் இட
பெறும். அதே சமயத்தில் மூன்று தலைகளும் வைக்கப் பெறலாம்.
அடுத்ததாக, இந்திரனது உடம்பில் கண்கள் பல உள்ளது போ
வரையப்பட்டுள்ளது. இது கீழ்க்காணும் இந்திரன் பெற்ற சாப
கதையைக் குறிப்பதாக அமைகின்றது. கௌதம முனிவரி
மனைவியான அகலிகையைக் கூடவிரும்பினான் இந்திரன். எனவே
அதிகாலைப் பொழுதில் கௌதம முனிவர் குளிக்கச் சென்ற நேர
பார்த்து இந்திரன் கௌதமரது உருவத்தில் வந்து அவரது மனைவியை
கூடினான். அச்சமயம் திரும்பி வந்த கௌதம முனிவர் இந்திர
உடம்பில் ஆயிரம் கண்கள் உண்டாகுமாறு சபித்தார். இதனா
இந்திரனது உடம்பில் ஆயிரம் கண்கள் உண்டானது. இக்கதையி
அடிப்படையில் இந்திரனது ஓவியம் வரையப்பட்டுள்ளது.

தெற்குச் சுவரில் சக்கரமும் பெரிய திருவடியான கருடாழ்வாரு
அதற்கு நேர் எதிராக வடக்குச்சுவரில் சங்கும், சிறிய திருவடியான
ஆஞ்சநேயரும் காட்டப்பெற்றுள்ளது பொருத்தமாக உள்ளது.

கிழக்குச் சுவரில் வைணவ அடியவர் இருவர் வாசலின்
இருமருங்கிலும் வணங்கவரும் பக்தர்களை வா என அழைப்பது போ
இடம் பெற்றுள்ளனர். இவர்கள் வைணவ அடியார்கள் என்பதால் உட
நெற்றி, கைகள், முதலிய இடங்களில் திருமண் இட்ட நிலையி
காட்டப்பட்டுள்ளனர். இவைதவிர வேணுகோபாலன் குழலூதி
நிலையில் வரையப்பட்டுள்ளான்.

## மூன்றாம் தள ஓவியம்

மூன்றாம் தளக் கருவறைச் சுவர்கள் இரண்டு பிரிவுகளாக
பிரிக்கப்பட்டு மேற்பிரிவு மேலும் இரண்டு பிரிவுகளாக
பிரிக்கப்பட்டுள்ளது. இதில், கீழ்ப்பகுதியில் இருந்த ஓவியங்கள் சமீ
காலத்தில் அழிக்கப்பட்டு அந்த இடத்தில் திருமாலின் பத்து
அவதாரங்கள் புடைப்புச் சிற்பங்களாக அமைக்கப்பட்டுள்ளன
இப்பகுதியில் ஓவியங்கள் இருந்தன என்பதனை அழிக்கப்பட்ட
ஓவியங்கள் தவிர ஆங்காங்கே எஞ்சித் தெரியும் வைணவ அடியார்கள்
மற்றும் அனுமன் ஆகிய ஓவியங்களை வைத்து அறிய இயலுகின்றது.

மேல் அமைப்பில் முதல்வரிசையில் கின்னரி மற்றும் கின்னர
உருவங்கள் இசைக்கருவிகளுடன் வரையப்பட்டுள்ளன. இவற்றி
கின்னரிகளது உடலின் மேற்பகுதி மனித உருவிலும், கீழ்ப்பகுதி பறவை
உருவிலும் காணப்படுகின்றன. கின்னரர் ஓவியம் மட்டும் மனித

உருவிலேயே வரையப்பட்டுள்ளது. மேலும், இதே வரிசையில் திருமாலின் பஞ்சாயுதங்களான பாஞ்சசன்யம் எனும் சங்கு, நந்தகி எனும் கத்தி, சுதர்ஸனம் எனும் சக்கரம், சாரங்கம் எனும் வில், கௌமோதகி எனும் கதை ஆகியன் வரையப்பட்டுள்ளன. உத்தரமேரூர் சுந்தரவர்தப் பெருமாள் கோயிலின் மூன்றாம் தளக் கருவறையில் இப்பஞ்சாயுதங்களும் உருவகப்படுத்தப்பட்டு ஆயுத புருஷர்களாக இடம் பெற்றுள்ளமை [21] ஒப்பு நோக்கத்தக்கது.

மேல் வரிசையில் இடம்பெறும் அஷ்டதிக்குபாலகர் இரண்டாம் தளக் கருவறையில் இடம்பெற்றுள்ளதைப் போல் அமைக்கப் பட்டிருக்கின்றனர். இவர்களுக்கு இடையே கின்னரர் வரையப் பட்டுள்ளனர். தஞ்சைப் பெரியகோயில் கருவறையின் மேல்தளத்தில் வெளிச்சுவரின் மேற்கில் இடம்பெற்றுள்ள அஷ்ட திக்குபாலகர் ஓவியங்கள்[22] இங்கு ஒப்புநோக்கத்தக்கன. மேலும், வைணவக் கோயில்களிலும், சிவாலயங்களிலும் திக்குபாலகரின் உருவங்கள் இடம்பெறும் என்பதற்கு மேற்கண்டவை சான்று பகர்வனவாக அமைகின்றன.

## வண்ணம்

இறையுருவங்களில் திருமால் கருநீல நிறத்திலும், பிரம்மன் மஞ்சள் நிறத்திலும், சிவன் வெள்ளை நிறத்திலும், பூதேவி பச்சை நிறத்திலும், முனிவர்கள், அடியவர்கள் ஆகியோரது தாடி, சடை முதலியன கறுப்பு நிறத்திலும் தீட்டப்பட்டுள்ளமை புராணக்கதைகளில் சொல்லப்படும் நிறங்களொடும் இயற்கையோடும் இயைந்துள்ளமையைக் காணலாம். ஓவியத்தின் ஒட்டுமொத்தமான பின்னணியாக சிவப்பு வண்ணம் கொடுக்கப்பட்டுள்ளது.

திக்குபாலகர் ஒரு நிறத்திலும், அவர்களது வாகனங்கள் வேறு நிறத்திலும் வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளன. மேகங்கள் நீலம் கலந்த வெள்ளை நிறத்தல் காட்டப்பட்டுள்ளன. பலாமரம் பச்சை நிறத்திலும் கனிகள் மஞ்சள் நிறத்திலும் அதில் முட்கள் கறுப்பு நிறத்திலும் வரையப்பட்டுள்ளன.

இரண்டு மற்றும் மூன்றாம் தளங்களில் இடம்பெறும் திக்குபாலகர் களுக்கும், அவர்களது வாகனங்களுக்கும் ஒரே மாதிரியான நிறங்கள் பயன்படுத்தப்படவில்லை. எனினும், இந்திரனது யானைக்கு வெள்ளை நிறம் என்று புராணங்களில் கூறப்பட்டிருப்பதால் இரு இடங்களிலும் வெள்ளை நிறத்திலேயே வரையப்பட்டுள்ளது. எமதர்மரின் வாகனமான எருமை கறுப்பு நிறத்தில் வரையப்படுவதற்குப் பதிலாக வெள்ளை நிறத்தில் வரையப்பட்டுள்ளது. இதற்குக் காரணம் பூமியில் இருக்கும் யானைகள் கறுப்பாக இருப்பது போலல்லாது இந்திரனது யானை வெள்ளையாகக் காட்டப்பட்டிருப்பதால் அதற்கு ஏற்றாற்போல் அங்குள்ள எருமையும் வெள்ளையாகவே இருக்க வேண்டும் என்ற

எண்ணத்தில் கற்பனையாக அமைக்கப்பட்டிருக்க வேண்டும். வெள்ளை யானை என்று சிறப்பின் அடிப்படையில் சொல்லப்படுவதுபோல் அதற்கிணையாக வெள்ளையெருமையும் சுட்டப்பட்டிருக்கலாம். இந்தியாவைப் பொருத்தவரை இவையிரண்டுமே கற்பனைதான்.

## ஆடை அணிகலன்

இக்கோயிலில் காணக்கிடைக்கும் ஓவியத்தில் இராமாயணம் பாகவதம் மற்றும் சமயச்சார்பற்ற ஓவியங்கள் இடம்பெறவில்லை. இத்தகு ஓவியங்கள் இடம்பெற்றிருப்பின் அக்கால மக்களின் ஆடை அணிகலன்கள் பற்றி ஓரளவிற்கு அறியலாம். ஆனால், இங்கு வைணவ சமயம் தொடர்பான ஓவியங்கள் இடம் பெற்றிருப்பதால் இவ்வோவியம் அக்கால மக்களின் ஆடை அணிகலன்கள் பற்றி அறிந்து கொள்ள ஓரளவிற்குத் துணைபுரிகிறது. உதாரணமாக முனிவர்கள், தேவர்கள், திக்குபாலகர்கள் மற்றும் இறையுருவங்கள் முதலிய எல்லா உருவங்களுக்கும் கணுக்கால் வரை கீழாடை காட்டப்பெற்றுள்ளது. எனவே, இதில் இடம்பெற்றுள்ள உருவங்களின் உடைமையாளர்கள் மேன்மை தங்கியவர்களாதலின் அவர்தம் கணுக்கால் வரை கீழாடை காட்டப்பட்டுள்ளது. இதன்மூலம் அக்காலத்தில் உயர்ந்தவர்கள் கணுக்கால் வரை கீழாடை கட்டியிருந்தது புலனாகிறது. இத்தகு ஆடை அமைப்பு அழகர்கோயில் ஓவியத்தொகுதியிலும் உள்ளது. மேலும், இவர்கள் மேலாடை இன்றிக் காட்டப்பட்டுள்ளனர். தேவியர் உருவங்கள் இரவிக்கையுடன் வரையப்பட்டிருப்பதிலிருந்து உயர்ந்த குடிப்பெண்கள் இரவிக்கை அணிந்ததையும் அறியமுடிகிறது. ஆண்கள் காதில் கடுக்கணும், பெண்கள் மூக்கில் வளையமும் அணிந்தனர் என்பதும் இவ்ஓவியம் வாயிலாக அறியலாம்.

## 4. இராசகோபாலசுவாமி கோயில் ஓவியம்

இராசகோபாலசுவாமி கோயில் அஷ்டாங்க விமானக் கோயில் என்பதால் இங்கும் ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால், இங்கு மூன்று கருவறைகளிலும் ஓவியங்கள் தீட்டப்பெறவில்லை. மாறாக, இரண்டு மற்றும் மூன்றாம் தளங்களில் உள்ள அர்த்த மண்டபங்களில் மட்டும் நாயக்கர் கால ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன.

## இரண்டாம் தள ஓவியம்

இரண்டாம் தளத்தின் நுழைவாயிலில் இருபுறமும் அனுமன் மற்றும் கருடாழ்வாரது ஓவியம் உள்ளது. தெற்கேயும், வடக்கேயும் சுவர்கள் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு தெற்கில் வேணுகோபாலனது ஓவியமும் பாலகிருஷ்ணன்-யசோதா ஓவியமும் வரையப் பெற்றுள்ளன. வடக்கே வஸ்திர அபகரணக் கண்ணனும், கோபியரும் வரையப்பட்டுள்ளனர். கோபியர் ஆடையின்றி தங்களது பிறப்புறுப்பினை கைகளால் மூடியபடி கண்ணனிடம் துணிகளைக் கொடுக்கும்படி கெஞ்சுவதாக உள்ளது.

இதனை அடுத்து இராமனது பட்டாபிஷேகக் காட்சி இடம்பெற்றுள்ளது. இதில் இராமர் சீதை அமர்ந்திருக்க, இலக்குவன் அஞ்சலியில் நிற்கிறார். பரதன் வெண்கொற்றக் குடையைப் பிடித்து நிற்க, சத்ருக்கணன் சாமரம் வீசுகிறான். சுக்ரீவன் மற்றும் அங்கதன், முனிவர்கள் ஆகியோரும் அங்கே உள்ளனர். இதற்குக்கீழ் திருமாலின் அவதாரங்கள் வரிசையாக வரையப்பட்டுள்ளன. இவற்றில் மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமணன், இராமன், கிருஷ்ணன், கல்கி ஆகிய அவதாரங்கள் மட்டுமே அடையாளம் காணமுடிகிறது. பரசுராமன் மற்றும் பலராமன் போன்ற உருவங்கள் அழிந்துவிட்டன. திருவெள்ளறை புண்டரிகாட்சர் கோயிலில் சித்திர மண்டபத்தின் மேல் விதானத்தில் இடம் பெற்றுள்ள திருமாலின் அவதார ஓவியங்கள் இதனுடன் ஒப்பு நோக்கத்தக்கன.

இவைதவிர இவ் அர்த்தமண்டபத்தின் விதானத்தில் உள்ள மரச்சட்டங்களில் ஓவியங்களும் அழகுவேலைப்பாடுகளும் காணப் பெறுகின்றன. இவற்றில் பெரும்பகுதி சிதைந்து விட்டது. இருப்பினும் பூ மற்றும் கொடி வேலைப்பாடுகள், அன்னப்பறவை, வடிவவியல் உருவங்கள் ஆகியன காணப்படுகின்றன. இவைதவிர பாகவத புராணக்காட்சிகள் சில இடம் பெற்றுள்ளன.

நாயக்க மன்னரது காலத்து ஓவியங்களில் இராமாயணமும், பாகவதபுராணக் காட்சிகளும் தான் அதிக அளவில் இடம் பெற்றுள்ளன[24]. மேலும், அக்காலத்தில் தெலுங்கில் போதனா என்பவரால் (கி.பி. 1450–1510) எழுதப்பட்ட பாகவதத்தின் தாக்கம், நாயக்கர் காலத்து ஓவியங்களில் மிகுதியாக இருந்தது[25]. இராசகோபாலசுவாமி கோயில் ஓவியத்தில் அத்தகு தாக்கம் இருந்ததா என அறிவதற்குப் போதுமான அளவில் ஓவியங்கள் இல்லை. பெரும்பகுதி அழிந்துவிட்டன. அழிந்தவைபோக எஞ்சியவை கண்ணன் வெண்ணெய் திருடும் காட்சி, குழலூதும் கண்ணன், வெண்ணெய்க்கு ஆடும் கண்ணன், கொக்குவடிவ அசுரவதம், குவளையாபீடம் எனும் யானை வடிவ அசுரவதம், வஸ்திர அபகர்ணக் கண்ணன் முதலியனவாகும். இவை சிறு அளவில் 1 × 3⁄4 அடி அளவில் வரையப்பட்டுள்ளன. கிடைத்துள்ள ஓவியங்களின் அடிப்படையில் நோக்கும் போது ஓரிடத்தில் பாகவத புராணக்கதையும் அதற்கடுத்து இராமாயணக்கதையும் இடம்பெற்றிருப்பதால் இங்கு எந்தவிதமான ஒருங்கிணைந்த மரபும் பின்பற்றப்படவில்லை என்பது தெளிவாகிறது.

## மூன்றாம் தள ஓவியம்

மூன்றாம் தள அர்த்தமண்டபத்தின் சுவரில் ஓவியங்கள் இருந்ததற்கான தடயங்கள் மட்டுமே ஆங்காங்கே காணப்படுகின்றன. அதேபோல் விதானத்திலும் ஓவியங்கள் அடையாளம் காண இயலாத அள்வுக்குச் சிதைந்து காணப்படுகின்றன.

**வண்ணம்**

வண்ணம் பொதுவாக நீலம், சிவப்பு, வெள்ளை, பச்சை ஆகியவை பயன்படுத்தப்பட்டுள்ளன. கண்ணன் மற்றும் திருமாலுக்கு நீல வண்ணமும், வேணுகோபாலனுக்கு வெள்ளை வண்ணமும் இராமனுக்குப் பச்சை வண்ணமும் பயன்படுத்தப்பட்டுள்ளன. தேவி சிவப்பிலும், பூதேவி வெள்ளை நிறத்திலும் வரையப்பட்டுள்ளனர். ஆனால், இதற்குமாறாக கூடலழகர் கோயிலில் பூதேவி பச்சை வண்ணத்தில் காட்டப்பட்டுள்ளார். சீதை, பூதேவியின் அவதாரம் என்பதால் சீதைக்கும் பூதேவிக்கும் ஒரே வண்ணம் இடப்பட்டுள்ளது. இலக்குவன், பரதன், முனிவர்கள் முதலானோர் வெள்ளை நிறத்திலேயே வரையப் பெற்றுள்ளனர். வஸ்திர அபகர்ணக் கண்ணன் பச்சை நிறத்தில் காட்டப்படுகிறார். இங்கு வண்ணம் ஏதேனும் ஒரு வரைமுறைப்படி பயன்படுத்தப்படவில்லை என்பதை வேணுகோபாலன் வெள்ளை நிறத்தில் காட்டப்பட்டுள்ளதிலிருந்து அறியலாம். மேலும், அவதாரங்களில் மச்சம், கூர்மம், நரசிம்மம், கிருஷ்ணன், முதலிய அவதாரங்கள் வெள்ளை நிறத்திலும், வராகம் சாம்பல் நிறத்திலும் இடம் பெற்றுள்ளமை மேற்சொன்ன கருத்தைத் தெளிவாக்குகின்றன.

## ஆடை அணிகலன்

கருடன் மற்றும் அனுமனுக்குக் கீழாடையாகக் கால்சட்டை அணியப் பெற்றிருக்கிறது. இது 'சல்லதாமு' எனப்படும்.[26] இத்தகு சல்லதாமு எனும் ஆடை இளவரசர்களும், வசதியானவர்களும் அணிவதோடு யானைப்பாகன், நடனக் கலைஞர்கள், இசைக்கலைஞர்கள், தேரோட்டு வோர் முதலானோர் தொழில் செய்வதற்கு ஏதுவாக அணிந்தனர்.[27] இங்கு கருடன் மற்றும் அனுமன் முறையே திருமால் மற்றும் இராமனது சேவகர்கள் என்பதால் இத்தகு ஆடை புனையப்பட்டது. ஏனெனில், அக்கால மரபுப்படி சேவகர்கள் குறைந்த ஆடையே அணிந்திருந்தனர் என்பது வெளிப்படையாகத் தெரிந்த ஒன்றாகும். இராமன், இலக்குவன், பரதன், திருமாலது அவதாரங்கள் ஆகியவற்றில் கீழாடை கால்பாதம்வரை இடம்பெற்றுள்ளது. சீதை ஓவியம் இரவிக்கையுடன் காட்டப்பெற்றுள்ளது.

**காலம்**

இங்கு இடம்பெற்றுள்ள ஓவியங்களின் அமைப்பை வைத்து அவை கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தனவாகக் கருதலாம்.

## 5. உரகமெல்லணையான் கோயில் ஓவியம்

திருக்கோட்டியூர் உரகமெல்லணையான் கோயில் அஷ்டாங்க விமானக் கோயிலாகும். எனவே, இவ்விமானத்தின் இரண்டு மற்றும் மூன்றாம் தளங்களின் கருவறையில் ஓவியங்கள் தீட்டப்பெற்றுள்ளன.

இவற்றில் இராமாயணமோ, கிருஷ்ண லீலைகளோ இடம் பெறவில்லை. மாறாக, அஷ்டாங்க விமானக் கோயில்களில் திருமாலின் நின்ற, இருந்த, கிடந்த எனும் நிலைகளுக்கேற்ப ஓவியங்கள் வரையப்பெற்றுள்ளன. திருமாலைப் போற்றுகின்ற தெய்வங்கள் எவை? எவை? காட்டப்பட வேண்டும் என ஆகமங்களில் குறிப்பிட்டபடி ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன.

## இரண்டாம் தள ஓவியம்

இக்கருவறையின் நான்கு பக்கச் சுவர்களிலும் ஓவியங்கள் இடம் பெற்றுள்ளன. இவ்ஓவியத்தில் கிழக்கே ஒருவர் பீடத்தில் அமர்ந்த நிலையிலும், மற்றொருவர் நின்ற நிலையிலும் தீட்டப்பட்டுள்ளனர். இவ்விருவருக்கும் நான்கு கரங்கள் உள்ளன. அமர்ந்திருப்பவரின் பின் இரு கரங்களில் சங்கு, சக்கரம் இடம்பெற்றுள்ளது. நின்றிருப்பவரின் பின்னிரு கரங்களில் சாமரங்கள் இடம்பெற்றுள்ளன. இருவரும் அஞ்சலியில் உள்ளனர். இவர்கள் கருவறையில் உள்ள இறைவனைப் பார்த்து வணங்கிய நிலையில் உள்ளனர். அமர்ந்திருப்பவரைச் சுற்றித் திருவாச்சி காட்டப்பெற்றுள்ளது. தாடியுடன் காணப்படும் இருவரும் அருகில் நிற்பவரும் யார்? யார்? என அடையாளம் கூற இயலவில்லை. அமர்ந்த நிலையில் உள்ள உருவம் விசுவக்சேனராக இருக்க வாய்ப்புள்ளது. இது சைவ சமயத்தில் காட்டப்படும் அதிகார நந்தியைப் போன்று காட்டப்பட்டுள்ளது. இதனை அடுத்துப் பொய்கை ஒன்று அழகாகத் தீட்டப்பட்டுள்ளது. இதன் நாற்புறமும் படிகளும், நீர் நிறைந்த பொய்கையில் தாமரை இலைகளும், பூக்களும் இடம்பெற்றுள்ளன. இதைப்பார்க்கின்ற போது இப்பொய்கை இக்கோயிலின் முன் இடம்பெற்றுள்ள பொய்கையாக இருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது.

இதனை அடுத்து முனிவர்களும், தேவர்களும் இறைவனைப் பார்த்து வணங்கிய நிலையில் உள்ளனர். சிவனும் இந்திரனும் அருகில் உள்ளனர். இவற்றைப்பார்க்கின்ற போது இக்கோயில் தல புராணத்தினைக்[31] கூறுவதாக இவ் ஓவியங்கள் அமைந்துள்ளதாகத் தோன்றுகிறது.

மேற்குச்சுவரில், கருவறையில் உள்ள இறைவனது உருவம் வரையப்பட்டுள்ளது. இதில் விஷ்ணு, ஸ்ரீதேவி, பூதேவியருடன் நின்ற நிலையில் இடம்பெற்றுள்ளார். இவ்வோவியத்தில் கருடன் அஞ்சலியில் சிறு உருவமாக இறக்கைகளுடன் காட்டப்பட்டுள்ளார். ஸ்ரீதேவி மற்றும் பூதேவியருக்கருகே முறையே இலக்குமி மற்றும் ஆண்டாள் ஆகியோரது ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன. இலக்குமியின் ஓவியம் அமர்ந்த கோலத்தில் நான்கு கரங்களுடன் தீட்டப்பட்டுள்ளது. ஆண்டாள் ஓவியம் நின்ற கோலத்தில் இரண்டு கரங்களுடன் தீட்டப்பட்டுள்ளது. இங்கு விண்ணுலகைப் பிரதிபலிக்கும் இலக்குமிக்கும் மண்ணுலகைப் பிரதிபலிக்கும் ஆண்டாளுக்கும் வித்தியாசம் கரங்களின் எண்ணிக்கையில் காட்டப்பட்டுள்ளது.

வடக்குச் சுவரில் திக்குபாலகர்கள் வரிசையாக நின்ற நிலையில் இடம்பெறுகின்றனர். இவர்கள் அனைவருமே பக்கவாட்டுப் பார்வையில் மேற்குச்சுவரில் உள்ள விஷ்ணுவை நோக்கி வணங்கிய நிலையில் காட்டப்பட்டுள்ளனர். நான்கு கரங்களுடன் காணப்படும் இவர்களின் பின்னிரு கைகளில் அவரவருக்குரிய ஆயுதங்கள் இடம்பெற்றுள்ளன. (பார்க்க நி.ப.எண் 20) கூடலழகர் கோயிலில் உள்ள ஓவியத்தில் அக்னி மூன்று தலைகளுடன் காட்டப்பட்டிருந்தார். இங்கு இரண்டு தலைகளுடன் காட்டப்பட்டுள்ளார். அக்னியின் மூன்று தலைகளும் மூன்று உலகங்களைக் குறிப்பதாகும். நாயக்கர் கால ஓவியங்களில் அக்னி இரண்டு மற்றும் மூன்று தலைககளுடன் காட்டப்பட்டுள்ளார் என்பதை மேற்கண்ட சான்றுகள் மூலம் அறிய முடிகின்றது. அக்னியின் உருவ அமைதியைப் பற்றிக்கூறும் சாத்திரங்கள் இவ்விருவகைகளையும் ஏற்கின்றன.

அக்னிக்கு அடுத்ததாக கிழக்கே பிரம்மன் இடம்பெற்றுள்ளான். நான்கு தலைகளுடன் நின்ற கோலத்தில் இடம்பெறும் இவருக்கு அருகே அஞ்சலியில் ஒருவர் காட்டப்பட்டுள்ளார். அஞ்சலியில் உள்ளவரது பின்னிருகரங்களில் சாமரம் இடம்பெற்றுள்ளது.

## மூன்றாம் தள ஓவியம்

மூன்றாம் தளக் கருவறையின் கிழக்குச் சுவரில் இருவர் அஞ்சலியில் அமர்ந்த கோலத்தில் நான்கு கரங்களுடன் இடம் பெற்றுள்ளனர். மேற்குச் சுவரில், கருவறையில் உள்ள ஸ்ரீதேவி மற்றும் பூதேவியருடன் அமர்ந்த கோலத்தில் வைகுண்டநாதன் ஓவியம் வரையப்பட்டுள்ளது.[32] கந்தர்வர் இருவர் பறந்து வந்து பூமாரி பொழிவது பொலிவுடன் திகழ்கின்றது. இருபுறமும் சாமரதாரிகள் சாமரம் வீசுகின்றனர். கருடன் இரண்டாம் தளத்தில் இருப்பது போலவே சிறு உருவத்தில் அஞ்சலியில் இடம்பெறுகிறார். கீழே பூசைசெய்யும் பொருட்கள் இடம்பெற்றுள்ளன. இறைவன் திருவாச்சியின் நடுவில் உள்ளார். இதற்கு மேல் பஞ்சாயுதங்கள் உருவகப்படுத்தப்பட்டு மனித உருவில் ஆயுத புருஷர்களாக இடம் பெற்றுள்ளனர். இவர்கள் நான்கு கரங்களுடன் தீட்டப்பட்டுள்ளனர். மேலிருகரங்கள் சங்கு, சக்கரத்துடனும், கீழிருகரங்கள் அஞ்சலியிலும் உள்ளன. இவர்களது தலையில் உள்ள கிரீடத்தில் ஒவ்வொருவருக்கும் அவரவர்க்குரிய ஆயுதங்கள் இடம்பெற்றுள்ளன. இங்கு கருவறையில் உள்ளது போன்ற தோற்றம் காட்டப்பட்டுள்ளமை அழகர்கோயில் ஓவியத்துடன் ஒப்பு நோக்கத்தக்கதாம்.

தெற்குச் சுவரினை மூன்று வரிசைகளாகப் பிரித்து அதில் மேல் வரிசையில் திருமாலது அவதாரங்களும், நடுவரிசையில் தேவர்களும், கீழ்வரிசையில் ஆழ்வார்களும் வரையப்பட்டுள்ளனர். வடக்குச் சுவரில் மூன்றுவரிசைகளில் உள்ளவர் யார்? என அடையாளம் காண இயலவில்லை. இக்கோயிலில் உள்ள ஓவியங்களில் பலருக்கும் நான்கு

கரங்கள் காட்டப்பட்டுள்ளதிலிருந்து எவ்வித முறைமையும் பின்பற்றப்படவில்லை என்பது புலனாகின்றது. இவை ஓவியரின் எண்ணப்படி அமைக்கப்பட்டிருக்கக்கூடும்.

## வண்ணம்

ஓவியத்தின் பின்புலமாக சிவப்பு வண்ணம் மற்றும் வெள்ளை வண்ணம் பயன்படுத்தப்பட்டுள்ளது. திருமாலுக்கு நீலநிறமும், மற்றவர்களுக்கு செம்பழுப்பு நிறமும் இடப்பட்டுள்ளது. தாடிக்குக் கறுப்பு நிறம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

## ஆடை, அணிகலன்

சாதாரண மக்களாயின் இடுப்பில் "புட்டகோசி"[33] எனும் துணி அணிவிக்கப்பெறும். இங்கு இடம் பெற்றுள்ள உருவங்கள் இறை மற்றும் தேவ உருவங்களாதலின் எல்லா உருவங்களுக்கும் கணுக்கால்வரை கீழாடை வரையப்பெற்றுள்ளது. மேலும், இடுப்பில் உதரத்துண்டு இடம் பெறுவதோடு அவை உயர்ந்தவர் என்பதைக் காட்டுவது போல் அவ் உதரத்துண்டின் ஓரங்களில் பட்டுச்சரிகை காட்டப்பட்டுள்ளது. கருடனுக்கு மட்டும் 'சல்லதாமு'[34] எனப்படும் கால்சட்டை வரையப்பட்டுள்ளது.

ஆண்கள் மேலாடையின்றி வரையப்பட்டுள்ளனர். எனினும், விஷ்ணுவுக்கு பீதாம்பரம் எனும் துண்டு மேலாடையாக இடம் பெறுகிறது. திருமாலது அவதார உருவங்களுக்கும் மேலாடை அணியப் பட்டுள்ளது. விசயநகர-நாயக்கர் காலத்து ஓவியங்களில் இத்தகு துண்டு தோல்பட்டையிலோ, கைமேல் சுற்றி வருவது போன்றோ இடம் பெறுவதுண்டு. இவை பெரும்பாலும் அரச உருவங்கள் மற்றும் இறையுருவங்களில் மட்டுமே இடம்பெறும். தாழ்ந்த குடியினருக்கு மேலாடை காட்டப்படுவது கிடையாது.[35] ஆனால், இங்கு திக்கு பாலகர்களுக்குக் மேலாடையாகத் துண்டு கூடக் காட்டப்படவில்லை. இதனை நோக்கும் போது திருமாலுக்கு மற்றவர்கள் இணையானவரல்ல என்று காட்டுவது போன்று தோன்றுகிறது.

நாயக்கரது ஓவியங்களில் இடம்பெறும் பெண்களில் குறிப்பாக நடனமாதர், வெண்சாமரப் பெண்கள், அரசியர், வேட்டுவச்சிகள், புராண இதிகாசப் பாத்திரங்கள், இறையுருவங்கள் முதலியோருக்கு 'சகாக்சா' பாணியில் கீழாடை கட்டப்பட்டிருக்கும்[36] 'சகாக்சா' என்பது காலைச் சுற்றி வரிவரியாக அமையும். மேலும் இது விசிறி வடிவில் அமைந்திருக்கும். இங்கு இறைவி உருவங்கள், சாமரதாரிப் பெண்கள், முதலானோருக்கு ஆடை இத்தகு சகாக்சா பாணியில் இடம் பெற்றுள்ளது. இவர்களுக்கு மேலாடையாக இரவிக்கை இடம் பெற்றுள்ளது. இது வட்டார வழக்கத்தின் தாக்கமாக இருக்கலாம்.

ஓவியத்தில் தீட்டப்பெற்றுள்ள உருவங்கள் அனைத்திலும் தலையி கிரீடம் இடம்பெறுகிறது. முனிவர்களின் உருவங்களில் மட்டு சடாமகுடம் காணப்படுகிறது. சாமரதாரிப் பெண்களின் உருவங்களி கிரீடம் இடம் பெறவில்லை. மாறாக இவர்களது சடை இடுப்பு வ காட்டப்பட்டுள்ளது. மேலும், சடையின் நுனியில் குஞ்ச காட்டப்பட்டுள்ளது. இத்தகு குஞ்சம் அமைக்கும் மு விசயநகர-நாயக்கர் காலத்து ஓவியத்திற்குரியதாகும்.

ஆண்களுக்குக் காலில், கழல் எனும் ஆபரணம் இடம்பெறுகிற காதுகளில் குண்டலம் உள்ளது. இறையுருவங்களுக்கு காதுகளி மகரகுண்டலம், பத்ரகுண்டலம், ஹம்ஸ குண்டலம் முதலிய அமைப்பது மரபாகும். இதனைக் தமிழகத்தில் கி.பி. 7-ஆம் நூற்றாண் முதலே காணலாம். இம்மரபு இந்த ஓவியங்களிலும் காட்டப்பட்டுள்ள மேலும், அக்காலத்தில் ஆண்களும் காதுகளில் அணிகல அணிந்திருந்தனர் என்பதை அறிய இத்தகு ஓவியங்கள் சான்றா அமைகின்றன.

பெண்களின் காதுகளில் குண்டலமும், அதில் தொங்கு லோலாக்கும் இடம்பெற்றிருக்கிறது. சாமரதாரிப் பெண்களின் தலையி நெத்திச் சுட்டியும் வளையமும் முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள கழுத்தில் நீண்ட மாலை போன்ற நகை இடம் பெற்றுள்ளது. பொதுவா நாயக்கரது ஓவியத்தில் பெண்களின் கழுத்தில் மேற்சொன் அணிகலன்கள் இடம்பெறும் கழுத்தை ஒட்டி சற்று தளர்ச்சியாக ந தீட்டப்பெறும். இங்குச் சற்று இறங்கிய நிலையில் ந வரையப்பெற்றுள்ளது.

### காலம்

இவ் ஓவியங்களின் பாணியை வைத்து இவை கி.பி. பதினெட்டா நுற்றாண்டைச் சேர்ந்தவை எனக்கருதலாம்.

## 6. வைகுண்டநாதன் கோயில் ஓவியம்

ஸ்ரீவைகுண்டம் வைகுண்டநாதன் கோயிலில் கருவறையைச் சுற் அமைந்துள்ள மூடிய திருச்சுற்றின் விதானத்திலும், சுவர்களிலு நாயக்கர்கால ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன. இங்கு வைணவ திவ்வி தேசங்கள் எனக் கருதப்படும் நூற்றி எட்டுக்கோயில்களில் உள் மூலவரது உருவங்கள் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளன. சுவர்ப்பகு இருபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. இ ஓவியத் தொகுதியின் துவக்கத்தில் முதல் ஓவியமாக அரசரது உருவம் த பரிவாரங்களுடன் இடம்பெற்றுள்ளது. இவர் காலத்தில் இவ் ஓவியங்க தீட்டப்பட்டதாகக் கருதலாம். எனினும், இவ்வரசர் யார்? என்பதற் எந்த ஆதாரமும் காட்டப்படவில்லை. இன்று இங்குள்ள அனைத்

ஓவியங்களுமே அடையாளம் காண இயலாத வண்ணம் முற்றிலுமாக அழிந்துவிட்டன. ஆங்காங்கே ஓவியச்சுவடுகள் மட்டும் எஞ்சியுள்ளன. காஞ்சி வரதராசப்பெருமாள் கோயிலில் கருவறையைச் சுற்றித் திருச்சுற்றில் இதேபோல் நூற்றி எட்டு திவ்வியதேசங்களில் உறைகின்ற பெருமாளின் உருவங்கள் தீட்டப்பட்டு அவற்றின் பெயர்களும் எழுதப்பட்டுள்ளன. எனினும், இதில் பெரும்பகுதி இன்று அழிந்துவிட்டது. இவை கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் தீட்டப் பட்டிருக்கலாம்.[28] எனவே, ஸ்ரீவைகுண்டம் கோயிலில் இடம்பெற்றுள்ள ஓவியம் இங்கு வரதராசப்பெருமாள் கோயில் ஓவியங்களைப் பின்பற்றி அமைக்கப்பட்டனவாகக் கொள்ளலாம். நம்மாழ்வார் பிறந்த ஆழ்வார் திருநகரியில் மண்டபத்தினைச் சுற்றியுள்ள சுவரில் நூற்றியெட்டு திவ்ய தேசங்களின் இறையுருவங்களும் சிறுசிறு சிற்பத்தொகுதிகளாக அமைக்கப்பட்டுள்ளமை இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

இவ்வாறு நூற்றி எட்டு திவ்விய தேசங்களில் உறைகின்ற இறைவனது உருவங்களைக் கோயில்களில் தீட்டும் மரபு விசயநகர -நாயக்கரின் காலத்தில்தான் முதன்முதலாகத் தோன்றியிருக்க வேண்டும். இன்றளவும் பல வைணவக் கோயில்களில் நூற்றி எட்டு திவ்வியதேச இறையுருவங்களைத் தீட்டும் மரபைக் காணலாம். திருமோகூர் காளமேகப்பெருமாள்கோயில், மதுரை கூடலழகர் கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில் ஆகிய கோயில்களில் நூற்றி எட்டுத் திவ்வியதேச இறையுருவங்களின் நவீன ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. ஆனால், ஸ்ரீவைகுண்டம் மற்றும் காஞ்சி வரதராசப் பெருமாள் கோயில்களில் உள்ள திவ்விய தேச ஓவியங்களுக்கும் பிந்திய காலத்தில், மேற்கூறப்பட்ட சில கோயில்களில் அமைக்கப்பட்டுள்ள திவ்வியதேச ஓவியங்களுக்கும் உள்ள முக்கிய வேறுபாடு யாதெனில், முந்தியவை அரசர்களின் அரவணைப்பில் ஒரே காலத்தில் அமைக்கப்பட்டவை. ஆனால், பிந்தியவை பக்தர்கள், வணிகர்களின் உதவியால் அவ்வப்போது அமைக்கப்பட்டவை. எனவே, அவற்றில் உருவ அமைப்பு, ஒற்றுமை, வண்ணங்களில் காட்டப்பட்ட மரபு ஆகியவற்றினைக் காண இயலாது.

அடுத்ததாக, இக்கோயிலில் உள்ள திருவேங்கடநாதன் மண்டபத் திற்கு முன் உள்ள நான்கு தூண்களுடன் கூடிய சிறுமண்டபத்தின் விதானம் பனிரெண்டு கட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதில் நவதிருப்பதிகளில் உறையும் இறையுருங்கள் வரையப்பட்டுள்ளன. இவைதவிர மீதமுள்ள மூன்று கட்டங்களிலும் உள்ள உருவங்களை அடையாளம் காணமுடியவில்லை. இக்கோயிலில் உள்ள உற்சவர் விழாக்காலங்களில் இக்குறட்டில் எழுந்தருளுவதால், கற்பூர தீபாராதனை காட்டியதில் ஓவியம் முழுவதும் புகை படிந்துள்ளதால், ஓவியத்தில் உள்ள உருவங்களைச் சரியாக அடையாளம் காணமுடியவில்லை. ஓவியத்தின் மேற்பகுதியில் ஒவ்வொரு சதுரத்திலும்

அத்திருப்பதியின் பெயர் தமிழிலும், தெலுங்கிலும் எழுதப் பெற்றுள்ளது. படிந்துள்ள இப்புகையை நீக்கினால் நாயக்கர் காலத்து சிதைவடையாத ஓவியத்தை நன்கு காணஇயலும்.

ஸ்ரீவைகுண்டம் கோயிலில் மகாமண்டபத்தின் வெளிச்சுவரில் கிழக்குப்பக்கம் முழுவதும் ஓவியங்கள் இடம்பெற்றிருந்தன. ஆனால், தற்பொழுது பெரும்பகுதி அழிந்துவிட்டது. எஞ்சியவை ஒரு சில ஓவியங்களே. இதில் ஒரு காட்சியில் வனம் சித்தரிக்கப்பட்டுள்ளது. வனத்தில் புலி, மான், சிங்கம், பறவைகள், மரக்கூட்டம், செடிகள், குன்றுகள், முனிவர் தவம்செய்தல் ஆகியன இயற்கையோடு இயைந்து காட்டப்பட்டுள்ளன. கிருஷ்ணன் சிறு வயதில் தன் நண்பர்களோடு இருப்பது போன்று காட்டப்பட்டுள்ளது.

மற்றொரு ஓவியத்தில் திருவாச்சியின் கீழ்திருமால் நின்ற நிலையில் இருக்க, அடியவர் ஒருவர் சாமரம் வீச, மற்றொரு அடியவர் தீபாராதனை காட்டி வணங்குவதுபோல் சித்தரிக்கப்பட்டுள்ளது. இந்திரன் தன்மனைவி இந்திராணியோடு வந்து திருமாலை வணங்குகிறான். இவர்களுக்கு அருகில் வெள்ளையானை இடம் பெற்றுள்ளது. எனவே, இக்காட்சியையும் முன்னர் கூறிய காட்சியையும் பார்க்கின்றபோது இக்காட்சியானது கோவர்த்தனகிரி நிகழ்ச்சிக்குப் பின் இந்திரன் கண்ணனை வணங்குவதாகக் கொள்ளலாம்.

**வண்ணம்**

இவ் ஓவியத்தில் வெள்ளை, மஞ்சள், சாம்பல், இளம் ஊதா, கறுப்பு, பச்சை, முதலிய நிறங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. நீர்நிலை, யானை, போன்றவை வெள்ளை நிறத்திலும், பறவைகள், விலங்குகள் மற்றும் இந்திராணி ஆகிய உருவங்கள் மஞ்சள் நிறத்திலும், முனிவர் மற்றும் கிருஷ்ணன் சாம்பல் நிறத்திலும், விஷ்ணு இளம் ஊதா நிறத்திலும், செடிகள் பச்சை நிறத்திலும் தீட்டப்பட்டுள்ளன. ஆடை அணிகலன்கள் இங்குச் சிறப்பாக இடம்பெறவில்லை.

## 7. நின்ற நம்பி கோயில் ஓவியம்

இக்கோயில் கம்பத்தடி மண்டபத்தில் உள்ள நான்கு தூண்களுடன் கூடிய குறட்டின் விதானத்தில் ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. இது ஸ்ரீவைகுண்டம் கோயிலில் உள்ள குறட்டில் இடம்பெற்றுள்ள ஓவியம் போல் உள்ளது. இங்கும் ஓவியம் முழுவதும் அடையாளம் காண முடியாதபடி கறுப்புப் புகை படிந்துள்ளது.

விதானம் இருபிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மேலே உற்சவர் உருவம் இடம்பெற்றுள்ளது. இதில் மகாவிஷ்ணு, ஸ்ரீதேவி, பூதேவியருடன் நின்ற நிலையில் இடம்பெற்றுள்ளார். கீழ்நிலையில் திரிவிக்ரம அவதார ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. திரிவிக்ரமர் ஒருகாலை மேலே தூக்கியும்,

தூக்கிய காலின் பாதத்தின் அருகே மகாபலி இருப்பதுபோல் காட்டப்பட்டுள்ளார். திரிவிக்ரமனுக்கு அருகே வாமன உருவம் இடம்பெற்றுள்ளது. அரசனும் அரசியும் வைணவ ஏகதண்டி ஒருவரிடம் தீட்சை பெறுவது, இதில் இடம்பெற்றுள்ளது. இந்த ஏகதண்டி ஏதேனும் ஒரு வைணவந் நிறுவனத்தின் தலைவரான ஜீயராக இருக்கலாம்.

### காலம்

இக்குறட்டில் உள்ள கல்வெட்டு ஒன்றில் திருமலைய்யன் சதாசேவை என உள்ளது. இது கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டு எழுத்தமைதியைக் கொண்டிருப்பதால் இவ் ஓவியங்கள் நிச்சயமாக பதினெட்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாக இருக்க இயலாது. எனவே, இவ்வோவியத்தின் காலத்தை கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டாகவோ அதற்குப் பிந்தியதாகவோ கொள்ளலாம்.

### வண்ணம்

இவ்வோவியத்தில் பச்சை, சாம்பல், கறுப்பு, வெள்ளை, சிவப்பு, ஆகிய நிறங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. உற்சவமூர்த்தியும் வாமன-திரிவிக்ரமரும் பச்சை நிறத்தில் தீட்டப்பட்டுள்ளனர்.

## 8. ஆதிநாதர் கோயில் ஓவியம்

இக்கோயிலில் நம்மாழ்வார் மற்றும் ஆச்சாரியர்களின் வாழ்க்கை ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. இவை பெருமளவு அழிந்துவிட்டதாலும் கதை நிகழ்வுகள் சரியாக இடம்பெறாததாலும் கதையினைத் தொடர்ச்சியாக அறிய இயலவில்லை. இவை கி.பி.பதினெட்டாம் நூற்றாண்டின் ஓவிய அமைதியைப் பெற்றுத் திகழ்கின்றன.

## தொகுப்புரை

ஓவியம் என்பது அது வரையறுக்கப்பட்ட காலகட்டத்தில் நடைமுறையில் இருந்த ஓவியப்பாணியைப் பற்றி (Style)அறிய உதவுவதோடு மட்டும் அமையாது அக்காலச் சமூகத்தில் நிலவிய மக்களது ஆடை, அணிகலன்கள் பற்றியும் அவற்றின் மூலம் அக்காலமக்களின் நாகரிகம் பற்றியும் அறிந்துகொள்ள முடிகிறது. அக்காலத்தில் ஆண்களும் கொண்டையிட்டுப் பூ அணிந்ததையும், காதில் அணிகலன் அணிந்ததையும் அறிய முடிகிறது.

அப்போதைய நெசவுத் தொழிலின் நேர்த்தியை ஓவியத்தில் இடம் பெற்றுள்ள அலங்கார வேலைப்பாடுகள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

ஓவியத்தில் இடம்பெறும் சமுதாயச் சடங்குகள் மூலம் அக்காலப் பண்பாட்டு முறைகளை அறிந்து கொள்ள முடிகிறது.

நாயக்கரது ஓவியத்தில் கலைஞன் அவனுடைய நாட்டுப் (ஆந்திரா) பழக்கவழக்கங்களை ஏற்றிக் கூறியுள்ளதால் அந்நாட்டுப் பழக்கங்களையும் அறிய இயலுகிறது.

ஓவியத்தின் மையக்கருத்தினை வைத்து அக்காலத்தில் மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்த கருத்து எது என்பதையும் அவ்வாறு செல்வாக்குப் பெறுவதற்குக் காரணம் என்ன என்பதையும் அறிய முடிகிறது. நாயக்கரது காலத்தில் இராமாயணம் அதிகச் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதை இவ் ஓவியங்கள் மூலம் அறிய முடிகிறது. இங்கு மனிதருள் இராமன் உயர்ந்த நிலையினைப் பெற்று விளங்கியது போன்று மக்களும் திகழ வேண்டும் என்னும் உட்பொருள் உள்ளதைக் காணமுடிகிறது.

அக்காலச் சமுதாயத்தில் உயர்ந்த இடத்திலிருந்தவர்கள் அணிகின்ற ஆபரணங்கள் எவை, சாதாரண மக்கள் அணிந்த ஆபரணங்கள் எவை என்பதை அறிய முடிகிறது. நாயக்கர் கால ஓவியங்களில் மிகமுக்கியமானது யாதெனில், ஒவ்வொரு கோயில் ஓவியத்திலும் அக்கோயிலின் இறையுருவத்தையே தீட்டுவது ஆகும். இது பௌத்தர்களது ஸ்தூபிகளிலும், அதன் வாயிற்தோரணங்களிலும், கி.பி.முதல் நூற்றாண்டிலிருந்தே அங்குள்ள ஸ்தூபியின் அமைப்பினை ஒரு கல்பலகையில் சித்தரிக்கும் பாணியை ஒத்ததாகும். மேலும், எந்தெந்த வண்ணங்கள் எந்தெந்த உருவங்களுக்குப் பயன்படுத்தினர். அவ்வாறு பயன்படுத்தப்பட்டது சரிதானா? முறைமை இருக்கின்றதா? விடுபட்டுள்ளதா? என்பனவற்றையும் இங்கு அறியமுடிகின்றது. இவ் ஓவியத் தொகுப்புகளுள் இன்றும் அழிந்த நிலையிலும் சிறப்புற்றிருப்பது அழகர் கோயில் ஓவியமாகும்.

## அடிக்குறிப்புகள்

1. க.சிவராமமூர்த்தி, இந்திய ஓவியம், ப.6.
2. மேலது.
3. செ.வைத்தியலிங்கம், தமிழ்ப் பண்பாட்டு வரலாறு, ப.345.
4. க.சிவராமமூர்த்தி, முன்னது, ப.6.
5. மேலது, ப.31.
6. 1. சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன், (புறம் 59).
   2. எழுதெழிலம்பலம், (பரிபாடல் 18, 28, 29).
   3. எழுத்து நிலை மண்டபம் (பரிபாடல் 19, 48, 59).
   4. கண்ணுள் விளைஞர், (மதுரைக்காஞ்சி 516 – 518).
   5. விதான ஓவியம் பற்றிய செய்தி (நெடுநல்வாடை 108–113).
7. செ.வைத்தியலிங்கம், ப.345.
8. மேலது.

9. நார்த்தாமலை விசயாலய சோழீசுவரம், முத்தரையர் கோயில் என்றே கே.வி. சௌந்தரராசன், கே.ஆர். சீனிவாசன், ஜே.சி. ஹார்ல் மற்றும் டக்லஸ் பேரட் ஆகியோர் கூறுகின்றனர்.
10. N.Hari Narayanan, Report on the cleaning of paintings at the Vennugopala Shrine in Srirangam, **Damilica** Vol.II, Part 3, p.42.
11. *இரா.நாகசாமி, ஓவியப்பாவை, ப.147.*
12. இவை *1995*-ஆம் ஆண்டு நடைபெற்ற கும்பாபிசேகத்தின் போது முழுமையாக வெள்ளையடித்து அழிக்கப்பட்டுவிட்டது. அதில் எஞ்சியது மங்கம்மாள் இடம்பெற்றுள்ள ஓவியம் மட்டுமே.
13. களஆய்வில் கண்டது.
14. பதினோராம் நூற்றாண்டைச் சேர்ந்த தஞ்சைப் பெருவுடையார் கோயில் ஓவியத்தில் காணப்படும் இருவர் இராசராசனும், கருவூர்த்தேவரும் என்று சொல்லுவதில் எவ்வளவு உண்மை உள்ளது என்பதற்கான ஆதாரம் கிடைக்கவில்லை.
15. *இரா. நாகசாமி, முன்னது, ப.132.*
16. தமிழகத்தில் அஷ்டாங்க விமானம் மேற்கண்ட மூன்று கோயில்கள் தவிர காஞ்சிபுரம் வைகுந்தப்பெருமாள் கோயில் உத்திரமேரூர் சுந்தரவரதர்கோயில் மற்றும் சேரன்மாதேவி இராமசாமிகோயில் (இங்கு ஓவியம் இடம் பெறவில்லை) ஆகிய கோயில்களும் அஷ்டாங்க விமானக் கோயில்கள் ஆதலின் அக்கோயில்களின் கருவறையில் ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. இக்கோயில்களின் மூன்று கருவறைகளிலும் ஓவியங்கள் இருந்திருக்கலாம். கீழ்த்தளத்தில் மட்டும் பூசைகள் நடைபெறுவதால் கற்பூரத்தின் புகைபட்டு ஓவியங்கள் முற்றிலுமாக அழிந்துவிட்டன.

    மன்னார்கோயிலில் மட்டும் ஓவியம் கருவறையில் இடம் பெறாது முன்மண்டபத்தில் வரையப்பெற்றுள்ளது. மேற்கண்டவற்றிலிருந்து அஷ்டாங்க விமானம் எனில் ஓவியம் இடம்பெறச் செய்தல் என்பது ஒரு மரபாக பின்பற்றப்பட்டு வந்துள்ளது என்பதை அறியலாம்.
17. *இரா. நாகசாமி, முன்னது, ப.154.*
18. Y.Nirmala Kumari.

    **Social life as Reflected in Sculptures and Paintings of Laater, Vijayanagara Period (A.D. 1500-1650)**, (With Special Reference to Andhra), p.40.
19. P.Banarjee, **Rama in Indian Literature, Art and Thought,** Illustration No.191.
20. Margret Stutley, **An Illustrated Dictionary of Hindu Iconography**, p.57.
21. எல். மணிவண்ணன், மதுரை கூடலழகர் கோயில் ஓவியங்கள் (கட்டுரை), ஆய்வுச்சிந்தனைகள் ப.5.
22. செ.வைத்தியலிங்கம், முன்னது, ப.467.
23. இந்நூலில் இடம்பெறும் அஷ்டாங்க விமானக் கோயில்களில் இராசகோபாலசுவாமி கோயிலில் மட்டுமே மேலிருதளங்களில் அர்த்த மண்டபம் இடம் பெற்றுள்ளது. மேலும், இங்கு மேலிரு கருவறைகளில் நவீனகால ஓவியங்கள் காணப்படுகின்றன. இவை நவீன கால ஓவியம் என்பதால் அர்த்தமண்டப ஓவியங்கள் மட்டும் விளக்கப்படுகின்றன.
24. செ.வைத்தியலிங்கம், முன்னது, ப.460.

25. Chitraviji, **Early Vijayanagara Paintings**, Chapter 22.

26. Y.Nirmala Kumari, *முன்னது,* p.28.

27. மேலது, p.28.

28. *இரா. நாகசாமி, முன்னது, ப.129.*

29. *திருமால் வாமன அவதாரம் இங்குதான் எடுத்தார் என இக்கோயில் தலபுராணம் கூறுகிறது. ஆதலால் தான் இவ்வூருக்கு 'திருக்குறுங்குடி' என்றும் 'வாமனக்குடி' என்றும் பெயர். இதனை வலியுறுத்துவதாகவே ஓவியத்திலும் வாமன அவதாரம் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. இக்கோயிலில் உள்ள ஜீயர் மடம் சுமார் எண்ணூற்று எண்பத்தி எட்டு ஆண்டுகளுக்கு முன் (கி.பி.1098) துவங்கப்பட்டது என பேரருளாளரான ராமானுஜ ஜீயர் ஸ்வாமி மடத்தின் பரம்பரை நூல் ஒன்று கூறுகிறது. ஓவியத்தில் இடம் பெற்றுள்ள ஏக தாண்டி இந்த ஜீயர்களில் ஒருவராக இருக்கலாம்.*

30. *இரா.நாகசாமி, முன்னது, ப.156.*

31. *ஆ.எதிராஜன், **108** வைணவ திவ்யதேச ஸ்தல வரலாறு. ப.562.*

32. *திருத்தங்கல் நின்றநாராயணப்பெருமாள் கோயிலின் கருவறையில் திருமால் தன் நான்கு தேவியருடன் நின்ற நிலையில் (மூலவர்) இடம்பெற்றிருப்பது இவ்வோவியத்துடன் ஒப்புநோக்கத்தக்கது, திருமால் நான்கு தேவியருடன் காட்டப்படும் மரபு தமிழகத்தில் இருந்து வந்ததற்கு இது ஒரு முக்கிய உதாரணமாகும்.*

33. Y. Nirmala Kumari, *முன்னது,* p. 32.

34. மேலது, p.32.

35. மேலது, p.30.

36. மேலது, p.32.

37. மேலது, p.35.

# 6

# தொகுப்புரை

"பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களின் கலையும் கட்டடக் கலையும்" எனும் ஆய்வின் மூலம் இந்நூலில் கீழ்க்காணும் முடிவுகள் பெறப்படுகின்றன.

பாண்டிய நாட்டு வைணவக் குடைவரைகள் சதுரம், நீள்சதுரம் ஆகிய அமைப்புக்களில் அமைந்துள்ளன. இவை அனைத்தும் முகமண்டபம் கொண்டு விளங்குகின்றன.

இரட்டைக் கருவறை அமைப்பு பாண்டியர்களுக்கே உரிய அமைப்பாக விளங்குகிறது. மேலும், இவ்வமைப்பு பாண்டியநாட்டில் மட்டுமே இடம்பெற்றுள்ளது. இரட்டைக் கருவறை அமைப்பு சிவனுக்கும், திருமாலுக்குமாக அமைக்கப்படுகிறது. இதில் சிவனது கருவறை விஷ்ணுவின் கருவறையைவிடச் சற்றுப் பெரிய அளவில் அமைகிறது. காரணம் இவ்விருவரில் முதன்மைத் தெய்வமாக சிவனுக்கே சிறப்பிடம் காட்டி கோயில் அமைக்கப்பட்டுள்ளதாகும்.

பாண்டிய நாட்டு வைணவக் குடைவரைகள் குறிப்பிட்ட திசையை நோக்கி மட்டும் அமையாது எல்லாத்திசைகளை நோக்கியும் அமைந்துள்ளன.

பாண்டிய நாட்டு வைணவக் குடைவரைகளின் கருவறைகளில் திருமாலின் நின்ற, இருந்த, கிடந்த ஆகிய மூன்று கோலங்களும் இடம் பெற்றுள்ளன.

சொக்கம்பட்டி குடைவரையில் திருமாலுக்குரிய கருவறையில் இடம் பெற்றுள்ள முழுமையாகச் செதுக்கப்படாத சிற்பமானது, திருச்சி கீழ்க்குடைவரையில் உள்ள திருமாலின் சிற்ப அமைதியை ஒத்து காணப்படுகிறது.

குடைவரைகளில் இரண்டு முதல் எட்டு வரை துவாரபாலகர் சிற்பங்கள் இடம்பெற்றுள்ளன. கோயில்களின் காலமானது கல்வெட்டுக்கள், கலைப்பாணி ஆகியவற்றின் அடிப்படையில் தோராய மாகக் கணக்கிடப்பட்டுள்ளது. மன்னார்கோயில், கூடலழகர், அழகர் கோயில் மற்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில் ஆகிய நான்கு கோயில்களில் கோயில் கட்டியமைக்கான நேரடிக் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளதால் இக்கோயில்களின் காலத்தை மட்டும் துல்லியமாகக் கூற இயலுகின்றது.

நான்குனேரி, திருக்கோளூர் ஆகிய கோயில்களில் பிற்காலப் பாண்டியரது கல்வெட்டும், அவர்களது கலைப்பாணியும் இடம் பெற்றுள்ளதால் இவை பிற்காலப் பாண்டியரது காலத்தைச் (கி.பி.13 ஆம் நூற்றாண்டு) சேர்ந்தவை எனக் கூறலாம்.

பெருங்குளம், தொலைவில்லிமங்கலம் அரவிந்தலோசனன் மற்றும் ஸ்ரீநிவாசன் ஆகிய கோயில்களில் பெரும்பகுதி பாண்டியரது கலைப்பாணி பின்பற்றப்பட்டிருப்பினும், விசயநகர-நாயக்கரது துவக்க காலத்தில் இவை விரிவுபடுத்தப்பட்டிருப்பது வெள்ளிடைமலையாகும்.

திருக்குறுங்குடி, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில் மற்றும் வடபத்ரசாயிகோயில் ஆகிய கோயில்களில் விசயநகர-நாயக்கரது கலைப்பாணி அமைந்திருப்பினும் இவை, சற்று வளர்ச்சியடைந்ததாக உள்ளதால் அதனை அடுத்த காலகட்டத்தைச் (கி.பி. 15 ஆம் நூற்றாண்டு) சேர்ந்தவையாகக் கொள்ளப்படுகின்றன.

மேற்கண்ட கோயில்கள் தவிர பிற கோயில்கள் அனைத்தும் கலைப்பாணியில் இன்னும் சற்று வளர்ச்சியுற்று விசயநகர-நாயக்கரது கட்டடக் கலைப்பாணியின் உன்னத நிலையினைக் காட்டுவதாக அமைந்துள்ளதால் இவை விசயநகர-நாயக்கரது கலைப்பாணியின் இறுதி நிலையாகக் (கி.பி. 17 ஆம் நூற்றாண்டு) கொள்ளலாம்.

திருத்தங்கல் கோயில் மட்டும் அரசபரம்பரையினரின் காலத்திற்குப் பின் (கி.பி. 18, 19-ஆம் நூற்றாண்டுகள்) கட்டப்பட்ட கோயிலாக அமைந்துள்ளது. இந்நூலில் விளக்கப்பெறும் கோயில்களின் கட்டடக் கலையை நோக்கும் போது கருவறைகள் சதுரம் மற்றும் வட்டவடிவில் அமையுமானால் பெரும்பான்மையாக அவற்றில் இறைவனின் கோலம் அமர்ந்த மற்றும் நின்ற நிலைகளில் இடம்பெற்றுள்ளன. அஷ்டாங்க விமானக் கோயில்களில் மட்டுமே சதுரவடிவக் கருவறைகளில் கிடந்த கோலமும் அமைக்கப்பெறுகின்றது.

செவ்வகக் கருவறையில் பொதுவாக திருமாலின் கிடந்த கோலமே அமைக்கப் பெறுகின்ற மரபு இருந்து வந்துள்ளது என்றாலும் மன்னார் கோயில் மற்றும் திருத்தங்கல் கோயில்களில் நின்ற கோலமும் இடம் பெற்றுள்ளது.

அஷ்டாங்க விமானங்களில் கருவறை அமைப்பு பொதுவாக சதுரமாக அமைந்துள்ளன என்றாலும் மன்னார்கோயிலில் செவ்வகமாக அமைந்துள்ளது.

இங்கு விளக்கப்பெறும் கோயில்களில் பெரும்பாலானவை நிரந்தரவகைக் கோயில்களாக விளங்குகின்றன. அஷ்டாங்க விமானக் கோயில்கள் அனைத்தும் சாந்தார வகைக் கோயில்களாக அமைகின்றன.

கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவற்றைச் சுற்றிப் பிரகாரம் அமைப்பது விசயநகர-நாயக்கரது கலைப்பாணியில் முக்கியக் கூறாக விளங்குகிறது.

விசயநகர-நாயக்கரது கோயில்களில் பெரும்பாலும் உபபீடம் இடம் பெற்றுள்ளது. பாதபந்த அதிட்டானம், கபோதபந்த அதிட்டானம், பாதபந்த-கபோதபந்த அதிட்டானம் எனும் வர்க்கபேத அதிட்டானம், பிரதிபந்த அதிட்டானம் என நான்கு விதமான அதிட்டான அமைப்புகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

பிரநாளமானது ஏழு கோயில்களில் மட்டுமே இடம்பெற்றுள்ளது. அவை சிம்மமுகத்துடன் கூடிய பிற்காலப் பாண்டியரது பாணியிலமைந்த பிரநாளம், மற்றொன்று பூமுனையுடன் கூடிய விசயநகர-நாயக்கரது பாணியில் அமைந்த பிரநாளம். பெரும்பாலான கோயில் கருவறைகளில் உள்ள இறையுருவம் சுதை பூசப்பட்டிருப்பதால் அவற்றில் பிரநாளம் இடம்பெறவில்லை.

பிற்காலப்பாண்டியரது கோயிற் கருவறைச் சுவர்களில் அரைத்தூண்கள் சதுர அமைப்பில் காணப்பெறுகின்றன. இவை கருவறை சதுரமாக இருப்பின் பக்கத்திற்கு நான்கு அரைத்தூண்களும் செவ்வகமாக இருப்பின் பக்கத்திற்கு ஆறு அரைத்தூண்களும் (பின்சுவரில் மட்டும்) இடம்பெறுகின்றன. விசயநகர-நாயக்கரது கோயிற் கருவறைகளில் அரைத்தூண்கள், அரைவட்டம், சதுரம், எண்பட்டை, பதினாறு பட்டை என்ற அமைப்புக்களில் அமைந்துள்ளன. அரைத்தூண்களின் சதுரப் பகுதியின் மேல் நாகபந்தம் தவறாது இடம் பெற்றுள்ளது.

பிற்காலப் பாண்டியரது கோயில்களில் வெட்டுப்போதிகையும், ஆப்புமுனைப் போதிகையும் இடம்பெற்றுள்ளன. விசயநகர-நாயக்கரது கோயில்களில் மேற்கண்ட போதிகை அமைப்புகள் பின்பற்றப் பட்டுள்ளதோடு பெரும்பான்மையான கோயில்களில் மொட்டுப்போதிகையும், பூமுனைப் போதிகையும் பயன்படுத்தப் பட்டுள்ளன. இவை தமிழகத்தைப் பொருத்தளவில் விசயநகர-நாயக்கர் காலத்து கலைப் படைப்புக்களில் முந்திய அரச வம்சத்தவர்களது கலைத்திறன்கள் பலவும் ஏற்றுக் கொள்ளப்பட்டு பயன்படுத்தப்பட்டன என்பதைக் காட்டுகின்றன.

பஞ்சரங்கள் சில கோயில்களில் மட்டுமே இடம்பெற்றுள்ளன. அவ்வாறு இடம்பெறும் கோயில்கள் விசயநகர-நாயக்கரது கோயில்களாக உள்ளன. இப்பஞ்சரங்கள் பல்வேறு மடிப்புக்களுடன் வளர்ச்சியடைந்த நிலையில் இடம்பெற்றுள்ளன.

இக்கோயில்களில் காணப்படும் கோட்ட பஞ்சரங்களில் பல்லவ, சோழர் கோயில்களில் இடம்பெறுவது போல் இறையுருவங்கள்

வைக்கப்பெறவில்லை. கோட்டபஞ்சரம் தேவகோட்டத்தின் அமைப்பைப் பெற்று விளங்குகிறது.

தேவகோட்டங்களில் பாண்டியரது தேவகோட்டங்கள் போலவே விசயநகர-நாயக்கரது கோயில் தேவகோட்டங்களிலும் இறையுருவம் இடம்பெறவில்லை என்றாலும் சில கோயில்களில் இறையுரு வைப்பதற் கான பீடம் வைக்கப்பெற்றுள்ளது. மற்றும் சில கோயில்களில் தேவகோட்டத்தில் உள்நோக்கிய பள்ளம் இடம்பெற்றுள்ளது. ஆழ்வார்திருநகரி, வடபத்ரசாயி ஆகிய கோயில்களின் தேவகோட்டங் களில் மட்டும் புடைப்புருவம் போல் இறையுருவங்கள் சிறு வடிவில் இடம்பெற்றுள்ளன. தேவகோட்ட தோரணங்களில் மகரதோரணம், பத்ரதோரணம் ஆகியன மட்டும் காணப்படுகின்றன. சித்ரதோரணம் இடம்பெறவில்லை. தாடிக்கொம்பில் மட்டும் சிம்மமுகத்துடன் கூடிய தோரணம் உள்ளது. தோரணங்களின் நடுவில் இடம்பெறும் சிறு சிற்பங்களில் தெற்கே தட்சணாமூர்த்தி/ வெண்ணெய்க்கு ஆடும் கண்ணன் மற்றும் மேற்கே நரசிம்மர், வடக்கே பிரம்மன்/இலக்குமிவராகர் எனும் அமைப்பு பின்பற்றப்பட்டுள்ளது.

சாளரங்கள் சாந்தார வகைக் கோயில்களின் கருவறைகளில் இடம் பெறுகின்றன. இச்சாளரங்கள் வடிவவியல் உருவ அமைப்புக்களில் சிற்றுருவங்களுடனும் காணப்பெறுகின்றன.

பிற்காலப் பாண்டியரது கோயில்களின் எழுதகத்தில் பத்மவரிசை அன்னவரிசை, பூதவரிசை ஆகிய அமைப்புக்கள் காணப்படுகின்றன. விசயநகர-நாயக்கரது கோயில்களில் மேற்கண்ட அமைப்பு சில கோயில்களில் பின்பற்றப்பட்டுள்ளது. எனினும், பெரும்பாலான கோயில்களில் வளைந்த கட்டை வரிசை அமைப்பு காணப்படுகிறது.

விசயநகர-நாயக்கரது காலக் கோயிற் கபோதங்கள்தான் கொடுங்கை அமைப்பைப்பெற்று விளங்குகின்றன. மேலும், கபோதத்தின் கீழ்த் தாழ்வாரக்கட்டை அமைப்பும் இடம்பெறுகிறது. இவர்களது சில கோயில்களில் கபோதம் சாதாரண அமைப்பிலும் காணப்பெறுகின்றது.

கபோதக் கூடுகளில் அழகர்கோயிற் கூடுகள் மிகப்பெரியன. கூடலழகர் கோயிற் கூடுகளில் இடம் பெறும் சிற்பங்களில் சிம்மத்தின் மேலமர்ந்த விஷ்ணு சிற்பம் அரிதான ஒன்றாக அமைந்துள்ளது.

இக்கோயில்களில் யாளி வரிசையில் யாளிகள் முழு உருவத்திலும், பாதி உருவத்திலும் காட்டப்பட்டுள்ளன. சில கோயில்களில் யாளிகளுக்குப்பதிலாக செவ்வகக்கட்டை வரிசை அமைப்பு இடம் பெற்றுள்ளது.

விமானம் மற்றும் கோட்டத்தில் தேவதைகளை அமைப்பதில் இரண்டு வித முறைகள் பின்பற்றப்பட்டுள்ளன. சில கோயில்களில் தெற்கே தட்சிணாமூர்த்தி, மேற்கே யோகநரசிம்மமர், வடக்கே பிரம்மன்,

கிழக்கே இந்திரன் என்ற அமைப்பும், இன்னும் சில கோயில்களில் நான்கு திசைகளிலும் திருமால் மற்றும் அவரது உருவங்கள் எனும் அமைப்பும் பின்பற்றப்பட்டுள்ளன. இவற்றில் இரண்டாம் அமைப்பு விசயநகர-நாயக்கரது கோயில்களில் பெரும்பாலும் இடம்பெற்றிருப் பதால் இவ்வமைப்பு பிற்காலத்தில் தோன்றியதாகக் கருதலாம்.

கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் கருடனும், சிம்மங்களும் வைக்கப்பெற்றுள்ளன.

சிகரமானது வட்டம், சதுரம், எண்பட்டை, சாலை ஆகிய நான்கு அமைப்புக்களிலும் விளங்குகின்றது. இவற்றில் சிகரம் எண்பட்டை எனில் மகாநாசிகள் நான்கும் சிறு நாசிகள் நான்கும் இடம் பெறுகின்றன. சிகரம் சதுரம், வட்டம் எனில் நான்கு மகாநாசிகளும் சாலை வடிவ சிகரம் எனில் இரண்டு மகாநாசிகளும் இடம் பெறுகின்றன.

பெரும்பாலான கோயில்களில் கலசம் சேதமடைந்துள்ளது. புதுப்பிக்கப்பட்ட கோயில்களில் தங்கமுலாம் பூசப்பட்ட கலசங்கள் இடம்பெற்றுள்ளன. இக்கோயில்களில் மூன்று கோயில்களில் மட்டும் அஷ்டாங்க விமானம் அமைந்துள்ளது. அஷ்டாங்க விமானம் என்பது ஒன்றன் மேல் ஒன்றாக மூன்று கருவறைகளை அமைப்பது என வரையறை செய்யலாம். மேலும், இக்கருவறைகளைச் சுற்றி கீழ்த்தளங்களில் மூடிய திருச்சுற்றுக்களும், மேல்தளங்களில் மூடிய, அல்லது திறந்த வெளித் திருச்சுற்றுக்களும் அமைகின்றன. இக்கருவறைகளில் திருமாலின் நின்ற, அமர்ந்த, கிடந்த கோலங்கள் இடம்பெறுகின்றன. இவை எந்த ஒரு பொதுவான நியதியையும் பின்பற்றாது மாறி மாறி அமைந்துள்ளன.

சிற்பங்கள் என்னும் இயல்மூலம் விசயநகர-நாயக்க மன்னரது காலத்தில் இருபெரும் இதிகாசங்களுக்கும், புராணக்கதைகளுக்கும் அதிக முக்கியத்துவம் கொடுத்து, அவற்றை விளக்கும் சிற்பங்களும், சிற்பத் தொகுதிகளும் கோயில் மண்டபங்களிலும், விமானத்தின் தளங்களிலும், கோபுரத்தின் தளங்களிலும் செதுக்கப்பட்டுள்ளமை புலனாகின்றது.

விசயநகர-நாயக்கர் வைணவர்களாயிருந்தபோதும் சைவ சமயத்தின் மீது காழ்ப்புணர்வு கொண்டவரல்லர் என்பதை அறிவிக்கும் வகையில் சைவசமயத் தொடர்புடைய சிற்பங்களும் இக்கோயில்களில் இடம்பெற்றுள்ளன.

இக்கோயில்களில் உள்ள சிற்ப அமைப்புக்கள் கிராமங்களில் அல்லது நகரங்களில் அக்காலத்தில் நடத்தப்படும் நாடகப்பாங்கினைப் போன்று கதைத் தொடர்ச்சியினைக் கொண்டு தொடர்கதையாக, இயக்க நிலையில், உயிரோட்டமுள்ளனவாகவும் காட்டப்படுவது இங்கு நோக்கத்தக்கதாகும். சில கோயில்களில் மட்டுமே இவ்வியக்க நிலையும், கதைத் தொடர்பும் இல்லாமல் போவதைக் காண்கிறோம்.

கலைஞர்களின் உளநிலையும், அன்றைய அரசியல் பொருளாதாரச் சூழலும் கூடக் இக்கதை தொடர்பின்மைக்கு காரணிகளாக இருந்திருக்கலாம். ஏதேனும் ஒரு சிற்பம் ஒரு தூணில் அமைந்தால் அது தொடர்புடைய மற்ற சிற்பங்கள் அதன் பக்கவாட்டிலோ எதிரிலோ அமைக்கப்படுவது ஒரு பொது மரபாகவே இருந்து வந்துள்ளது. சில இடங்களில் இம்மரபு பின்பற்றப்படாமல் இருந்திருக்கலாம். இக்காலத்தில் பாலியல் சிற்பங்கள் வெகுவாக இடம்பெற்றுள்ளன. கலைஞரின் படைப்பில் அரசின் கட்டுப்பாடு குறைந்துள்ள நிலையினை இவை நமக்கு உணர்த்துவதாகக் கொள்ளலாம். நாட்டார் வழக்காற்றுச் சிற்பங்கள் அக்காலச் சமுதாய நடவடிக்கைகளை எடுத்துக்காட்டுவதாய் உள்ளன.

பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களில் விசயநகர - நாயக்கரது காலத்து ஓவியமும், அவர்களது பாணியைப் பின்பற்றிய பிற்கால ஓவியமும் இடம்பெற்றுள்ளன. இவற்றில் அழகர்கோயில் மற்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில்களில் மட்டும் இராமாயணம் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது. இவ்வோவியத்தின் மூலம் அக்கால மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடு, சடங்குகள் முதலியவற்றை அறிய இயலுகிறது..

உதாரணமாக, அக்கலாத்தில் ஆண்களும், பெண்களைப் போல் கொண்டையிட்டுப் பூ அணிந்தனர் என்பதையும், காதில் அணிகலன் அணிந்தனர் என்பதையும் இவ் ஓவியங்கள் மூலமாக அறியமுடிகிறது.

சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்த ஆண்கள் கணுக்கால் வரை கீழாடை அணிந்தனர். அதே சமயத்தில் தாழ்ந்த நிலையில் இருந்த பணியாளர்களான யானைப்பாகன், தேரோட்டி முதலியோர் கீழாடையாகக் கால்சட்டை அணிந்தனர் என்பதும், பெண்களில் உயர்ந்த நிலையிலிருந்தவர்கள் மட்டுமே இரவிக்கை அணிந்தனர், பிறபெண்கள் இரவிக்கை அணியவில்லை என்பதும் இவ்வோவியத்தின் வாயிலாக அறிய் இயலுகிறது.

அழகர்கோயில் இராமாயண ஓவியத்தில் இடம்பெற்றுள்ள ஆடைகளில் உள்ள நேர்த்தியான வடிவமைப்பு அக்கால நெசவுத் தொழிலின் மேன்மையை உணர்த்துகிறது.

சமுதாயப் பழக்க வழக்கங்களாக மனைவி கருவுற்று இருக்கும் போது கணவன் முகச்சவரம் செய்யாமலிருப்பது, கருவுற்ற பெண்கள் நின்ற நிலையிலேயே குழந்தை பெற்றுக் கொள்வது, பெற்ற குழந்தைகளைக் காலில் படுக்கவைத்து நீராட்டுவது முதலான பழக்க வழக்கங்களை அறிய இவ் ஓவியங்கள் துணை செய்கின்றன.

இறந்தவர்களுக்கு நாடிக்கட்டு போடுதல், தலையில் எண்ணெய் இட்டுக் நீராட்டுதல் முதலிய இன்றைய பழக்கம் அன்றும் இருந்து வந்துள்ளதை அறிய முடிகிறது.

சமுதாயத்தில் எவை எவை உயர்ந்தோர் மற்றும் சாதாரண மக்கள் அணிந்த ஆபரணங்கள் என்பதை அறிய முடிகிறது.

நாயக்கரது ஓவியங்கள் இடம்பெற்றுள்ள கோயில்களில் அக்கோயில் கருவறையில் உள்ள இறையுருவங்களும் மண்டபங்களின் விதானத்தில் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன.

இவ்வோவியங்கள் நாயக்கருக்கே உரிய பாணியை அறியப் பெரிதும் துணை செய்கின்றன.

பாண்டியநாட்டு வைணவக் கோயில்களில் சுவர் சிற்பத்தொகுதிகள் (wall panels) காணப்பெறவில்லை. திருக்குறுங்குடியில் மட்டும் இவை இடம்பெற்றுள்ளன. விசயநகரம், ஆந்திரா மற்றும் கர்நாடகக் கோயில்களிலும் விசயநகர், ஹம்பியிலும் இவர்களது சிற்பத்தொகுதிகள் உள்ளன.

பாண்டிய நாட்டு வைணவக் கோயில்களில் விமானத்தின் கட்டடக் கலை அமைப்பை ஆராய்ந்தது போல் கோயிலின் பிற பகுதிகளான அர்த்த மண்டபம், மகாமண்டபம், மற்றும் உள்ள பிற மண்டபங்கள், பிரகாரங்கள் ஆகியவற்றின் அமைப்பு பற்றி மேலும் ஆய்வு மேற்கொள்ளலாம்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


## I. EPIGRAPHICAL

Annual Report,
1902, 1903, 1904, 1907, 1972, 1973.

Annual Reports on South Indian Epigraphy,
1903, 1905, 1907, 1911, 1918, 1922-25, 1926, 1926-27, 1927-28, 1929-30, 1939-40, 1942-43, 1959-60, 1960-61, 1962-63.

Archaeological Survey of India,

Madras Epigraphical Reports, 1922.

The Pudukottai State Inscriptions,

South Indian Inscriptions, Relevant Vols.

## II. தமிழ் நூல்கள்

அருணாசலம் பிள்ளை. மு., *தொல்காப்பியம், அகத்திணை இயல், உரைவளம்,* ம.கா.பல்கலைக் கழகம், மதுரை, 1975.

கண்ணன். பூ., *கம்பராமாயணம் மூலமும், தெளிவுரையும்,* வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1993.

கணபதி ஸ்தபதி, வை., *சிற்பச் செந்நூல்,* தொழில் நுட்பக் கல்வி இயக்ககம், சென்னை, 1978.

காளிதாசர், (வே. வேங்கட ராகவாச்சாரியார் உரை) *குமாரசம்பவம்,* தி லிட்டில் பிளவர் கம்பெனி, சென்னை, 1982.

செகத்ரட்சகன், (உ.ஆ.), *நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்,* ஆழ்வார்கள் ஆய்வு மையம், சென்னை, 1993.

தேவநாதாச்சாரியார், (மொ.ஆ.), *சிற்பரத்தினம்,* சரசுவதிமகால் வெளியீடு, தஞ்சை, 1961.

மயமுனிவர், ஆ., சுப்ரமணிய சாஸ்திரி கே.எஸ். *மயமதம் முதல்பாகம்,* சரசுவதி மகால் வெளியீடு, தஞ்சை, 1966.

*மயமதம் இரண்டாம்பாகம்,* சரசுவதி மகால் வெளியீடு, தஞ்சை, 1968.

# துணைமை ஆதாரங்கள்


ஆழ்வார் அய்யங்கார், தோ., *மன்னார்கோயில் மாண்பு,* கோபாலன் அச்சாபீஸ், அம்பாசமுத்திரம், 1959.

இந்திரா பார்த்தசாரதி, *தமிழ் இலக்கியங்களில் வைணவம்,* தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1992.

இராகவையங்கார். மு., *ஆழ்வார்கள் காலநிலை,* மணிவாசகர் நூலகம், மதுரை, 1981.

இராசமாணிக்கம். தி., *தென்னகக் குடைவரைக் கோயில்கள்,* தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1990.

*தமிழகக் குடைவரைக் கோயில்கள்,* தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1984.

இராமன், கே.வி., *பாண்டியர் வரலாறு,* தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1977.

இராமநுச தாதாச்சாரியார், *வரலாற்றில் பிறந்த வைணவம்,* சாரங்கபாணி சுவாமி தேவஸ்தானம், கும்பகோணம், 1973.

ஏகாம்பரநாதன், ஏ., *தமிழகச் சிற்ப, ஓவியக் கலைகள்,* திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1984.

கந்தசாமி, ப., *தமிழ்நாட்டின் தல வரலாறுகளும் பண்பாட்டுச் சின்னங்களும்,* பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1983.

கண்ணன், சு., *திருமலை தல வரலாறு,* கதிரொளி அச்சகம், மதுரை, 1992.

(ஆ.இ) *கள்ளழகர் தல வரலாறு,* அருள்மிகு கள்ளழகர் திருக்கோயில், அழகர்கோயில்.

கருணானந்தன், இரா.ப., காசிநாதன். (தொ.ஆ.,) *இராமலிங்க விலாசம் இராமாயண ஓவியக் குறிப்புகள்,* தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை, 1990.

கிருஷ்ணன். எஸ்., *ஆழ்வார்திருநகரி ஸ்ரீஆதிநாதர் ஆழ்வார் கோயில் வரலாறு,* தேவஸ்தான வெளியீடு.

கோயில் நிர்வாகிகள், *மதுரை அருள்மிகு கூடலழகர் திருக்கோயில் வரலாறு,* அருள்மிகுகூடலழகர்திருக்கோயில் மதுரை, 1994.

சதாசிவ பண்டாரத்தார், தி.வை., *பாண்டியர் வரலாறு*, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1977.

சிவராமமூர்த்தி, க., *இந்திய ஓவியம்*, நேஷனல் புக் டிரஸ்ட், சென்னை, 1979.

சுந்தரப்பாப்பா. நா., *ஆண்டாள் பாடல்களும் வழிபாடும்*, அரசு பதிப்பகம், திண்டுக்கல், 1990.

சுப்புரெட்டியார், ந., *பாண்டிய நாட்டுத் திருப்பதிகள்*, எஸ்.ஆர். சுப்ரமணிய பிள்ளை மணிவிழா வெளியீடு, சென்னை, 1977.

சுயம்பு, பெ., *கடவுள் உருவங்கள்*, செந்தில் பதிப்பகம், திருச்செந்தூர்.

செந்தில் குமரன். மா., சந்திரவாணன். சொ., *சிதம்பரனார் மாவட்டம்–ஓர் ஆய்வு*, தொல்பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகம், மதுரை, 1986.

சேதுராமன், என்., *பாண்டியர் வரலாறு*, (கி.பி. 550–1371), கும்பகோணம், 1989.

தாதாச்சாரியார், என்.எஸ்., *திருத்தங்கல் தல வரலாறு*, திருத்தங்கல், 1975.

(ஆ.இ) *நவதிருப்பதிகளும் ஆழ்வார்களின் வரலாறும்*, ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை, 1993.

நாகசாமி, இரா., *ஓவியப்பாவை*, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை, 1979.

*கல்லும் சொல்லும்*, சேகர் பதிப்பகம், சென்னை, 1977.

*மாமல்லை*, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1980.

நாகசாமி, இரா. சுந்தரமூர்த்தி, *தமிழகக் கோயிற்கலைகள்*, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1963.

நீலகண்டசாஸ்திரி, கே.ஏ., பெருமாள் முதலியார், மு.ரா., (மொ.ஆ), *தென்னிந்திய வரலாறு*, பாகம் – 2, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1979.

பாலசுப்ரமணியம், எஸ்.ஆர்., *சோழர் கலைப்பாணி*, பாரி நிலையம், சென்னை, 1966.

பாலசுப்ரமணியம் குடவாயில் *சோழமண்டலத்து வரலாற்று நாயகர்களின் சிற்பங்களும் ஓவியங்களும்*, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987.

பெருமாள் முதலியார், மு.ரா., (மொ.ஆ.), *தென்னிந்திய வரலாறு,* பாகம் 2, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1979.

முத்து வெங்கடேசன், *அருள்மிகு சத்தியமூர்த்திப் பெருமாள்,* திருமெய்யம்.

வெங்கடராமன். ஆர்., *இந்தியக் கோயில் கட்டிடக் கலை வரலாறு,* என்னெஸ் பப்ளிகேசன்ஸ், மதுரை, 1983.

வேங்கடராமன். கு., *அரையர் சேவை.* தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1985.

வேங்கடசாமி, சீனி., *தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்,* பாரி நிலையம், சென்னை, 1969.

வேதாச்சலம், வெ., *பாண்டியநாட்டில் வாணாதிராயர்கள்,* தொல்பொருள் தொழில்நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகம், மதுரை, 1987.

வைத்தியலிங்கன்,செ., *தமிழ்ப் பண்பாட்டு வரலாறு,* அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடு, சிதம்பரம், 1991.

(ஆ.இ.,) *108 வைஷ்ணவ திவ்ய தேச வைபவமும் புராண அபிமான ஸ்தலங்களும்,* தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை, 1992.

மணிவண்ணன், லோ., *ஆய்வுச் சிந்தனைகள் மதுரை கூடலழகர் கோயில் ஓவியங்கள்,* (கட்டுரை), ஐந்தமிழ் ஆய்வாளர் மன்றம், மதுரை, 1995.

(ஆ.கு.), *நாவாவின் ஆராய்ச்சி,* 1991 (காலாண்டு ஆய்விதழ்) தெருக்கூத்து ஆடை அணிகலன் (கட்டுரை), ஆறு. இராமநாதன்.

## ஆய்வேடுகள்

இரங்கம்மாள். இரா., *ஸ்ரீவில்லிபுத்தூர் வடபெருங்கோயிலும் ஆண்டாள் கோயிலும்–ஓர் ஆய்வு,* மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1986. (வெளியிடப்படாத ஆய்வேடு)

இரத்னமாலா. ஆர்., *திருத்தங்கல் நின்ற நாராயணப் பெருமாள் கோயிலும் அதனை ஒட்டிய மூன்று கோயில்களும் – ஓர் ஆய்வு ,* மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1987. (வெளியிடப்படாத ஆய்வேடு)

# ஆங்கில நூல்கள்


Acharaya, P.K., — **An Encyclopaedia of Hindu Architecture.** Manasara Series, Vol. VII, Oriental Reprint, 1981.

**A Dictionary of Hindu Architecture,** London, 1927.

Agarwala, V.S., — **The Heritage of Indian Art,** Government of India, New Delhi.

Aravamutham, T.G., — **Portrait Sculpture in South India,** London, 1931.

Banerjee, P., — **Rama in Indian Literature Art & Thought,** Vol.II, Sandeep Prakashan, Delhi. 1986.

Banerjee, J.N., — **Development of Hindu Iconography,** Calcutta, 1956.

Bhandarkar, R.G., — **Vaishnavism, Saivism and minor religious systems.** Bhandarkar Oriental Research Institute, Poona, 1982.

Caldwell, R., — **A History of Tirunelvely,** Asian Educational Services, New Delhi, 1982.

Chempakalakshmi, R., — **Vaishnava Iconography in Tamil Country,** Orient Longman, New Delhi, 1981.

Coomaraswamy, A.K., — **History of Indian and Indonestian Art,** Munshiram Manoharlal Publishers, New Delhi, 1972.

Devakunjari, D., — **Madurai Through the ages,** Society for Archaeological Historical and Epigraphical Research, Madras, 1979.

Edith Thomory, — **History of Fine Arts in India and the West,** Orient Longman, Madras, 1989.

Gopinatha Rao, T.A., — **Elements of Hindu Iconography,** Vol. I, Part I and II, Vol. II, Part I and II, Indological Book House, Varanasi, 1971.

Harle., J.C., — **The Art and Architecture of Indian Sub Continent,** Penguin Books, 1990.

Havell, E.B., — **The Art Heritage of India,** Taraporvala, Bombay, 1964.

Jagadeedsan, N., — **History of Sri Vaishnavism in the Tamil Country,** Koodal Publishers, Madurai, 1977.

Jagadishayyar, P.V., — **South Indian Shrines,** Asian educational Services, New Delhi, 1982.

James Fergusson, — **History of Indian and Eastern Architecture,** Vol. I and II, Munshiram Manoharlal Publishers, New Delihi, 1972.

Jeyachandrun, A.V., — **Madurai Temple Complex,** Madurai Kamaraj University, Madurai, 1985.

Jayantiaka Kala , — **Epic Scenes in Indian Plastic Art,** Abinav Publications, New Delhi, 1988.

Joanna, J., Williams (ed.), **Kala Darsana,** The American Institute of Indian Studies, New Delhi, 1981.

Jouveau Dubreuil, G., **Dravidian Architecutre,** N.P., Madras, 1917.

Krishna Chaitanya, **A History of Indian painting Manuscript,** Muhul and Deccani Traditions, Abhinav Publications, New Delhi, 1979.

Krishna Sastri, H., **South Indian Images of Gods and Goddesses,** Asian Educational Services, New Delhi, 1995.

Krishnaswamy, A., **Tamil Country under Vijayanagar,** Annamalai Nagar, 1964.

Ludwig Bhuchhofer, **Early Indian Sculpture,** Vol. I, Munshiram Manoharlal Publishers, New Delhi, 1973.

Maity, S.K., **Masterpieces of Pallava Art,** Taraporvala, Bombay, 1982.

Meister, M.W., and Dhaky, M.A., (eds.,), **Encyclopaedia of Indian Temple Architecture, South India, Lower Dravidadesa,** Oxford University Press, Delhi, 1983.

Michell, George, **The Hindu Temple,** B.I., Publication, New Delhi, 1977.

Mulkaraj Anand, **The Hindu View of Art,** Bombay, 1952.

Munshi, K.M., **Saga of Indian Sculpture,** Barathiya Vidhya Bhavan, Bombay, 1957.

Nagaswamy. R., **Some Contributions of the Pandyas to South Indian Art** in Artibus Asiae, XXVII 3, 1965.

**The Art of Tamilnadu.** The State Department of Archaeology, Madras, 1972.

Nagaswamy, R., Ramaswamy, N.S., **Ramanathapuram - An Archaeological Guide,** The State Department of Archaeology, Madras, 1979.

Nandita Krishna, **The Art of Iconography of Vishnu - Narayana,** Taraporvala, Bombay, 1980.

Nilkanta Sastri, K.A, **The Colas,** University of Madras, Madras, 1984.

Nirmala Kumari, Y., **Social Life as Reflected in Sculptures and Paintings of Later Vijayanagara Period (A.D. 1500-1650),** (with special Reference Andhra), Hyderabad, 1994.

Percy Brown, **Indian Architecture,** Vol. I., D.B., Taraporvala Sons & Co., Bombay, n.d.,

Prakash, Vidya, **Khajuraho,** D.B. Taraporevala sons, Bombay, 1967.

Pramod Chandra (ed)., **Studies in Indian Temple Architecture,** New Delhi, 1975.

Raman, K.V., **Sri Varadharaja Swami Temple - Kanci,** Abhinav Publications, New Delhi, 1975.

**Some Aspects of Pandyan History in the light of recent discoveries,** University of Madras, Madras, 1972.

Rao Ramachandra, **Art and Architecture of Indian Temples,** Vol.I, Kalpatharu Research Acadamy, Bangalore. 1993.

Ratan Parimoo., **Sculptures of Sesasayi Vishnu,** Maharaja Sayaji Rao, University of Baroda, 1983.

Rowland, B., **The Art and Architecture of India,** Pelican Books, 1967.

Saletore, R.N., **Vijayanagara art,** Sundeep Prakashan, Delhi, 1982.

Saraswathi, S.K., **A Survey of Indian Sculpture,** Calcutta, 1951.

Sathianathaiar, R., **History of the Nayaks of Madurai,** University of Madras, Madras, 1980.

Sethuraman, G., **Facets of Indian Art and Culture,** J.J. Publication, Madurai, 1995.

Smith, V.A., **A History of Fine Arts in Indian and Ceylon,** Taraporvala Bombay, 1962.

Sivaramamurthi, C., **Indian Sculpture,** Allied Publishers, New Delhi, 1961.

**Kalugumalai and early Pandyan Rockcut shrines.** N.M., Tripati Private Ltd., Bombay, 1961.

**The Chola Temples,** Archaeological Survey of India, New Delhi, 1987.

**South Indian Paintings,** Delhi, 1968.

**South Indian Bronzes,** New Delhi, 1963.

Soundara Rajan, K.V., **The Art of South India,Tamilnadu and Kerala,** Sundeep Prakashan, Delhi, 1978.

**Glimpses of Indian Culture,** Vol. I and II, Sundeep Prakashan Delhi, 1980.

Srinivasan, K.R., **Cave Temples of the Pallavas,** Archaeological Survey of India, New Delhi, 1964.

**Temple's of South India,** National Book Trust, New Delhi. 1972.

Srinivasan, P.R., **The Indian Temple Art and Architecture,** University of Mysore, 1982.

Stella Kramrisch, **The Hindu Temple,** Vol I and II, University of Calcutta, 1946.

**A Survey of Painting in the Deccan,** Oriental Reprint Delhi, 1983.

**Art of India,** London, 1954.

Stutley, Margret, J., **An Illustrated Dictionary of Hindu Iconography,** London and Thenley, 1977.

Suresh Pillai, B., **Introduction to the Study of Temple Art,** Equator and Meridian, Thanjavur, 1976.

Tewari, S.P., **Hindu Iconography,** Agam Kala Prakashan, New Delhi, 1979.

Vidhya Dehejia, **Namakkal Caves,** Tamil Nadu State Department of Archaeology, Madras, 1969.

Wilkins, W.J., **Hindu Mythology,** Indological Book House, Varanasi, 1972.

Zimmer, H., **Myths and Symbols in Indian Art and Civilization,** Pantheon Books, New York, 1955.

**The Art of Indian Asia**, New York, 1955.

## பேட்டிகள்

1. **கணேசபட்டர்,**
   மீனாட்சியம்மன் திருக்கோயில் அர்ச்சகர்,
   நாள் : **10.11.93.**

2. **சுந்தரசீனிவாசன்,**
   கூடலழகர் கோயில் அர்ச்சகர்,
   நாள் : **10.10.94.**

3. டாக்டர் ஆர். வெங்கட்ராமன்,
   பேராசிரியர்,
   நாள் : **2.1.95, 28.11.95.**

# கலைச் சொல் விளக்கம்

1. **அதிட்டானம்** - விமானத்தின் பீடம். இது உபானம், ஜகதி, குமுதம், கண்டம், பட்டி முதலிய உறுப்புக்களைக் கொண்டிருக்கும்.
2. **அரைத்தூண்** - விமானச் சுவர்ப்பகுதியில் வைக்கப் பட்டுள்ள தூண்கள் (பாதி மட்டுமே வெளி தெரிவது போல் அமைந்துள்ளதால் இப்பெயர்).
3. **அஷ்டாங்க விமானம்** - எட்டு அங்கங்களைக் கொண்ட விமானம், அதிட்டானம், பித்தி (சுவர்), பிரஸ்தரம் (கூரை), கிரீவம் (கழுத்து), சிகரம், ஸ்தூபி (கலசம்) எனும் ஆறு அங்கங்களுடன் மேலும் இரண்டு கருவறைகள் ஒன்றன் மேல் ஒன்றாகக் கொண்டு விளங்குவது.
4 **இடைநாழி** - கருவறைக்கும் அர்த்தமண்டபத்திற்கும் இடையேயான இணைப்புப்பகுதி.
5. **இரட்டைக் கருவறை** - எதிரெதிரே இரண்டு கருவறைகளை அமைப்பது. பாண்டிய நாட்டுக்குடை வரைகளில் இத்தகு அமைப்பு காணப் படுகிறது. பிற்காலத்தில் கட்டுமானக் கோயில்களிலும் இவ் அமைப்பு பின்பற்றப் பட்டுள்ளது.
6. **உத்திரக்கட்டை** - சுவருக்கும் கூரைக்கும் இடையில் வைக்கப்பெறும் கற்பலகை.
7. **உபபீடம்** - அதிட்டானத்திற்குக் கீழ் இடம்பெறுவது. இது விமானத்தின் கம்பீரத்திற்காகவும், அழகிற்காகவும் அமைக்கப்படுவது.
8. **உபானம்** - அதிட்டான உறுப்புகளில் முதல் அமைப்பு, விமானத்தின் உறுதிக்காக அமைக்கப்படும்.
9. **எண்பட்டை** - சிகரம் மற்றும் தூண் ஆகியன எண்பட்டை அமைப்பில் இடம்பெறும்.
10. **ஏகதள விமானம்** - ஒரே, கீழ்த்தளத்தை மட்டும் கொண்டது.
11. **கட்டுமானக் கோயில்** - குடைவரைக் காலத்திற்குப் பின் தோன்றியது. கற்களால் கட்டப்படுவதால் இப்பெயர் பெற்றது.
12. **கண்டச் சிற்பங்கள்** - அதிட்டானத்தில் உள்ள கண்டப்பகுதியில் (கலபாதா) இடம்பெறும் சிறுவடிவிலான சிற்பங்கள்.
13. **கண்டம்** - அதிட்டான உறுப்புக்களில் ஒன்று.
14. **கபோதபந்த அதிட்டானம்** - அதிட்டானமானது கபோதத்தால் கட்டப் படுவது.

| | | | |
|---|---|---|---|
| 15. | கபோதம் | - | அதிட்டானத்திலும், பிரஸ்தரத்திலும் இடம் பெறும் உறுப்பு. இது மழை நீர் சுவர்ப்பகுதியில் விழாது பாதுகாப்பதற்காக அமைக்கப்படுவது. |
| 16. | கலசம் | - | சிகரத்தின் மேல் இடம்பெறுவது. இது மூடி எனப்படும். கோயில் கும்பாபிஷேகத்தின் போது இக்கலசத்தின் வழியாக புனித நீரை ஊற்றுவர். |
| 17. | கர்ண கூடு | - | விமான மேல்தளத்தில் ஓரங்களில் அமைக்கப் பெற்றிருக்கும் சிறு கோயில் போன்ற அமைப்பு |
| 18. | கர்ணம் | - | விமானத்தின் சுவரின் ஓரப்பகுதியில் அமையும் பகுதி. |
| 19. | கஜபிருஷ்ட விமானம் | - | யானையின் பின்பகுதி போன்ற அமைப்புடன் அமையும் விமானம். |
| 20 | குடம் | - | தூண் பகுதியில் தாடிக்கு மேல் இடம் பெறும் உறுப்பு. |
| 21. | குடைவரைக் கோயில் | - | பாறையைக் குடைந்து அமைக்கப்படும் கோயில். |
| 22. | கும்ப பஞ்சரம் | - | சுவர்ப்பகுதியில் இடம்பெறும் அலங்கார வேலைப்பாடு கலசத்திலிருந்து தூண் மேலெழுவதால் இப்பெயர். |
| 23. | கூட விமானம் | - | சதுரமான அடித்தளமுள்ள விமானம். |
| 24. | கொடிக்கருக்கு | - | கொடி போன்ற வேலைபாடு. இது மாலகுதானகத்தில் இடம்பெறும். |
| 25. | கோட்டபஞ்சரம் | - | சுவர்ப்பகுதியில் தேவ கோட்டத்தை அடுத்து இடம்பெறும் அலங்கார அமைப்பு. இது அமைப்பில் தேவ கோட்டத்தை ஒத்துக் காணப்படும். |
| 26. | கோபுரம் | - | கோயிலின் நுழைவாயில். இது பல அடுக்குகளைக் கொண்டிருக்கும். |
| 27. | சாலவிமானம் | - | நீள் சதுர அமைப்புடைய விமானம். இதன் கூரைப்பகுதி வண்டிக்கூடுபோல் அமைந் திருக்கும். இவ்விமானம் திருமாலின் சயன கோலத்திற்கு ஏற்ற அமைப்பாகும். |
| 28. | சாளரம் | - | விமானச் சுவர்ப் பகுதியில் அமையும் ஓர் அலங்காரப் பகுதி. |
| 29. | சிகரம் | - | விமானத்தின் தலைப்பகுதி இதுவாகும். சிகரம் வட்டம், எண்பட்டை, சதுரம் என்ற வடிவில் அமையும். |
| 30. | சுவர் | - | அதிட்டானத்தின் மேல் அமையும் பகுதி இது. இதில்தான் தேவகோட்டம், கோட்ட பஞ்சரம், கும்பபஞ்சரம் முதலான அலங்கார உறுப்புக்கள் இடம்பெறும். |

31. தாடி - தூணின் கலசத்திற்கு மேல் இடம்பெறும் உறுப்பு.

32. திக்கு பாலகர் - திசைக் காவலர், எட்டுதிசைகளுக்கும் எட்டு திசைக்காவலர்கள் உண்டு.

33. திராவிட பாணி - எட்டுப்பட்டையுடைய சிகரத்தைக் கொண்டது.

34. திரிதள விமானம் - மூன்று தளங்களையுடைய விமான அமைப்பு.

35. தூவாரபாலகர் - வாயிற் காப்போர்.

36. துவிதள விமானம் - கீழ்த்தளமும் அதன் மேல் மற்றுமொரு தளமும் கொண்ட இருதள விமானம்

37. தேவகோட்டம் - விமானச் சுவற்றில் தெய்வ உருவங்கள் வைப்பதற்காக அமைக்கப்படும் மாடக்குழி.

38. தோரணம் - விமானச் சுவற்றில் உள்ள மாடக்குழியின் மேல் அமைக்கப்பட்டிருக்கும் அலங்கார வளைவு.

39 நாகபந்தம் - தூண்களின் சதுரமான அடிப்பகுதிக்கும் மேல் படமெடுத்த நாகம் போன்று அமைக்கப்பட்டிருக்கும் அலங்கார வேலைப்பாடு.

40. நாகரபாணி - சதுர வடிவான சிகரத்தைக் கொண்ட விமான அமைப்பு.

41. நாசி - சிகரத்தைச் சுற்றி அமைக்கப்படும் குதிரை லாடம் போன்ற அலங்காரப் பகுதி.

42. பட்டி - அதிட்டானத்தின் ஒரு அங்கமாகும். இது இரண்டு கண்டங்களுக்கும் இடைப்பட்ட ஒரு கற்சட்டம். உண்மையில் அதிட்டானம் இப்பகுதியோடு முடிவடையும்.

43. பத்மவரி - அதிட்டானத்தில் ஓர் அங்கமாக தாமரை இதழ்கள் அமைக்கப்பட்டிருக்கும். இது ஜகதியுடன் இணைந்திருக்கும்.

44. பத்ரம் - இது விமானச் சுவற்றின் நடுப்பகுதியாகும். இங்குதான் மாடக்குழியும் அமைந்திருக்கும்.

45. பலகை - அரைத்தூணின் மேற்பகுதியாகும்.

46. பிரதி கர்ணம் - சுவற்றின் ஓரப்பகுதியில் இடம்பெறும் கர்ணத்தைத் தவிர அடுத்து வரும் கர்ணம் பிரதி கர்ணம் எனப்படும்.

47. பிரதி பத்ரம் - சுவரின் நடுப்பகுதியில் வரும் பத்ரம் தவிர அடுத்து வரும் பத்ரம் பிரதி பத்ரம் எனப்படும்.

48. **பிரதிபந்த அதிட்டானம்** - பாதபந்த அதிட்டான உறுப்புக்களை அப்படியே பெற்று அதில் தூண்களின் கால்ப்பகுதி காட்டப்படாது இருப்பின் அது பிரதிபந்த அதிட்டானம் எனப்படும்.

49. **பிரநாளம்** - கருவறையிலிருந்து நீராட்டு நீர் வெளிப்படும் பகுதி.

50. **பிரஸ்தரம்** - கூரையும் அதில் அமைக்கப்பட்டுள்ள அழகு வேலைப்பாடுகளும் சேர்ந்த பகுதி.

51. **பூதவரி** - கபோதத்தின் கீழ் அமைக்கப்படும் பூத கணங்களின் புடைப்புச் சிற்ப வரிசை.

52. **போதிகை** - தூணின் தலைப்பகுதி. பலகைக்கு மேலே வீரகண்டமும் அதற்குமேல் போதிகையும் இடம் பெறும்.

53. **மாலஸ்தானம்** - தூணில் அமைக்கப்படும் பூச்சரம் போன்ற வேலைப்பாடு.

54. **வர்க்கபேத அதிட்டானம்** - கர்ணப்பகுதியிலும், பத்ரப் பகுதியிலும் அதிட்டான உறுப்புக்கள் ஒரே மாதிரியாக அமையாது மாறி மாறி அமைவது வர்க்கபேத அதிட்டானம் எனப்படும்.

55. **விமானம்** - கருவறையின் பீடத்திலிருந்து ஸ்தூபம் வரையிலான மொத்தப் பகுதியே விமானம் எனப்படும்

56. **வீரகண்டம்** - தூணின் உச்சியில் பலகைக்கும், போதிகைக்கும் இடையில் அமைக்கப்படும் ஆப்புப் போன்றபகுதி.

57. **வெட்டுமானக் கோயில்** - பாறையை வெட்டிக் கோயில் அமைப்பது. உதாரணமாக கழுகுமலை வெட்டுவான் கோயில்.

58. **வேதி** - அதிட்டானத்தின் மேல் அரைத்தூணின் துவக்கத்தில் அமைக்கப்பட்டிருக்கும் பலகை.

59 **வேஷரவிமானம்** - வட்டவடிவமான சிகர அமைப்பினை யுடைய விமானம்.

60. **யாளிவரி** - பிரஸ்தரத்தில் கபோதத்திற்கு மேல் அமைக்கப்பட்டுள்ள யாளிகளின் புடைப்புச் சிற்பவரிசை. சில கோயில்களில் அதிட்டானத்தில் ஒரு பகுதியாக யாளிவரி அமையும்.

61. **ஜகதி** - அதிட்டானத்தில் உபானத்திற்கும், குமுதத் திற்கும் இடைப்பட்ட உயரமான கற்பலகை.

62. **வறாரப்பள்ளம் அகாரை** (அ)- விமானத்தில் சுவரின் மடிப்புகளில் காணப்படும் பள்ளப்பகுதி.

63. **ஷடங்க விமானம்** - ஒரு விமானம் அதிட்டானம், பித்தி, பிரஸ்தரம், கிரீவம், சிகரம், ஸ்தூபம் என்ற ஆறு அங்களைக் கொண்டிருந்தால் ஷடங்க விமானம் என்று அழைக்கப்படும்.



1. மது கைடபர் வதம்,
அழகியமெய்யன் குடைவரைக்கோயில், திருமெய்யம்.

2. பள்ளிகொண்ட பெருமாள்,
குடைவரைக்கோயில். திருத்தங்கல்



3. தேவகோட்டம், அரவிந்தலோசனன் கோயில், தொலைவில்லிமங்கலம்.

4. கும்பபஞ்சரம், கூடலழகர் கோயில், மதுரை.



5. அரைத்தூண், போதிகை
வைத்தமாநிதிப்பெருமாள் கோயில், திருக்கோளூர்.



6. வர்க்கபேத அதிட்டானம், ஆண்டாள்கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர்.

7. விமானம், கூடலழகர் கோயில், மதுரை.



8. கோபுரம், வைகுண்டநாதன் கோயில், ஸ்ரீவைகுண்டம்.



11. இராமன் அனுமனைத் தழுவிய நிலை,
வைகுண்டநாதன் கோயில், ஸ்ரீவைகுண்டம்.

12. விறலி,
ஆண்டாள்கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர்.



17. மகிஷாசுரமர்த்தினி,
நின்ற நம்பிகோயில், திருக்குறுங்குடி

18. கஜேந்திரமோட்சம்,
நின்ற நம்பிகோயில், திருக்குறுங்குடி.

**19. அக்னிதேவர் ஓவியம்,**
**கூடலழகர்கோயில், மதுரை.**





**20. திக்குபாலகர் ஓவியம்,**
**உரகமெல்லணையான் கோயில், திருக்கோட்டியூர்.**